தாயுமானவர் இயற்றிய

# பரிபூரணானந்தம்

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்களின்
விரிவுரையுடன்

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
திருப்பராய்த்துறை-639 115
திருச்சி ஜில்லா
1977

தாயுமானவர் இயற்றிய

# பரிபூரணனந்தம்

## விரிவுரையுடன்

வாசா கயிங்கரியம் அன்றிஒரு சாதனம்
மனோவாயு நிற்கும்வண்ணம்
வாலாய மாகவும் பழகியறி யேன்துறவு
மார்க்கத்தின் இச்சைபோல

நேசானு சாரியாய் விவகரிப் பேன்அந்த
நினைவையும் மறந்தபோது
நித்திரைகொள்வேன் தேகம் நீங்கும் என எண்ணிலோ
நெஞ்சம் துடித்து அயருவேன்

பேசாத ஆனந்தநிட்டைக்கும் அறிவு இலாப்
பேதைக்கும் வெகுதூரமே
பேய்க்குணம் அறிந்துஇந்த நாய்க்கும்ஒரு வழிபெரிய
பேரின்ப நிட்டைஅருள்வாய்

பாசா டவிக்குளே செல்லாத அவர்க்குஅருள்
பழுத்தொழுகு தேவதருவே
பார்க்குமிடம் எங்கும்ஒரு நீக்கமற நிறைகின்ற
பரிபூரண ஆனந்தமே.

இப்பாடலை ஒரு தடவை படித்துப்பார்த்தால் போதாது; பலதடவை படித்தாலும் போதாது; மனப்பாடம் பண்ணி விட்டாலும் போதாது. சாதனத்துக்குரிய கருத்துக்களைக்

கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என்னும் கோட்பாடு உண்டு. இங்கே ஓதுதல், சிந்தித்தல் என்னும் கோட்பாடாக அது வடிவெடுக்க வேண்டும். ஒவ்வொரு கருத்தையும் தனித் தனியாகச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். சிந்திக்குமளவு அக்கருத்து நமது வாழ்க்கைக்கு விளக்கம் கொடுக்கும். நமது மனது பரிபாகம் அடைந்து வரும் வேளையில் ஒரே கருத்தில் புதுமைகள் பல தென்படும். முன்பு பொருள் படுத்தியதற்கும், பின்பு பொருள் படுத்துதற்கும் பேதம் புலப் படும். தெவிட்டாத சுவை அதன்கண் பொலிவது விளங்கும். நம்மை நாம் துருவி ஆராய்தற்கு இது உற்ற கருவியாகும். மனம் தெளிதற்கு இதுவே உற்ற துணை. மனம் தெளியுங் கால் மனத்தகத்து தெய்வமாகிய கற்பக விருக்ஷம் இருப்பது நமது சுவானுபவம் ஆகும்.

## ஒரு கதை

காட்டுவழியே ஒரு மனிதன் போய்க்கொண்டிருந்தான். களைத்துப்போய் அவன் ஓர் மரத்தடியில் உட்கார்ந்தான். அது கற்பகவிருக்ஷம் என்பது அவனுக்குத் தெரியவில்லை. தாகத்தைத் தணித்துக் கொள்ளுவதற்குத் தனக்கு நல்ல நீர் அகப்பட்டால் இனியதாயிருக்குமென்று எண்ணினன். அப் படியே நீரும் வந்துவிட்டது. பசியைத் தீர்த்துக்கொள்ளு தற்கு விதவிதமான உணவுவகைகள் அகப்பட்டால் சுகமா யிருக்குமென்று சிந்தித்தான். எண்ணியபடியே பேருண்டி யும் பக்கத்தில் வந்து விட்டது. உண்டு களைப்பாறியவனுக்கு இன்னும் ஓர் எண்ணம் வந்தது. தனக்குப் பணிவிடை பண்ணுவதற்கு தேவலோகத்து மங்கையர் போன்று பணி விடைப் பெண்கள் சிலர் வந்தால் நன்றாயிருக்குமென்று எண்ணினன். அந்தோ! அவன் எண்ணியபடியே பணிப்

பெண்களும் வந்துவிட்டார்கள். அவன் ஏவலுக்கு அடி பணிந்து பணிவிடையும் செய்தார்கள். தனக்கு மாளிகை யொன்று அமைந்துவிட்டால் ஒரு குறையும் இராதென்று கருதினன். கருதியபடியே மாளிகையும் வந்துவிட்டது. அரசன்போன்ற தனக்கு மாந்தரெல்லாம் அடிபணிந்து நடந்து கொள்ளவேண்டுமென்று எண்ணினன். எண்ணியபடி தன்னை அடிபணிந்து உலகமக்கள் நடந்துகொள்வதையும் கண்டான். அடர்ந்த காடு ஒன்றினுள் சென்று பார்க்கவேண்டுமென்று மேலும் அவன் நினைத்தான். நினைத்தபடி அடவி ஒன்று காட்சி கொடுத்தது. எங்குப் பார்த்தாலும் செங்குத்தாக வளர்ந்த மரங்கள், செடிகள், கொடிகள். பார்ப்பதற்குக் காட்சியும் பயங்கரமாயிருந்தது. புலியொன்றுவந்து என்னைத் தாக்கி ஞல் என்செய்வது என்று அஞ்சினன். புலியும் தோன்றி அவனைத் தாக்கியது.

எண்ணியதை எண்ணியாங்கு அடையப் பெற்றவன் தான் அமர்ந்திருந்தது ஒரு கற்பக விருக்ஷத்தின் அடியில் என் பதை அவன் தெரிந்துகொள்ளவில்லை. கற்பக விருக்ஷம் என் பதும் தேவதரு என்பதும் ஒன்றே. இம்மரத்தைப்பற்றிப் புராணங்களில் படிக்கிரேம். அது தேவலோகத்தில் இருக்கிற தென்றும் கேள்விப்படுகிரேம். அதன் பெருமையை இப்படி உருவகப்படுத்திப் பெரியோர்கள் பகர்ந்திருக்கின்ருர்கள். தேவதரு என்பது வேறு ஒன்றும் அல்ல. தெய்வத்துக்கே அமைந்த பெயர்களுள் அது ஒன்று. அப்படியானல் தேவ தரு ஆகிய தெய்வம் எங்கே இருக்கிறது, அதனிடத்திருந்து பெற வேண்டியதையெல்லாம் எப்படிப் பெறலாம் என்னும் கேள்வி எழுகிறது. இக்கேள்விக்குத் தக்க விடையொன்றை தாயுமானவர் பகர்கின்ருர். அவர் கருத்தைச் சிறிது விரி வாக ஆராய்ந்து பார்ப்போம்.

**தாயுமானவர் கருத்து**

தெய்வத்தை தேவதரு என்று அவர் அழைக்கின்றார். அது எல்லார்க்கும் பொதுவானதே. எல்லார் உள்ளத்திலும் அது குடிகொண்டிருக்கிறது. உள்ளத்தில் இருப்பதுமட்டு மல்ல, புறத்திலும் அப்பொருள் ஒன்றுதான் நிறைந்திருக் கிறது. அகம் புறம் என்று அதற்கு இடையீடு கிடையாது. நம் அறிவுக்கு எட்டுகிற அனைத்திலும் அது இருக்கிறது; அனைத்துமாய் அது இருக்கிறது. நிறைபொருளாயும் இருப்பது அதுவே. வெவ்வேறு நிலைகளில் இருப்பினும் அந்தந்த நிலையில் ஆனந்தத்தை விளக்குவதும் அதுவே. நீக்கமற நிறைந்துள்ள அத்தகைய பொருளை நாம் உணரா திருப்பதற்குக் காரணம் நம் மனத்தகத்துப் படிந்துள்ள அழுக்கே. இந்த அழுக்கை நீக்குமளவு அப்பொருளை நாம் உணரவும் முடியும், கற்பக விருக்ஷமாக அதைப் பயன்படுத் திக்கொள்ளவும் முடியும்.

அழுக்குப் படிந்துள்ள நிலையிலும் ஓரளவு நாம் அதை உணர்கின்றோம். நாம் அடையப்பெற்றுள்ளபேறு அனைத் துக்கும் அப்பெரிய பொருளே துணையாய் இருந்து வந்திருக் கிறது. இதுபரியந்தம் நாம் அடைந்துள்ள பெருமைகள், சிறு மைகள் ஆகிய யாவும் அதனிடத்திருந்தே வந்தவைகளாம். புலி வந்துவிடும் என்று எண்ணியவனுக்கு அப்படியே ஆய் விட்டது. செல்வமும் சுகமும் வேண்டுமென்று அம்மனிதன் எண்ணியபொழுது அவ்வெண்ணம் நிறைவேறியது. இங் ஙனம் எல்லா உயிர்களும் தம் எண்ணங்களை நிறைவேற்றி வருகின்றன. சில உயிர்களுக்கு எண்ணம் விரைவில் நிறை வேறுகிறது. வேறு சில உயிர்களுக்கு எண்ணம் நெடுநாள் முயற்சிக்குப் பிறகு நிறைவேறுகிறது. விரைவில் ஆனாலும் சரி, நெடுநாளைக்குப் பிறகு ஆனாலும் சரி எண்ணிய எண்ணங்

கள் நிறைவேறுவது உறுதி. எண்ணியவை எண்ணியாங்கு நிறைவேறுவதாலேதான் உயிர்களெல்லாம் கற்பக விருக்ஷத் தடியே வளர்ந்து வருகின்றன என்று பகரவேண்டும்.

**விருக்ஷத்தின் பெருமையை உணர்பவர் யார் ?**

எல்லா உயிர்களும் கற்பக விருக்ஷத்தடியே இருக்கின் றன. சான்ருேர்களும் அதனடியில் இருக்கின்றனர். அதன் பெருமையைத் தெரிந்தவர்களே சான்ருேர். அதன் பெருமை யைத் தெரிந்தபின் புலி வந்துவிட்டாலோ என்ற அழிவுக் கேதுவான எண்ணங்களை எண்ணலாகாது. சுகபோகம் போன்ற தேய்வுக்கு ஏதுவான எண்ணங்களையும் எண்ண லாகாது. உள்ளத்தைத் தூயதாக்குதற்கு ஏதுவான நல் லெண்ணங்களையே எண்ணவேண்டும். பந்தபாசம் என்பது தான் அடவி அல்லது காடு. அச்சத்தை உண்டுபண்ணு வதும் பந்தபாசமே. உலகப் பற்றுடையார்க்குப் பயப்படும் தன்மை ஏராளமாய் உண்டு. பற்றற்ருர்க்கோ பயம் என் பது கிடையாது. பயப்படாதவர்களுக்குப் புலியைப்பற்றிய எண்ணம் வரவேண்டிய அவசியமும் இல்லை. எதற்கும் அஞ்சாத் தன்மை மனது தூயது ஆய்விட்டது என்பதை விளக்குகிறது. தூயமனது அருளுக்குப் பாத்திரமாகிறது. அதாவது தெய்வீக வல்லமை யாவும், தெய்வத்தின் திட்டம் அனைத்தும் தூயமனம் படைத்தவர் உள்ளத்தில் ஒளிர்கின் றன. தூயமனம் படைத்தவர் தெய்வத்துக்கு நல்ல கருவி ஆகின்றனர். தூயமனம் படைத்தவர் செயலும் தெய்வத் தின் செயலும் ஒன்றே. கற்பக விருக்ஷத்தின் பெருமை யெல்லாம் உணர்ந்து அவ்விருக்ஷத்தைத் தங்களுக்கு சொந்த மாக்கி அதனிடத்திருந்து விளைந்துவரும் தெய்விக அருளையே புசித்துப் பரமானந்தமடைந்தவர் ஆகின்றனர் அத்தகைய பெருமக்கள். அவர்போன்று ஆவது அறிவுபடைத்த மக்கள் எல்லார்க்கும் குறிக்கோள் ஆகிறது.

## சாதனம்

சாதனம் என்பதன் பொருள் பழக்கம். சாதனத்தால் எதையும் சாதிக்கலாம். இப்பொழுது நாம் அடைந்துள்ள நிலை சாதனத்தின் விளைவாக வந்துள்ளது. இனி, நாம் அடையப்போகும் நிலையும் சாதனத்தைப் பொறுத்தது. உலகக் காரியங்களைச் சாதிப்பதற்குச் சாதனம் வேண்டும். கடவுளை அடைதற்கும் சாதனம் வேண்டும். கடவுளைக் குறித்துச் செய்கின்ற சாதனங்கள் எல்லாம் மனதைத் தூய தாக்குதற்பொருட்டேயாம். சேற்றுநீர் தெளிந்த நீர் ஆவது போன்று மனதும் தெளிய வேண்டும். தெளிந்த நீர் அசை வற்றுத் தடாகத்தில் நிற்கும்பொழுது அதன் அடிப்பாகம் தெளிவுறத் தென்படுகிறது. ஆனால் சேறுபடிந்த நீரிலோ, அலை வீசும் நீரிலோ அடியிலுள்ள நிலம் தென்படாது. மனது தெளிந்து அசைவற்றிருக்கும்பொழுது மனதுக்கு ஆதாரமாயுள்ள பரம்பொருளின் சொரூபம் தோன்றுகிறது. கடவுளை அடைதல் என்பதன் பொருள் அதுவேயாம். ஆக, சாதனங்கள் எல்லாம் மனதைச் சுத்திசெய்தல் பொருட்டே யாம்.

## தொண்டின் சிறப்பு

கடவுளின் அருளைப் பெற்றவர்கள் எல்லாரும் தொண் டர் எனப்படுகின்றனர். அவர்கள் கடவுளுக்கே தொண்டு புரிந்து தொண்டர் ஆனார்கள். கைங்கரியம் என்பதும் தொண்டு புரிதல் என்பதும் ஒன்றே. சாதனங்களுள் கைங் கரியம் மிகமிகச் சிறந்ததாகிறது. குற்றேவல் புரிதல் என்று கைங்கரியம் பொருள்படுகிறது. குற்றேவல்புரிய எல்லார்க் கும் இயலும். அறிந்தோ அறியாமலோ எல்லாரும் கைங் கரியம் செய்துகொண்டிருக்கின்றனர். கைங்கரியத்தின் மூலமாகவே ஒருவர் வேறு ஒருவரோடு தொடர்பு வைக்கின்

ரூர். வாழ்க்கையில் பெறவேண்டிய பழக்கங்களுள் கைங் கரியம் முதன்மை பெறுகிறது. ஐந்து வயதுச் சிறுவன் அல்லது சிறுமி கைங்கரியத்தில் வாழ்க்கையைத் துவக்க முடியும். அன்னைக்குப் பணிவிடை செய்து பழகுதல் முதல் கைங்கரியமாகும். தாய்க்கும் சேய்க்கும் உள்ள இணக்கம் கைங்கரியத்தின் வாயிலாக நிலைநாட்டப்பெறுகிறது. சிறு வர்கள் உடல் வாழ்க்கை முற்றிலும் அவர்களுக்குச் சொந்த மாகிறது. தங்களுக்குச் சொந்தமாயுள்ள உடல் வாழ்க்கை யைத் தங்களுக்கென்றே வைத்துக்கொள்ளாது பணிவிடை யின் வாயிலாக பெற்றோர்க்கும் அவ்வுடல் வாழ்க்கை சமர்ப் பிக்கப்படுகிறது. தாய் தந்தையர்க்குப் பணிவிடை செய்து பழகிய பிறகு பாடம் புகட்டும் ஆசிரியர்க்கும் பணிவிடை செய்து பழகவேண்டும். அதன் பிறகு மற்றவர்களுக்கும் தொண்டு செய்து பழகுதல் நல்ல பழக்கமாகிறது. தொண்டு புரியத் தெரிந்துகொள்ளாதவர்கள் மேன்மக்கள் ஆக முடி யாது.

தொண்டுபுரியப் பழகியபின் அதை தெய்வத்துக் கென்றே ஒப்படைப்பவர் தெய்வத்தின் தொண்டர் ஆகின்ற னர். அப்படி தெய்வத்துக்குத் தொண்டர் ஆனவர் பெருமை அளப்பரியதாகும். கைங்கரியம் மூன்று பாங்குடையதாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. மனம், வாக்கு, காயம் ஆகிய திரி கரணங்களைக்கொண்டு மூன்றுவிதக் கைங்கரியங்கள் செய் யப்படுகின்றன. நான் தெய்வத்தின் தொண்டன், சமுதா யத்தின் தொண்டன் என்று ஆழ்ந்து எண்ணி, அந்த எண் ணத்தில் மாறுது நிலைபெற்றிருப்பது மனத்தால் செய்யும் கைங்கரியமாகும். காயத்தைக்கொண்டு முழு மனதுடன் உழைத்து இணக்கம் உண்டுபண்ணுவது காயத்தால் செய்யும் கைங்கரியமாகும். அதற்கு ஒப்ப வாயால் பேசு

வது வாசா கைங்கரியமாகும். இம்மூன்றனுள் மனோ கைங் கரியம் முதன்மை பெறுகிறது. காயத்தால் செய்யும் கைங் கரியம் அதற்கடுத்தபடி வருகிறது. பேச்சாக வடிவெடுப்பது மூன்றாவது ஸ்தானம் பெறுகிறது. பேச்சளவில் உள்ள கைங்கரியம் பலதடவைகளில் பாசாங்காகவோ, வெறும் பேச்சாகவோ போய்விடுவதுண்டு. ஆகையால் அது கடைப் பட்டது. இந்த வெறும் வாசா கைங்கரியத்தைத் தவிர உயர்ந்த கைங்கரியம் எதையும் தாம் சாதனமாகச் செய்ய வில்லை என்று தமது நிலையை வாசா கைங்கரியம் அன்றி என்னும் தொடரால் தாயுமானவர் உள்ளபடி படம் பிடித்துக் காட்டுகிறார்.

### சாதனத்தின் விளைவு

ஒருவன் நல்ல உணவை உண்டு அதைச் சமித்து வரு கிறான் என்பதை அவனுடைய உடல் கூற்றிலிருந்தே தெரிந்து கொள்ளலாம். திட்பமும், ஆரோக்கியமும் அவ னுடைய மேனியில் மிளிரும். அதே பாங்கில் சாதனத்தில் ஆழ்ந்து செல்லுகிறவனுக்கு அமையும் வாய்ப்பு எது என் னும் கேள்வி எழலாம். சாதனத்தில் முதிர்ந்து வருமளவு மனது அமைதி பெறுகிறது. மனது அமைதி பெற்றதின் அறிகுறி சுவாசத்தின் போக்கு வரவில் புலப்படுகிறது. ஏனென்றால் மனதுக்கும் வாயுவின் ஓட்டத்துக்கும்நெருங்கிய தொடர்வு உண்டு. மனோலயமும் சுவாசிக்கும் வாயுவின் ஒழுங்குப்பாடும் ஒன்றை ஒன்று சார்ந்திருக்கின்றன. ஒருவன் கோபித்துக்கொண்டால் மனது ஒருவித விகாரம் அடை கிறது. அத்தகைய மன மாறுதலுக்கு ஏற்ப மூச்சு உள்ளே போவதிலும் வெளியே வருவதிலும் ஒருவித மாறுதல் ஏற் படுகிறது. கோபித்துக்கொள்ளும் பொழுதெல்லாம் அதே மாறுதல் வந்தமைவதைக் காணலாம். பிறகு கோபித்துக்

கொள்ளுகின்ற எல்லா மனிதர்களேயும் ஆராய்ந்துபார்த்தால் மூச்சின் போக்குவரவு கோபத்தைக் காட்டும் பாங்குடையதாகத்தான் இருக்கிறது என்பது புலப்படும். மனதில் பொருமை தோன்றினல் பிராணனுடைய போக்குவரவு இன்னெரு வடிவு எடுக்கிறது. அவ்வடிவம் பொருமை மனநிலே அனைத்துக்கும் பொதுவானதாகிறது. இனி, மனது காம நோய்க்கு ஆளாகிறது.சுவாசத்தின் ஓட்டம் அதற்கேற்றவாறு மாறுகிறது. மற்றெரு வேளையில் மனதில் விசனம் வடிவெடுக்கிறது. விசனத்தின் வேகத்துக்கேற்ப வாயுவின் போக்குவரவும் மாறியமைகிறது. மனதின்கண் உண்டாகின்ற அச்சத்தையும் வாயுவானது விளக்கிவிடுகிறது. நல்ல விருத்திகளாகிய மகிழ்ச்சி, அன்பு, அனுதாபம், அமைதி முதலிய வடிவங்களே மனது எடுக்குமானல் அவைகளுக்கு ஏற்ப வாயுவின் போக்குவரத்திலே நல்ல ஒழுங்குப்பாடு உண்டாகிறது. வாயுவின் போக்குவரவை ஒழுங்குப்படுத்துகிற சாதனம் பிராணயாமம் என்னும் பெயர் பெறுகிறது. பலபேர் மனதை ஒழுங்குப்படுத்தாது வெறும் பிராணயாமத்தைச் செய்துவர முயலுகின்றனர். பிராணனேவிட சூக்ஷ்மமானது மனது. சூக்ஷ்ம வஸ்துவுக்கு ஸ்தூல வஸ்துவைவிட அதிக சக்தியுண்டு. சூக்ஷ்ம வஸ்துவும் ஸ்தூல வஸ்துவும் ஒன்ருேடொன்று முறையாக இணங்கி வேலே செய்யுமானல் நலன் உண்டாகும். இவைகளுக்கிடையே முரண்பாடு ஏற்பட்டால் சூக்ஷ்ம வஸ்து ஸ்தூல வஸ்துவைத் தாக்கிக் கேட்டை விளேவித்துவிடும். இதற்குச் சான்று ஒன்று எடுத்துக் கொள்வோம். நீராவி சூக்ஷ்மவஸ்து. யந்திரம் ஸ்தூல வஸ்து. சூக்ஷ்மமாயுள்ள ஆவி ஸ்தூலமாயுள்ள யந்திரத்தை இயக்குகிறது. ஆவியால் உந்தப்பெற்று யந்திரம் ஒன்று வேகமாக ஓடுகிறது. யந்திரத்தை நிறுத்த விரும்புகிற

யந்திரி முதலில் ஆவியை அடைக்கவேண்டும். பிறகு இயங்கு கிற சக்கரத்துக்கு முட்டுக்கட்டை போடவேண்டும். ஆவியை அடைக்காது சக்கரத்தை மட்டும் தடுக்க முயன்ருல் யந்திரத் துக்குப் பெருங்கேடு உண்டாகும். இத்தகைய குற்றத்தைப் பலபேர் பிராணுயாமத்தின் மூலமாகத் தங்களுக்குத் தாங் களே செய்துகொள்கின்றனர். மனது காமக்குரோதங்களில் வேண்டியவாறு போக அன்னவர் விட்டுவிடுகின்றனர். பிராணுயாமத்தில் கும்பகம் போன்ற முரட்டுத்தனமான சாதனங்களைச் செய்ய முற்படுகின்றனர். அதனுல் நரம்புத் தளர்ச்சியும் மூளையில் கோளாறும் சரீரத்தில் பலவிதமான நோய்களும் வர ஆரம்பித்துவிடுகின்றன.

வெறும் பிராணுயாமம் செய்வதற்கு மாருக மனதை ஒழுங்குப்படுத்தமுயன்ருல் வாயு தானேஒழுங்காய்விடுகிறது. வாயுவை ஒழுங்குபடுத்துதல் மூலம் மனது ஒழுங்காய்விடு கிறது என்று சொல்ல முடியாது. மனதை ஒழுங்குப்படுத் தாது பிராணுயாமப் பயிற்சி பண்ணுவது உயிருடைய துருத்தி ஊதுதற்கு ஒப்பாகும். நல்ல மனமுடையார்க்குப் பிராணுயாமம் இயல்பாகவே அமைந்து விடுகிறது என் பதை நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். மனது ஒழுங்கு ஆக ஆக வாயு தானே ஒழுங்குப்பட்டு விடு கிறது. மனது அடியோடு அற்ற நிலை சமாதி எனப்படும். மனம் ஒடுங்கி யாருக்குச் சமாதி நிலை கூடிவிடுகிறதோ அவர்க்கு கும்பகம் தானே அமைந்து விடுகிறது. நிர்விகல்ப சமாதியில் நாடி அடிப்பதும், ஹிருதயம் அடிப்பதும் நின்று விடுகின்றன. நிர்விகல்ப சமாதிக்கு இப்படி அறவே வாயு நின்றுவிடுவது புறத்தில் தென்படும் அறிகுறியாகும். மனம் ஒடுங்குதற்கு ஏற்ற சாதனத்தைத் தாம் முறையாக இன்னும் செய்யவில்லை என்பதை ஒரு சாதனம் மனோவாயு நிற்கும்

வண்ணம் வாலாயமாகவும் பழகியறியேன் என்று தாயுமானவர் இறைவனிடம் பணிவுடன் தெரிவிக்கிறார். அப்படி மனம் ஒடுங்காமையினால் வாயுவும் ஒடுங்கவில்லை என்று இயம்புகிறார்.

## இடையரு முயற்சி

வாலாயமாகப் பழகுதல் என்பது சாதனத்தில் பேருக்கம் உடையவர்களுக்கே சாத்யமாகிறது. நெடுங்காலம் பழகுதல், இடையருது பழகுதல், ஊக்கத்துடன் பழகுதல் என்றெல்லாம் அது பொருள்படுகிறது. கொஞ்ச காலத்துக்கு முன்பு ராமமூர்த்தி என்னும் பெயர் படைத்த பயில்வான் ஒருவன் இருந்தான். உலகத்தில் வேறு யாரும் செய்யாத அதிசயச் செயல் ஒன்றை அவன் செய்து வந்தான். அதைக் காண்பதற்கு ஆயிரக்கணக்கான ஜனங்கள் கூடுவதுண்டு. தரையில் படுத்துக்கொண்டு தன் முதுகின்மீது ஒரு பலகையை வைக்கும்படி அவன் ஏவினான். பிறகு அப்பலகையின்மீது யானை ஒன்று ஏறி நிற்கும். சிறிது நேரத்துக்கு அந்த யானையைத் தாங்கியிருந்தது அம்மனிதன் செய்த அதிசயச் செயல் ஆகும். இது எப்படிச் சாத்தியமாயிற்றுஎன்று ஒருவர் வினவலாம். வாலாயமாகப் பழகியதே அத்தகைய அரிய பெற்றிக்குக் காரணமாகும். அம்மனிதன் முதலில் வளர்கின்ற காளைக்கன்று ஒன்றை நாள்தோறும் கையில் தூக்கி வந்தான். அது வளர வளர அதைச் சுமக்கும் வலிவு இவனுக்கு வளர்ந்தது. பிறகு காளையைத் தன் முதுகின் மீது வைத்த பலகைமீது நிற்கச் செய்தான். காளையைச் சுமந்து பழகிய பிறகு யானைக் குட்டியைச் சுமக்க ஆரம்பித்தான். யானைக்குட்டி வளர்ந்து வர வர அதைத் தாங்கும் வலிவை அவன் தனக்குள்ளே வளர்த்துக்கொண்டான். மனதை அடக்குதற்கும் இங்ஙனம் வாலாயமாகப் பழகுகின்றவர்களே நல்ல சாதகர் ஆகின்றார்கள்.

தியானம் பழகுகின்றவர்களும், ஜபம் செய்கின்றவர்களும், பஜனை பண்ணுகின்றவர்களும் ஏதோ சில காலங்களில் அவைகளைச் செய்துவிட்டுப் பிறகு நிறுத்திவிடலாகாது. அதிகாலையில் எழுந்திருக்கும் பயிற்சியும் அங்ஙனம் பழக்கத்தால் வருவதாகும். அந்தச் சாதனை வகைகளை நிறுத்திவிடாது நெடுங்காலத்துக்கு ஊக்கத்துடன் செய்து வந்தால் மனது தானே பண்படுவதாகும். துவக்கத்தில் ஆகாத காரியமென்று தென்பட்டது முடிவில் ஒரு மனிதனுடைய இயல்பாக வடிவெடுத்துவிட்டது என்பதைக்காணலாம். செயற்கரிய செயல் எதையும் இடையறுப் பழக்கத்தால் செய்து முடிக்கலாம்.

### துறவு

மனது ஏக காலத்தில் இரண்டு பொருள்களைப் பற்றிப் பிடிப்பதில்லை. ஒன்றைப் பற்றுங்கால் மற்றதை விட்டுவிடுகிறது. சின்னஞ் சிறுவயதிலிருந்து முதுமை பரியந்தம் ஒரு மனிதனுடைய ஜீவிதத்தை விமர்சனம் செய்து பார்த்தால் அவன் பலதடவைகளில் துறவைக் கையாண்டு வந்திருக்கிறுன் என்பது விளங்கும். குழந்தைக்குப் பொம்மைகளில் விருப்பம். கொஞ்சம் வயது வரும்பொழுது பொம்மைகளை அது துறந்து விடுகிறது. பெற்றோரிடத்தில் அளவற்ற பற்றுதல் சிறுவர்க்குண்டு. கல்வியின் பொருட்டு அவர்களை விட்டுப் பிரிய சிறுவன் கற்றுகவேண்டும். பிறகு வயது வரும்பொழுது தாய் தந்தையர் மீதிருந்த வாஞ்சை மனைவியின்பால் வைக்கப்படுகிறது. இன்னும் சிறிது காலத்துக்குப் பிறகு அது புத்திரர்களிடத்து வருகிறது. முதுமையில் இன்னும் ஏதேனும் ஒன்றனிடத்து அப்பற்றுதல் போய்விடுகிறது. ஆக, மனிதன் மாறி மாறிப் பல பொருள்களிடத்துப் பற்றுதல் வைத்து வருகின்றுன். ஒன்றைத் துறந்து

மற்றொன்றைப் பிடித்தல் எல்லாரிடத்திலும் நாம் காணும் காட்சியாகும்.

உலகப் பொருள்களிடத்து உள்ள பற்றுதலைத் தெய்வப் பற்றுதலாக ஒருவன் மாற்றி விடுவானானால் அது துறவு மார்க்கம் என்னும் பெயர் பெறுகிறது. தெய்வப்பற்றே சிறப்பாக துறவறம் என்னும் பெயர் பெற்றுள்ளது. தெய்வப் பற்றை உலகப்பற்றுதலோடு ஒப்பிடலாகாது. உலகப்பற்று மனிதனை மேலும் மேலும் பந்தபாசத்தில் ஆழ்த்துகிறது. மனதும் அதிகமாக அழுக்குப்படிந்ததாகிறது. தெய்வப் பற்றோ மனதைத் தூயதாக்குகிறது. பிறவிப் பெருங்கடலைக் கடப்பதற்கும் அதுவே உற்ற உபாயமாகிறது. தன்னை மாண்புடையவனாக மாற்றியமைப்பதற்கும் தெய்வப்பற்றே உற்ற உபாயம். தெய்வப்பற்று வைக்காது தெய்வத்தை அடைந்தவர் யாருமில்லை. மனிதன் எதன்மீது பற்று வைத்திருக்கிறானோ அப்பற்றுதலே அவனது மனபரிபாகத்தையும் விளக்குகிறது. தெய்வப்பற்று இருப்பவன் போன்று ஒருவன் வெளி வேஷத்தால் காட்டிக்கொள்ள முடியும். வெளி வேஷத்துக்கு ஒப்ப உள்ளத்தின் பரிபாகம் எவ்வளவு தூரம் மேலோங்கியிருக்கிறது என்பதுதான் முக்கியமான கேள்வி. துறவு மார்க்கத்தில் இச்சை வைத்திருப்பவன்போன்று நான் நயமாகப்பேசுகிறேன், ஆனால் முழுமனதோடு அம்மார்க்கத்திலே நான் செல்லுபவன் அல்லன் என்னும் இக்கோட்பாட்டை துறவு மார்க்கத்தின் இச்சை போல நேசானுசாரியாய் விவகரிப்பேன் என்று தாயுமானவர் முறையிடுகின்றார்.

**வீண்காலம் போக்குதல்**

மனிதனுக்கு அமைந்துள்ள ஆயுள் அற்பமானது. தீர்க்காயுள் என்பது நூறு வருஷம். ஆனால் இக்காலத்தவர்

என்பது வயதைக் காண்பதில்லை. பிறந்தது முதல் உடலை உகுக்கும் பரியந்தம் நன்கு பயன்படுத்திய காலம் எது என்று ஆராய்ந்து பார்த்தால் வீண்போன காலந்தான் மிகைப்பட்டதாகிறது. விவேகம் வராது பிள்ளைப் பருவத்தில் கடந்த காலம், நோய்க்கு உட்பட்ட காலம், உறக்கத்திலே கழிந்த காலம், ஒரு லக்ஷியம் இல்லாது வெறுமனே கழிந்த காலம் ஆகியவைகளையெல்லாம் நீக்கிவிட்டால் மனிதன் உயர்ந்த லக்ஷியத்தின் பொருட்டுப் பயன்படுத்திய காலம் மிகமிகக் குறைவு என்பது வெளியாகும். வீணாகப் போக்குகின்ற காலத்தின் மற்றொரு பகுதியுண்டு. அறியாமையினால் மனிதன் ஏதேனும் ஒரு குற்றத்தைச் செய்கிறான். பிறகு அதைக் குறித்து அவன் வருந்துகின்றான். குற்றம் செய்வதிலே கழிந்த காலமும், அதைக் குறித்து வருந்திக் கிடந்த காலமும் வீணிலே கழிந்த காலம் ஆகும். மலையுச்சிக்குப் போகவேண்டிய ஒருவன் நடுவழியிலேயே திரும்பிக் கீழிறங்குவதும், மேலேறுவதும் ஆகிய முயற்சிகளைச் செய்து கொண்டிருப்பானாகில் அப்படிக் கழிந்துபோன ஆற்றலும் நேரமும் வீணிலே போனவைகள் ஆகும். மக்களில் பெரும்பாலோர் இத்தகைய பெருநஷ்டம் ஒன்றை தங்களுடைய ஆயுளிலே அடைந்து வருகிறார்கள். தீயின் வெளிச்சத்தைக் கண்ட விட்டில் பூச்சி தன்னுடைய உடலுக்கு வரும் ஆபத்தை எண்ணிப் பார்க்காது தீயை நோக்கிச் செல்லுகிறது. திரும்பிப் பார்க்க அதற்கு நேரமில்லை. தனக்கு வரும் ஆபத்தைப்பற்றி எண்ணவும் அதற்கு அவகாசமில்லை வெளிச்சத்தில் அது வைத்த விருப்பம் அப்படி நேராக எடுத்துச் செல்லுகிறது. துறவு மார்க்கத்திலே தீவிரமாகப் போகின்றவர்கள் அங்ஙனம் வாயுவேகம் மனோவேகமாகக் குறியை நோக்கிச் செல்லுகின்றனர். இறைவனை அடை

தலேத் தவிர வேறு ஒன்றைப்பற்றியும் எண்ணவோ, பேசவோ அவர்களுக்கு நேரமில்லே. விழித்திருக்கும் வேளே யாது, உறங்கும் வேளே யாது என்கின்ற வேற்றுமையும் அத்தகைய தீவிர சாதகர்களுடைய உள்ளத்தினின்று அகன்று போய்விடுகிறது. தமக்கு அத்தகைய தீவிர உணர்ச்சி வரவில்லேயென்று தாயுமானவர் வருந்துகின்ருர். துறவறத்தைச் சிலாகித்துப் பேசுவது, பிறகு அதை மறந்து விடுவது, ஆழ்ந்து உறங்குவது, தேகம் அழிந்து போவதைக் குறித்து அஞ்சி நடுங்குவது இப்படியெல்லாம் தமக்கு வீண் காலம் போய்க்கொண்டிருப்பதை **அந்த நினேவையும் மறந்தபோது நித்திரை கொள்வேன்** என்று தாயுமான வர் இயம்புகிருர்.

மரணத்தைக் குறித்து உயிர்கள் அனேத்தும் அஞ்சு கின்றன. மரணத்துக்கு அஞ்சாத உயிர் இல்லே. சிற்று யிர்கள் மரணத்துக்கு அஞ்சுகின்றன. பறவைகள், விலங்கு கள் மரணத்துக்கு அஞ்சுகின்றன. கற்றவர்களும் மற்றவர் களும் மரணத்துக்கு அஞ்சுகிருர்கள். நரரும் தேவரும் மரண மென்ருல் நடுங்குகின்றனர். உடல் பற்று இருக்குமளவு மரண பயம் இருக்கும். உடல் பற்று ஓங்கியிருப்பவருக்கு மரணத்தைப் பற்றிய அச்சம் அதிகரித்திருக்கும். ஆத்ம சாதனத்திலே செல்கின்றவர்களுக்கு உடல் உணர்ச்சி அகன்றுகொண்டே வருகிறது. சாதனத்தில் முற்றும் மேலோங்கியிருப்பவர்க்கு மரணத்தைப்பற்றிய எண்ணம் வருவதில்லே. சரீரம் எப்பொழுது, எங்ஙனம் மறைந்து போயிற்று என்பதும் அவர்களுக்குத் தெரியாது. பரபோ தத்திலேயே அவர்கள் நிலேத்தவர் ஆய்விடுகிருர்கள். சாதத் தைச் சமைக்கின்றபொழுது அது வெந்து விட்டதா என்று பதம் பார்ப்பது போன்று சாதகன் ஒருவன் சாதனத்திலே

மேல்நோக்கிப் போய்க்கொண்டிருக்கின்றான் என்பதை மரண பயத்தைக்கொண்டே பதம் பார்த்துவிடலாம். தனது பரிபாகத்தைத் தரம் பார்த்த தாயுமானவர் **தேகம் நீங்குமென எண்ணிலோ, நெஞ்சம் துடித்து அயர்வேன்** என்று தாம் பூரண பரிபாகம் அடையாத நிலைமையை அப்படியே படம் பிடித்துப் பகர்கிறார்.

சூரியனைப் பார்க்கும்பொழுது கண் கூசுகிறது. கண்ணுக்கு ஒன்றும் புலனாவதில்லை. பார்த்த சிறிது நேரத்துக்குச் செயல்புரிய அதற்கியலாது. காரிருளில் கண்ணுக்கு ஒன்றும் புலப்படுவதில்லை. சூரியப் பிரகாசமும் கார் இருளும் ஒன்றோடொன்று முரண்படுபவைகள். ஆனால் இரண்டு நிலையிலும் கண் தெரிவதில்லை. நிறை மனதுக்கும், குறை மனதுக்கும் இத்தகைய அனுபவம் வருவதுண்டு. ஆனந்தம் பெருகப்பெருக கருவி கரணங்கள் செயலற்றுப் போய்விடுகின்றன. ஆனந்தம் பேரானந்தமாகுமிடத்து மனிதன் பேச்சு மூச்சு அற்றவனாகி விடுகிறான். அதே மனிதன் ஜடநிலையில் இருக்கின்றபொழுதும் அவன் செயலற்றவனாகி விடுகின்றான். இக்கோட்பாட்டை தாயுமானவர் **பேசாத ஆனந்த நிஷ்டைக்கும் அறிவு இல்லாத பேதைக்கும் வெகுதூரமே** என்று பகர்கிறார்.

செயலை முன்னிட்டு மனிதனைப் பேய் என்று பகர்வதுண்டு. உண்மையில் மனிதர்க்கிடையில் தான் நாம் பேயைக் காண்கின்றோம். மற்ற கற்பனைப் பேய்களெல்லாம் வெறும் கற்பனையாகத் தான் இருந்து வருகின்றன. கண்கூடாகப் பேய்க்குணமுடைய மனிதனைப் பார்ப்பது போன்று பேய் என்னும் ஒன்றைக் காணவோ ஆராய்ச்சி செய்யவோ யாருக்கும் இயலுவதில்லை. மக்களுள் எல்லாப் பாங்குடையவர்களும் இருப்பதுபோன்று பேய்க்குணமுடையவர் இருக்கின்றார்கள்.

கீழ்மையை முன்னிட்டு மனிதனை நாய் என்று அழைப்பது வழக்கம். மனிதனுக்கு ஒவ்வாத கீழான இயல்புகள் ஒருவனிடத்துத் தோன்றுங்கால் அவனை நரன் என்று அங்கீகரிப்பதில்லை. நாய் என்றே அவன் புறக்கணிக்கப்படுகின்றான். ஏதேனும் ஒரு மனிதனிடத்து பேயின் தன்மையும், நாயின் தன்மையும் ஒன்று சேர்ந்துவிட்டால் பிறகு அவனை மனிதன் என்று எப்படி அங்கீகரிக்க முடியும்? கீழ்மை அனைத்துக்கும் அவன் இருப்பிடமாய் விடுகிறான். எல்லாராலும் புறக்கணிப்பதற்கு அவன் உரியவனாகிறான். அத்தகைய கீழ்மகன் ஒருவனை இறைவன் அங்கீகரித்து நல்வழியில் நடாத்துதற்குத் துணைபுரிவாராகில் அது அவருடைய அருளின் விளைவேயாம். தம்மைத் தாம் துருவி ஆராய்ச்சி செய்கின்ற தாயுமானவர் தமது சிறுமை எதையும் மறைத்து வைக்கவில்லை. பூதக்கண்ணாடியில் பார்த்தால் சிறிய பொருளும் பெரியதாகத் தென்படும். தம்மைத் தாமே ஆராய்ச்சி பண்ணுதல் என்னும் பூதக்கண்ணாடியில் தமது குற்றங்களெல்லாம் மிகப் பெரியவைகளாக அவருக்குத் தோன்றுகின்றன. அதற்கேற்ற விண்ணப்பத்தையும் தெய்வத்திடத்து அவர் சமர்ப்பித்துவிடுகின்றார். தமது பேய்க் குணத்தையும் நாய்த் தன்மையையும் பொருள்படுத்தாது தமக்கு நல்வழி ஒன்று காட்டியருள வேண்டும் என்று வேண்டுகிறார். பேரின்ப நிஷ்டையிலே தாம் நிலைத்திருப்பதற்குத் துணைபுரிய வேண்டுமென்றும் விண்ணப்பிக்கிறார். இக்கருத்துக்களை **பேய்க்குணம் அறிந்து இந்த நாய்க்கும் ஒரு வழிபெரிய பேரின்ப நிட்டை அருள்வாய்** என்று தாயுமானவர் பகர்கிறார்.

கடவுளை அடையப் பெற்றதற்கு அத்தாட்சி ஒன்று உண்டு. பிரபஞ்சக் காட்சி கடவுள் காட்சியாக மாறிவிடு

கிறது. பிரபஞ்சக் காட்சியில் இன்ப துன்பங்கள் மாறிமாறி அமைகின்றன. பிறப்பும் இறப்பும் தொடர்ந்து வந்து கொண்டிருக்கின்றன. கடவுள் காட்சியாக மாறியதும் அதன் சொரூபமே உண்மை நிலைக்குப் போய்விடுகிறது. கடவுள் ஓர் இடத்தில் இருக்கிறார், மற்றோர் இடத்தில் இல்லை என்கின்ற ஐயம் அக்ஞான நிலையில் நமக்கு வரு கிறது. ஞானம் அடைந்ததும் அவர் ஒருவர்தான் இருக்கிறார் என்னும் தெளிவு வருகிறது. அவர் எங்கும் நிறைந்திருக் கிறார் என்கின்ற தெளிவும் வருகிறது. ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்துக்கு அவரைக் கடத்திவிட முடியாது என் பதும் வெளியாகிறது. நிறைபொருளை இடம் மாற்றிவிட முடியாது. அத்தகைய பெரிய பொருள் பேரானந்த சொரூபமாய் இருக்கிறார். அவரை அடைகின்றவனுக்கும் பேரானந்தம் பிறந்துவிடுகிறது. ஆனந்தத்திலேயே அவன் திளைத்திருக்கின்றான். இக்கோட்பாடு பார்க்குமிடமெங்கு மொரு நீக்கமற நிறைகின்ற பரிபூரண ஆனந்தமே என வருகிறது.இக்கருத்துக்கள் அனைத்தையும் தொகுத்து மேற் கூறிய பாடலின்கண் தாயுமானவர் அமைத்து வைத்திருக் கிறார்.

---

## பரிபூரணனந்தம் - 2

தெரிவாக ஊர்வன நடப்பன பறப்பன
செயற்கொண் டிருப்பனமுதல்
தேகங்க ளத்தனையும் மோகங்கொள் பௌதிகஞ்
சென்மித்த ஆங்கிறக்கும்
விரிவாய பூதங்கள் ஒன்றேடொன் றுயழியும்
மேற்கொண்ட சேடம் அதுவே
வெறுவெளி நிராலம்ப நிறைசூன்யம் உபசாந்த
வேதவே தாந்தஞானம்
பிரியாத பேரொளி பிறக்கின்ற வருள் அருட்
பெற்றேர்கள் பெற்றபெருமை
பிறவாமை யென்றைக்கும் இறவாமை யாய்வந்து
பேசாமை யாகுமெனவே
பரிவா யெனக்குநீ யறிவிக்க வந்ததே
பரிபாக காலமலவோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந்தமே.

அனந்தங்கோடி உயிர்வகைகள் பிரபஞ்சத்தில் இருக்கின்றன. அவைகளைப் பொதுவாக ஸ்தாவரம் என்றும், ஜங்கமம் என்றும் இருவகைகளாகப் பிரிக்கிறேம். ஸ்தாவரங்கள் என்பவை நிலைத்திணை; இருந்த இடத்திலேயே உயிர் வாழ்ந்து வருகின்றன. மரம், செடி, கொடிகள் ஸ்தாவரம் என அழைக்கப்படுகின்றன. மலைக்கு உயிர் இருப்பதால் அதுவும் ஸ்தாவரம் என அழைக்கப்படுவதுண்டு. ஜங்கமம் என்பவை இயங்குதிணை; வெவ்வேறு இடங்களுக்குப் போக அவைகளுக்கு இயலும். இடம் மாறிப் போவதற்குப்

பல உபாயங்கள் கையாளப்படுகின்றன. நகர்ந்துகொண்டு போகின்ற உயிர்கள்உண்டு. நீந்திக்கொண்டு போகின்றவைகள் இருக்கின்றன. இன்னும் சில தவழ்ந்து செல்லுகின்றன. நடந்து போகின்ற உயிர்கள் உண்டு. வானத்தில் பறந்து போகும் ஜந்துக்களும் இருக்கின்றன. நகர்ந்து போகின்றவைகள் பல கால்களை உபயோகப்படுத்துகின்றன. மர அட்டை என்னும் ஜந்துவுக்குக் கணக்கற்ற கால்கள் இருக்கின்றன. கால் போன்ற வரிவரியான செட்டை பாம்பு இனத்துக்கு உண்டு. செதிள் என்று அதைச் சொல்லுவதுண்டு.காலாகப் பயன்படும் அந்தச் செட்டையின் வரியும் எண்ணிக்கையில் அடங்காதது. ஊர்ந்து செல்பவைகளெல்லாம் இங்ஙனம் கணக்கற்ற கால்களை உடைத்திருக்கின்றன. நான்கு கால்களையும், இரண்டு கால்களையும் உடைத்திருக்கும் உயிர்கள் இடம் மாறிச் செல்லும் பொழுது அவைகள் நடந்து போகின்றன என்று சொல்லுகிறோம். நான்கு கால்களை உடைய விலங்குகளும், இரண்டு கால்களை உடைய மக்களும் நடந்து செல்லுகிறார்கள். விலங்குகளுக்கும், மக்களுக்கும் இடை நிலையில் குரங்கும், கரடியும் இருக்கின்றன. அவைகள் நான்கு கால்களாலும் நடக்க முடியும், இரண்டு கால்களாலும் நடக்க முடியும். பறவைகளோ ஏதோ சில வேலைகளில் கால்களைப் பயன்படுத்துகின்றன; பெரிதும் அவைகள் பறந்தே செல்கின்றன. அப்படிப் பறப்பதற்குச் சிறகுகள் உதவுகின்றன. நீந்துபவைகளுக்குச் செதிள்கள் உதவுகின்றன. இந்த உயிர்வகைகள் இடம் மாறிப் போவது போன்று இக்காலத்தில் யந்திரங்களும் இடம் மாறிப் போகக்கூடியவைகள். பூமியை உழும் யந்திரங்களும், போர்க்களத்தில் ஆயுதங்களை எடுத்துச் செல்லும் யந்திரங்களும் ஊர்ந்தும், தவழ்ந்தும் போகின்

றவைகள் ஆகின்றன. முன்பொரு காலத்தில் மனிதர் போன்ற பொம்மைகளைச் செய்து வைத்துகயிறுகளால் அவைகளின் அங்கங்களை இழுத்துப் பொம்மலாட்டம் காட்டினர்கள். இன்றைக்கோ மனிதன் போன்று நடந்து செல்லும் யந்திரங்கள் இருக்கின்றன. நடந்துசெல்லுதல் மட்டுமல்ல; வீட்டு வாயிலில் கதவைத் திறப்பது, கைதூக்கி வணக்கம் சொல்லுவது, எஜமானன் வீட்டில் இல்லை என்று பகர்வது, மோட்டார் சைகிள் ஓட்டுவது இவைபோன்ற சிறு சிறு செயல்களை ஒழுங்காகச் செய்யவல்லவைகளும்,இரண்டொரு வார்த்தைகளை முறையாகப் பேசவல்லவைகளுமான யந்திரப் பொம்மைகள் இன்றைக்கு அமைக்கப்பெறுகின்றன. திடீரென்று பார்ப்பவர்கள் அத்தகைய பொம்மைகளை உயிர் வாழும் மாந்தர் என்றே நம்பிக்கொள்வர். அவ்வளவு அற்புதமாக அவைகள் அமைக்கப்பெற்றிருக்கின்றன. வானத்தில் பறவைகள் போன்று பெரிய பெரிய விமானங்கள் பறந்து போகின்றன. மக்களையும், சாமான்களையும் அவைகள் தூக்கிச் செல்லுகின்றன. கடலினுள் ஆழத்தில் மூழ்கிச் செல்லும் கப்பல்கள் இருக்கின்றன. ஆக, இத்தகைய யந்திரங்கள் ஊர்வன, நடப்பன, பறப்பன, நீந்துவன ஆகின்றன. அப்படியானால் இந்த யந்திரங்களுக்கும், உயிர் வாழ்ந்திருப்பவைகளுக்கும் இடையில் ஊர்வன, நடப்பன, பறப்பன ஆகியவைகளுக்கும் உள்ள வித்தியாசம் யாது என்னும் கேள்வி எழக்கூடும். தெரிவாக என்னும் பதம் இந்த உயிர்வகைகளுக்கு வழங்கப்படுகிறது. தெரிந்து கொள்ளும் இயல்பு யந்திரங்களுக்கு இல்லை. தெரிந்து கொள்ளும் இயல்பு உயிர்வாழும் ஜீவர்களுக்கு உண்டு. இருப்புப் பாதை ஒன்றன்மீது அற்பப் புழு ஒன்று தவழ்ந்துபோகிறது. இருப்புப் பாதையின்மீது பலவண்டிகளை இழுத்துக்கொண்டு

நீராவியந்திரம் ஒன்று விரைந்தோடுகின்றது. இந்த இரண்டுக்கும் உள்ள வித்தியாசம் யாது? தெரிந்துகொள்ளும் தன்மை புழுவுக்கு உண்டு. தெரிந்துகொள்ளும் தன்மை நீராவி யந்திரத்திற்கு இல்லை. புழு எட்டிய பிற்காலத்தில் பரிணாமத்தின் வாயிலாகப் பரம ஞானி ஆகக்கூடும். தெய்விகம் அதனிடத்துப் புதைந்திருக்கிறது. யந்திரம்வெறும் ஜடப்பொருளே. பேருயிராகப் பரிணமிக்கும் தெய்விகம் அதனிடத்துக் கிடையாது.

வெளித் தோற்றத்துக்கு உயிர்களுக்கும் யந்திரங்களுக்கும் மற்றொரு ஒற்றுமை இருப்பது போன்று தென்படுகிறது. செயற்கொண்டிருப்பன என்பது அந்த ஒற்றுமை. யந்திரங்களும் வினையாற்றுகின்றன, இந்த உயிர்வகைகளும் வினையாற்றுகின்றன. ஒரு விதத்தில் உயிர்வகைகளைவிட மிக அதிகமாக யந்திரங்கள் செயல் புரிகின்றன. ஆயினும் செயல்புரிதலில் உயிர்களுக்கும், யந்திரங்களுக்கும் இடையில் பெரிய வேற்றுமை உண்டு. செய்கின்ற செயல்களுக்கு "நான் கர்த்தா" என்னும் எண்ணம் உயிர்களுக்கு உண்டு. யந்திரங்களுக்கோ தாம் கர்த்தா என்கின்ற எண்ணம் கிடையாது. ஒவ்வொரு செயலும் உயிர்களுடைய உள்ளத்தில் பதிவு பெறுகிறது. அந்தச் செயலை முன்னிட்டு அதன் வாழ்க்கையில் படிப்படியாக மாறுதல் வருகிறது. யந்திரங்களுக்கு உணரும் தன்மையும் இல்லை; அவைகள் உயிர் வாழ்ந்திருப்பவைகளும் அல்ல; பேருயிராகப் பரிணமிக்க வல்லவைகளும் அல்ல. ஆகவே, செயல் புரிந்தும் அச்செயலால் அவைகளிடத்து முன்னேற்றம் என்பது கிடையாது. உயிர்களோ, செயல்கள் மூலமாக முன்னேற்றமடைந்து வருகின்றன. வாழ்வை மாற்றியமைக்கும் வினைப்பயன் உயிர்களுக்கு உண்டு, யந்திரங்களுக்கு இல்லை. இதை முன்னிட்டுச்

செயற்கொண்டிருப்பவை என்று உயிர்களேயே சிறப்பித்துக் கூறவேண்டும். செயல்புரிவது உயிர்களின் முதல் காரியமாகிறது. மற்றவைகளெல்லாம் அந்த வினையைத் தொடர்ந்து வருகின்றன. உயிர்வகைகள் எடுத்துள்ள உடலங்களை தேகங்கள் என்கின்றோம். எது தகனமாகின் றதோ அது தேகம். தேகங்களுள் குடிகொண்டிருக்கும் ஜீவாத்மாக்களுக்கு தேகிகள் என்பது பெயர். தேகத்தை உடைத்திருப்பவைகள் என அச்சொல் பொருள்படுகிறது. தேகிகள் ஆகிய ஜீவாத்மாக்கள் வாழ்க்கையில் அடைந்து வரும் மாறுதல்களுக்கு ஏற்ப தேகங்கள் அத்தனையும் ஓயாது மாறியமைந்து வருகின்றன. இப்படி தேகங்களை எடுக்கும் இயல்பு இந்த ஆத்மாக்களுக்கு எப்படி வந்தது என்னும் கேள்வி எழக்கூடும். உடையை அணிந்துகொள் ளும் இயல்பு நமக்கு எப்படி வந்தது என்று நம்மை நாம் கேட்கவேண்டும். பிறக்கும்பொழுது உடை அணிந்து கொண்டு நாம் பிறந்தவர்கள் அல்ல. வளர்ந்து வரும் பொழுது உடைகளை அணிந்துகொள்ளும் இயல்பு நமக்கு வந்துவிடுகிறது. இந்த உடையை அணியும் இயல்பு இடை யில் வருவிக்கப்பட்டது. உடை இல்லாவிட்டால் நாம் சமு தாய வாழ்வு வாழமுடியாது என்று மோகம் கொள் கின் றோம். உடையை அணியாமலேயே வாழ்ந்து பழகிவிட்டால் பிறகு குறை ஒன்றும் தோன்றாது. உடையை அணிந்தே ஆகவேண்டும் என்னும் மயக்கத்தை நாம் வருவித்துக் கொண்டிருப்பது போன்று தேகங்களை எடுத்துள்ள ஜீவர் கள் அத்தனையும் மோகத்தாலேயே அத்தேகங்களை எடுத் துப் பாதுகாத்து வருகின்றன.

உடைகளைப் பருத்தியினின்றும், பட்டினின்றும், உரோ மத்தினின்றும் செய்துகொள்கின்றோம். தேகங்களை உயிர்

கள் எதினின்று உண்டுபண்ணிக்கொண்டிருக்கின்றன என்னும் கேள்வி அடுத்தபடியாக வருகிறது. இந்த உடலங்கள் அத்தனையும் பௌதிகம்; பூதங்களிலிருந்து உண்டானவைகள். மண், நீர், அனல், வாயு, வெளி ஆகிய இந்த ஐந்தும் பூதங்கள் ஆகின்றன. இவைகளைக்கொண்டே தேகங்கள் அமைந்திருக்கின்றன. இந்த ஐந்து பூதங்களையும் கலைத்துவிட்டால் தேகம் என்பது இல்லாது போய்விடும். பூதங்களைக் கலைக்காது உடலங்களை இருக்கிறபடி வைத்திருக்க முடியுமா என்று நாம் கேட்கலாம். இக் கேள்விக்கு விடையாக சென்மித்தவாங்கு இறக்கும் என்னும் கோட்பாடு வருகிறது. எது உடல் என்னும் உரு எடுக்கின்றதோ அது உருவை இழந்தாக வேண்டும். உரு எடுத்துள்ள ஒன்று உருவை இழந்துவிடாது சாஸ்வதமாகப் பாதுகாத்து வைத்திருக்கும் என்னும் கோட்பாட்டை இயற்கையில் எங்கும் காணமுடியாது. பூதங்கள் கூடி உரு எடுக்கவல்லவைகள் என்றால் பூதங்கள் கலைந்து உருவத்தை ஒடுக்கிவிடவும் வல்லவை. இந்த விதிக்கு விலக்குக் கிடையாது. என்ன பாங்கில் உயிர்கள் உடலெடுத்துப் பிறக்கின்றனவோ அதே பாங்கில் அவைகள் உடலத்தை இழந்து இறக்கின்றன.

இந்த பூதங்களைப்பற்றிய உண்மைதான் என்ன? அவைகள் என்றைக்கும் சாஸ்வதமாக நிலைத்திருக்கின்றனவா? இல்லை. விரிவாய பூதங்கள் ஒன்றோடொன்றாய் அழியும். எத்தகைய பாங்கில் இந்த பூதங்கள் விரிந்திருக்கின்றன என்பதை நாம் எண்ணிப் பார்ப்பதில்லை. இந்த மண்ணுலகம் மிகப் பெரியதாக விரிந்திருக்கிறது. வானளாவும் மலைகளைச் சென்று பார்த்தால் மண்ணுலகின் மகத்துவம் ஒருசிறிது நமக்கு விளங்கும். இந்தப் பூமியோ சூரியனிடத்திருந்து சிதறிவந்த ஒரு சிறு துகள். இந்த சூரியனைவிட

பல்கோடி மடங்கு பெரிய சூரியர்களும் இயற்கையில் இருக்கின்றன. இந்த மண்ணுலகின் மேற்பரப்பில் முக்கால் பகுதி நீர் நிறைந்திருக்கிறது. ஒரு சமுத்திரத்தினிடத்து சென்று பார்த்தால் நீரின் விரிவும் சுமாராக நமக்கு விளங்கும். அனல் எத்தகைய சிறப்புற்றதாக இயற்கையில் இருக்கிறது என்பதற்கு எண்ணிறந்த சூரியர்களே சான்று ஆகின்றன. இனி, வெட்டவெளியைப்பற்றிச் சிந்தித்துப் பார்த்தாலோ அது நம் சிந்தனைக்கு எட்டாதது. அகண்டாகாரத்தில் விரிந்தோடுகிறது. வானகம் என்னும் எல்லை காணுத கடலில் எண்ணிறந்த சூரியமண்டலங்கள் சிறு சிறு தூசிகள்போன்று மிதக்கிக் கொண்டிருக்கின்றன. இவ்வளவு மகத்துவம் வாய்ந்த பூதங்கள் பிரளயம் அடைகின்றன. அப்பொழுது ஒன்றில் ஒன்று ஒடுங்கி விடுகிறது. நிலம் நீரில் ஒடுங்குகிறது; நீர் நெருப்பில் ஒடுங்குகிறது; நெருப்பு காற்றில் மறைகிறது; காற்று வெட்ட வெளியில் அடங்குகிறது; வெட்டவெளி மூலப்பிரகிருதிக்குள் ஒடுங்கி விடுகிறது; மூலப்பிரகிருதியும் அவ்யக்தம் என்னும் தோன்ரு நிலைக்குப் போய் விடுகிறது. அந்நிலை எத்தகையது என்பதை விளக்குவது கடினம். நமது அயர்ந்த நித்திரை போன்றது அது. சராசரங்கள் யாவும் உறக்கத்தில் மறைந்து விடுகின்றன. அந்நிலையைப் பெரியதென்று சொல்லுதற்குமில்லை, சிறியதென்று சொல்லுதற்குமில்லை. அப்பொழுது என்னதான் மிஞ்சியிருக்கிறது என்பது கேள்வி. அக்கேள்விக்கு மேற்கொண்ட சேடமதுவே என்னும் விடை வருகிறது. இவைகளுக்கெல்லாம் அப்பாலுள்ள மிச்சம் அது என அக்கூற்று பொருள்படுகிறது. அப்படி மிஞ்சியிருக்கும் பொருளைப் பற்றிய ஆராய்ச்சி இனி வருகிறது. அதை நாம் முற்றும் அறிந்தவர்களும் அல்ல, சிறிதேனும் அறியாதவர்களும்

அல்ல. நமது அயர்ந்த நித்திரை நிலையை அறிந்தும் அறியா மலும் இருப்பது போன்று பிரளயத்தில் ஒடுங்காத பொருளை யும் ஏகதேசம் அறிந்தும் அறியாமலும் இருக்கிறோம். பல சொற்களால் அது விளக்கப்பெறுகிறது. வெறு வெளி என் பது அதன் முதல் விளக்கம். ஸ்தூலப்பொருள் எதற்குமே ஆங்கு இடமில்லை. சந்திர சூரிய நட்சத்திரங்களை வான வெளியில் காண்பது போன்று அந்த அறிவு வெளியில் காண் பதற்கு ஒன்றுமில்லை. இந்த வானவெளியே மூலப்பிர கிருதியினுல் தாங்கப்பெற்றிருக்கிறது. ஆனுல் பிரளயத்தில் எஞ்சியிருக்கிற அறிவு வெளிக்கு பற்றுக்கோடு ஒன்றும் வேண்டியதில்லை. வேறு எதுவும் அதைத் தாங்கிப்பிடித் திருக்கவேண்டிய அவசியம் இல்லையாதலால் அது **நிரா லம்பம்** எனப்படுகிறது. மற்றுமொரு முரண்பாடுடைய சொல் தொடர் அப்பொருளை விளக்க வருகிறது. **நிறைசூன்யம்** என்பது அந்தச் சொல் தொடர். ஒன்றுமில்லாதது சூன்யம். முழுதுமாயிருப்பது நிறைவு. இந்த அறிவு வெளியோ நிறைவு என்றும் சொல்லப்படுகிறது, சூன்யமென்றும் சொல் லப்படுகிறது. முரண்படுகிற இவ்விளக்கம் எப்படிப் பொருந் தும்? தோற்றத்துக்கு வந்துள்ள இயற்கை ஆங்கு இல்லை யாதலால் அது சூன்யம். அறிவோ சித்கணமாய் அதாவது பேரறிவாய் தன்னில்தானே நிலைத்திருப்பதால் அது நிறைவு. பூரணம் எனவும் அது பொருள்படுகிறது. வெட்ட வெளியில் மேகமில்லாது இருக்கும் தருணத்தைக் காண்கிறோம். மேக மின்மை சூன்யம். வெட்டவெளி எங்குமிருப்பது நிறைவு. அறிவு வெளியில் அண்டங்கள் யாவும் அடிபட்டுப் போயிருக் கும் நிலை அத்தகையது. ஆதலால் அது நிறை சூன்யம் எனப் படுகிறது. உணர்வு நிலையில் சஞ்சலம் ஏற்படுவதுண்டு. இன்ப துன்பங்களை உணர்கிறோம். இந்த இரண்டு விதமான

உணர்ச்சிகளும் சலனங்களேயாம். ஆனல் பேரறிவுப் பொருள் சலனமற்ற பேருணர்வாய் இருக்கிறது. ஆதலால் அது உப சாந்தம் என அழைக்கப்படுகிறது. அமைதியே வடிவெடுத்த பேருணர்வு என அது பொருள்படுகிறது. இயற்கைக்கு வேதம் என்பது மற்றொரு பெயர். இயற்கையை அறிகின்ற அளவு ஒருவன் வேதத்தை அறிந்தவனுகின்றான். எழுதி வைத்துள்ள நூல்களை வேதங்கள் என்று சமயவாதிகள் சாற்றுகின்றனர். அத்தகைய நூல்கள் அழிந்து பட்டுப்போம். ஆனல் இயற்கை என்கின்ற நூலை யாரும் அழித்துவிட முடியாது. இயற்கைக்கு அப்பாற்பட்டுள்ள மெய்ப்பொருளுக்கு வேதாந்தம் என்பது பெயர். சூரியன் தனது பிரகாசத்தால் தன்னையும் விளக்குகிறது, தன்னைச் சார்ந்துள்ள கிரகங்களையும் விளக்குகிறது. உயிர் எழுத்து தன்னையும் விளக்குகிறது, தன்னைச் சார்ந்துள்ள மெய் எழுத்துக்களையும் விளக்குகிறது. அங்ஙனம் பரம் பொருளின் பேரறிவானது பரம்பொருளாகிய தன்னையே விளக்குகிறது, பிரபஞ்சம் தோற்றத்துக்கு வரும் பொழுதெல்லாம் அப்பிரபஞ்சத்தையும் விளக்குகிறது. இக்கருத்துக்கள் **வேத வேதாந்த ஞானம்** என்னும் கோட்பாட்டில் அடங்கியிருக்கின்றன. இயற்கையையும், இயற்கையினுள் பிரகாசித்துக் கொண்டிருக்கும் பேரறிவையும் அறிகின்றவர்கள் வேதவேதாந்த ஞானம் பெற்றவர்கள் ஆகின்றனர். அறிவின் துணையில்லாது இயற்கையைத் தெரிந்துகொள்ள முடியாது. இயற்கையைப் பிரித்து வைத்துவிட்டு அறிவை மட்டும் உணர்கின்ற இடத்து அப்பேரறிவின் விபூதிகளெல்லாம் மறைந்துபோய் விடுகின்றன. ஞானத்தின் சிறப்பு முழுதையும் அறிந்து கொள்ளுதற்கு இயற்கையோடு சம்பந்தப்படுத்தியும் அந்த ஞானத்தை உணரவேண்டும், இயற்கையில் தொடர்வுபடாத நிலையிலும் அதை உணரவேண்டும்.

சூரியன், நட்சத்திரங்கள் முதலியவைகளிடத்திலுள்ள ஒளி தோன்றவும் மறையவும் செய்கின்றன. ஆனல் ஆத்மப் பிரகாசத்துக்கோ தோற்றமும் மறைவும் இல்லே. அது யாண்டும் இருந்தபடி இருக்கிறது. ஆத்மப் பிரகாசம் இயற்கையில் வந்து ஒட்டுகிறது, பிறகு அதைவிட்டுப் பிரிகிறது என்று சொல்வது பொருந்தாது. அது இருந்தபடி இருக்கிறது. அதன் சன்னிதான விசேஷத்தால் தான் இருக்குமிடத்தை இயற்கை காட்டிக் கொள்கிறது. இத்தகைய ஆத்மப் பிரகாசம் பிரியாத பேரொளி என்று இயம்பப்படுகிறது. இப்பேரொளியினின்று அருள் உரு எடுக்கின்றது. அருள் என்பது யாது? சூரிய வெளிச்சம் பூமிக்கு வருகிறது. அப்படி வருகிற வெளிச்சத்தை உயிர்களின் வளர்ச்சிக்காக வென்று பயன்படுத்தினல் அது அருள் ஆகிறது. நீர் வீழ்ச்சியில் ஆகர்ஷண சக்தி இலங்குகிறது. அந்த சக்தியை யந்திரங்களே இயக்குதற்குப் பயன்படுத்தினல் அது அருள் ஆகிறது. எங்கும் நிறைந்துள்ள தெய்விக சக்தியை நமது முன்னேற்றத்திற்காகப் பயன்படுத்துவோமானல் அது அருள் ஆகிறது. இப்பேரொளியினின்று பிறக்கின்ற அருள் உயிர்களுடைய முன்னேற்றத்துக்குப் பெரிதும் பயன்படுகிறது. மனிதன் கற்றுக்கொள்ள வேண்டிய பாடங்களுள் இது மிக முக்கியமானது. பிரபஞ்ச முழுதிலும் சக்தி வியாபித்திருக்கிறது. அது ஜடசக்தியாகவும், சித் சக்தியாகவும் இலங்குகிறது. இந்த இரண்டு வித சக்திகளேயும் மனிதனுடைய நலத்துக்கும், முன்னேற்றத்துக்கும் பயன்படுத்தலாம். அக்னியைச் சமைப்பதற்கும், குளிர் காய்வதற்கும் பயன்படுத்தினல் அது ஜடசக்தியின் மூலம் பெறும் அருள் ஆகிறது. அன்பு, அறிவு ஆகியவைகள் சித் சக்திகள். அன்பைக் காமம் என்னும் கீழ் நிலேக்கு மாற்றி விட்டால் அது அருள் ஆகாது. மருள்

என்று அதை மொழியலாம். அறிவை சுயநலத்துக்கென்றே பயன்படுத்துபவர் உளர். அன்னவர் அருளை மருள் ஆக்கு கின்றனர். அன்பைத் தூயதாக்கினல் அது கடவுள் மயம் ஆகிறது. அப்பொழுது அது அருள் எனப்படுகிறது. அறிவைத் தெளிவுபடுத்தி மெய்ப்பொருள் ஆராய்ச்சிக்கென்றே பயன்படுத்தினல் அந்த அறிவும் அருள் மயமாகிறது. இறைவன் அருள் நிறைந்தவன். தனது சக்திகளை யெல்லாம் உயிர்களின் முன்னேற்றத்துக்கென்றே அவன் தோற்றுவித்துக் கொண்டிருக்கிருன். அந்தப் பெரும் திட்டத்துக்கு ஒப்ப வாழுகின்றவர்கள் அருள் பெற்றோர்கள் ஆகின்றனர். அருளைப் பெற்றவர்கள் பெறுகின்ற பேறுதான் யாது என்னும் வினு எழக்கூடும். அருளுக்குப் புறம்பான சம்பத்துக்களெல்லாம் இப்பிரபஞ்சத்துக்குரியவைகள் ஆகின்றன. ஜீவர்களை மேலும் அவைகள் பந்தபாசத்தில் தளைத்து விடுகின்றன. கூடு கட்டுகின்ற பட்டுப்பூச்சி தனது கூட்டுக்குள்ளேயே சிறையுண்டு விடுவது போன்று உலக சம்பத்துக்கள் மனிதனை உலகபந்தத்திலேயே ஆழ்த்திவிடுகின்றன. வாழ்க்கையில் அமைந்துள்ள வாய்ப்புகள் யாவற்றையும் கடவுள் வழிபாட்டுக்கென்றே பயன்படுத்துகின்றவர்கள் கடவுளை அடைகின்றனர். அவனுடைய அருளைக்கொண்டு அவனுடைய தாளை அடைகின்றனர். இறைவனை அடைகின்றவர்கள் இறைவனுடைய சொரூபம் ஆகின்றனர். அதற்கு ஒப்பான பேறு இல்லை. அது பெரிய பேறு ஆதலால் பெற்ற பெருமை என அது இயம்பப்படுகிறது. அப்பெருமை உலக சம்பத்துக்களைவிட எவ்விதத்தில் மேலானது? உலகத்திலுள்ள அனைத்தும் நிலையற்றவைகள். அவைகள் தோன்றவும் மறையவும் செய்கின்றன. தோற்றத்துக்கு வருபவைகளைப் பிறப்பெடுத்தவைகள் என்கின்ருேம். மறைந்துபோகின்

றவைகளை இறந்துபட்டுப் போனவைகள் என்கின்றோம். உடலை எடுப்பதே உலக சம்பத்து. உடல் எப்பொழுதும் துன்பம் நிறைந்தது. தனக்குச் சொந்தமல்லாத வீட்டில் வசிக்கின்றவர் அந்தவீட்டுக்கு வாடகை கொடுக்கவேண்டும். உடல் என்னும் வீடு ஒருநாளும் நமக்குச் சொந்தமானதல்ல. நாம் அதில் வசித்திருக்கின்றபொழுது பிணியில் வருந்துதல் என்னும் வாடகையை அதற்குக் கொடுத்தே ஆகவேண்டும். அது நமக்குப் புறம்பானது ஆதலால் உடலை விட்டுப் பிரிந்தும் போகவேண்டும். பிரிந்து போகின்றபொழுது அதை எண்ணி வருத்தம் உண்டாகிறது. புதிய பிறவிக்கு உடல் பற்று வித்து ஆகிறது. உடல் பற்றே உடல்களை உண்டு பண்ணிக்கொண்டு போகிறது. அப்படி உடல்களை எடுத்துக் கொண்டிருக்குமளவும் துன்பங்கள் தொடர்ந்து வந்து கொண்டிருக்கின்றன. அருளுக்குப் பாத்திரமாகின்றவர்கள் இந்த உடல் வாழ்க்கையைக் கடவுள் வழிபாட்டுக்கென்றே பயன் படுத்துகின்றனர். பிறக்கவும் இறக்கவும் செய்கின்ற உடலின் துணைகொண்டு அவர்கள் கடவுளை வழுத்துகின்றனர். வழுத்தி மேன்மையடைந்தவர்கள் பிறவாமை என்றைக்கும் இறவாமையாய் வந்து இறைவனை அடைந்து விடுகின்றனர். இதுவே அவர்கள் பெற்ற பெருமை.

அருளை நாடாதவர்கள் நிலையற்ற உடல் வாழ்க்கையை வைத்துக்கொண்டு நிலையற்ற உலக இன்பங்களை அனுபவிக்கின்றனர். இன்பமாகத் துவக்கி அது துன்பமாக முற்றுப் பெற்று விடுகிறது. துன்பக்கடல் என்று அதைச் சொல்லுவது மிகையாகாது. அதே உடலை வைத்துக்கொண்டு கடவுளை அடைகின்றவர்கள் பாக்கியவான்கள். நிலையற்றதைக்கொண்டு நிலை பேறுடையதை அவர்கள் அடைந்துவிடுகின்றனர். கடவுளை அடைகின்றவர்களிடம் மற்றொரு

மகிமை உண்டு. கடவுளின் அருகில் செல்லுமளவு அவர்களிடத்தில் வீண் விவாதம் எதையும் நாம் காண்பதில்லே. வெறும் குடத்தில் ஓசையை உண்டுபண்ணலாம். குறை குடம் ததும்புகிறது. நிறை குடம் ததும்புவதில்லே. இறைவனுடைய அருளுக்கு முற்றிலும் பாத்திரமானவர்கள் வெறுமனே பேசிக்கொண்டிருப்பதில்லே. தேனீ போன்றவர்கள் அவர்கள். வீட்டு ஈ உட்காருவது போன்று அழுக்கின் மீது தேனீ உட்காருவதில்லே. அழுக்கை அது புசிப்பதும் கிடையாது. மலரை நாடி தேனீ போகிறது. மலருக்குப் பக்கத்தில் வந்ததும் அது மகிழ்ச்சியில் ரீங்காரமிடுகிறது. புஷ்பத்தின் மீது உட்கார்ந்து தேனை அருந்துங்கால் அது ஓசையைக் கிளப்புவதில்லே. இறைவனுடைய அருளுக்குப் பாத்திரமானவர்களின் நிலே அங்ஙனம் பேசாமையாகும் என்று அதை அடையப் பெற்றவர்கள் பகர்ந்துள்ளனர். அவர்கள் பேச்சற்றிருப்பதே அவர்கள் அடைந்துள்ள பெருநிலேக்குச் சான்ருகும்.

கருணே என்பது அருளின் மற்ரெரு பெயர். உயிர்களே உய்விக்கவேண்டும் என்கின்ற நோக்கம் இறைவனிடம் ததும்பிக்கொண்டிருக்கின்றது. குழந்தைகளின் முன்னேற்றத்தில் சர்வகாலமும் கண்ணும் கருத்துமாய் தாய் இருப்பது போன்று அருள் நிறைந்த இறைவன் உயிர்களே உய்விப்பதற்கு யாண்டும் கருத்துடையவனுக இருக்கின்ருன். இரக்கம் கொண்டு அவன் ஓயாது தனது நிலேத்த நிலேயையும், பிரபஞ்சத்தின் நிலேயாமையையும் அறிவித்துக்கொண்டே இருக்கின்ருன். காலேயில் உதயமான சூரியன் மாலேயில் அஸ்தமனமாகிறது. உலகம் நிலேயாமை அதன் மூலம் விளக்கப்படுகிறது. அதிகாலேயில் அலர்ந்த பூ நண்பகலில் வாடி யொழிகிறது. உலகம் நிலேயற்றது என்பதற்கு அது

அறிகுறியாகிறது. விருப்பத்துக்குரிய உணவு உடலுக்குள் வந்ததும் வெறுப்புக்குரிய மலமாக மாறிவிடுகிறது. உலக வாழ்வு நிலையற்றது என்பதை அந்நிகழ்ச்சி குறிக்கிறது. செழித்து வளரும் செடி சில நாட்களில் சருகாக உலர்ந்து போய்விடுகிறது. உலகம் நிலையற்றது என்பதை அது நிரூபிக்கிறது. உலகில் ஒருபுறம் உயிர்கள் பிறந்துகொண்டே இருக்கின்றன. மற்றொருபுறம் அவைகள் மறைந்துகொண்டே வருகின்றன. பிறப்பைக் குறித்து ஒரு கூட்டம் மகிழ்வடைகிறது. மரணத்தைக் குறித்து மற்றொரு கூட்டம் மண்டையில் அடித்துக்கொண்டு மனம் நொந்து அழுகின்றது. இப்படி இயற்கையில் ஓயாது நமக்குப்பாடம் புகட்டப்படுகிறது. இந்தப் பாடத்தை அறிந்து கொள்ளுதற்கு நமக்கு ஒருபிறவி போதுவதில்லை. ஏதோ சில வேலைகளில் உலகப்பற்று நீங்கி தெய்வப்பற்று தாற்காலிகமாக வருகிறது. அதிவிரைவில் அது மறைந்துபோய் விடுகிறது. உலக வாசனையே உயிர்களை விரைந்து இழுக்கிறது. திரும்பவும் இயற்கை அடிகொடுக்கிறது. அங்ஙனம் நித்திய அநித்திய வஸ்து விசாரம் சிறிது ஏற்படுகிறது. பிறகு அது போய்விடுகிறது. பழையபடி உலகப்பற்று, இப்படிப் பல பிறவிகளில் பரிபாகம் அடைந்தான பிறகு உலகப்பற்று வேண்டாம் என்றும் கடவுள்பற்றே வேண்டுமென்றும் தீவிரமான அருள்நாட்டம் வருகிறது. அப்படிப் பக்குவம் அடைந்துவிட்டதின் அறிகுறிகள் இருக்கின்றன. நல்ல உணவை மனிதன் விருப்புடன் உண்கின்றான். பிறகு அதை வாந்தி பண்ணிவிடுகின்றான். வாந்தி பண்ணியதை மறுபடியும் உண்ணவேண்டும் என்னும் அவா மனிதனுக்கு வருவதில்லை. உலகப்பற்று நமக்கு ஒவ்வாது என்று அதைப் புறக்கணிக்கின்றவன் திரும்பவும் அதில் நாட்டம் கொள்வதில்லை. பசியால் வருந்த

அவன் ஆயத்தமாய் இருக்கின்ருன், வாந்தி பண்ணியதை அருந்த அவன் ஆயத்தமாய் இருப்பதில்லை. இறைவனுடைய அருள் கிட்டாவிட்டால் அதன் பொருட்டு நெடுங் காலம் அவன் காத்திருக்க ஆயத்தமாய் இருக்கின்ருன். மருள் நிறைந்த மாயப்பிரபஞ்சத்தில் மயங்கி அவன் பிரவேசிப்பதில்லை. மரத்தினின்று கனிந்து விலகிக்கொண்ட கனி திரும்பவும் மரத்தில் போய் ஒட்டுவதில்லை. பிரபஞ்சம் என்னும் மரத்தினின்று கனிந்து விலகிக்கொண்ட நன்மகன் ஆகின்ருன் அருள் நாட்டமுடையவன். அப்பொழுது அவனுக்கு ஓர் உண்மை வெளியாகின்றது. அதைப் பரி

**வாய் எனக்கு நீ அறிவிக்கவந்ததே பரிபாக காலமலவோ**

என்று தாயுமானவர் இயம்புகின்ருர். தூயதான இரும்பைத் தன் மயம் ஆக்கிக்கொள்ளக் காந்தம் சதா காத்திருப்பது போன்றும், தன்னிடத்திருந்து புறப்பட்ட மழை நீரைத் திரும்பவும் தன்னிடத்து எடுத்துக்கொள்ள கடல் காத்திருப்பது போன்றும் இறைவன் உயிர்களை யெல்லாம் தன்னில் லயமாக்கிக்கொள்ளுதற்குக் கருணையே வடிவெடுத்தவனுகக் காத்திருக்கின்ருன். இறைவன் ஆகிய மெய்ப்பொருளில் கலந்துகொள்ளத் தகுதியுடையவனுக ஜீவன் மாறியமைகின்ற காலம் பாராட்டுதற்குரிய நல்ல காலமாகும். பரிபாக காலம் என்று அதைப் பகர்வது முற்றிலும் பொருத்தமானது. பல பிறவிகளில் செய்த முயற்சியின் விளைவு அது.அதைக் குறித்து ஜீவன் பெருமகிழ்ச்சி அடைகின்ருன். பிரபஞ்ச வாழ்வு என்னும் அக்ஞான இருளைத் திரும்பிப் பார்க்காது அருள் என்னும் பேரொளியில் அவன் கலக்கின்ருன். எங்குத் திரும்பிப் பார்த்தாலும் அம்மெய்ப்பொருளே நீக்கமற நிறைந்திருந்து உயிர் வகைகளைப்பக்குவப்படுத்தி தனதுபரிபூரண ஆனந்தத்தில் அது சொந்தமாக்கிக்கொள்கிறது. அருள்நிலை அடைந்தவர்களுக்கு இவ்வுண்மை தெளிவாகிறது. இக்கோட்பாடுகளெல்லாம்மேற்கூறிய பாடலின்கண் அடங்கியிருக்கின்றன.

---

## பரிபூரணானந்தம் - 3

ஆராயும் வேளையில் பிரமாதி யானாலும்
ஐயவொரு செயலுமில்லை
அமைதியொடு பேசாத பெருமைபெறு குணசந்த்ர
ராமென இருந்தபேரும்
நேராக வொருகோபம் ஒருவேளை வர அந்த
நிறைவொன்று மில்லாமலே
நெட்டுயிர்த் துத்தட் டழிந்துளறு வார்வசன
நிர்வாக ரென்றபேரும்
பூராய மாயொன்று பேசுமிட மொன்றைப்
புலம்புவார் சிவராத்திரிப்
போதுதுயி லோமென்ற விரதியரும் அறிதுயில்
போலேயிருந்து துயில்வார்
பாராதி தனிலுள்ள செயலெலாம் முடிவிலே
பார்க்கில்நின் செயலல்லவோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே.

*ஆராய்ச்சி பண்ணுமளவு ஒருவனுக்கு அறிவு வளர்கிறது. ஆராய்ச்சி என்னும் மனோ முயற்சி ஒரு விதத்தில் தேகப்பயிற்சிக்கு ஒப்பானது. பிறர் செய்கிற தேகப்பயிற்சியைப் பார்த்து ரசித்துக்கொண்டிருந்தால் அப்படி ரசிக்கின்றவனுடைய உடல் உறுதி பெறாது. பிறர் தேகப் பயிற்சி பண்ணுவது போன்று தானும் ஏதேனும் ஒரு விதத்தில் பயிலவேண்டும். முறையாக உடலுக்குப் பயிற்சி கொடுக்குமளவு அது திட்பம் பெறுகிறது. மனோ முயற்சியும் அப்படிப் பட்டது. பிறர் சொல்லும் நல்ல விஷயங்களைக் கேட்டுக்*

கொண்டிருந்தால் மட்டும் போதாது. நல்ல விஷயங்கள் என்று அவைகளை அப்படியே ஏற்றுக்கொண்டாலும் போதாது. அக்கருத்துக்களை ஆராய்கின்ற அளவே அவை ஒருவனுக்குச் சொந்தமாகின்றன. நல்லுணவு எனினும் அதை ஜீரணம் பண்ணினால் தான் உடல் மயமாகிறது. நல்ல கருத்துக்கள் எனினும் அவைகளைத் துருவி உள்ளத்தில் ஓர்மைப்படுத்தினால் மட்டும் ஆராய்ச்சியாளனுக்கு அக்கருத்துக்கள் சொந்தமாகின்றன. கேட்ட அல்லது கற்ற விஷயங்களைச் சந்தேகிப்பதும், மறுப்பதும், பாராட்டுவதும், ரசிப்பதும் ஆகிய இவையாவும் ஆராய்ச்சியின் அங்கங்கள் ஆகும். உயிர் வகைகளின் செயலை ஆராய்ந்து பார்ப்போம்.

உயிர்களுக்கு ஜீவாத்மாக்கள் என்னும் பெயரை வேதாந்தம் வழங்குகிறது. இயற்கையில் கட்டுண்டு கிடப்பவர்களெல்லாம் ஜீவர்களே. ஜீவாத்மாக்களைத் தொகுத்துப் பொதுவாக புல் முதல் பிரம்மா பரியந்தம் என்று பகர்வது வழக்கம். பரிணாமத்தில் ஆரம்பதசையில் இருக்கின்ற ஜீவர்கள் புல் போன்றும், கல் போன்றும் இருக்கின்றன. ஆரம்ப நிலையில் இருக்கும் ஜீவர்களுக்கு உணர்வு இன்னும் மேலோங்கவில்லை. உணர்வு ஓங்குமளவு உயிர் பேருயிர் ஆகிறது. உணர்வின் உச்ச நிலைக்கு வந்திருப்பவர் பிரம்மா. பிரகிருதியிலே அவரும் இன்னும் கட்டுண்டு இருப்பதால் அவரை ஜீவாத்மன் என்று அழைத்தாக வேண்டும். இயற்கையினுள் கட்டுண்டு இருப்பதற்கிடையில் உயர்ந்த பதவிக்கு வந்திருப்பவர் பிரம்மா ஆகின்றார். பிரம்மபதவி என்று அவருடைய நிலையை அழைப்பது வழக்கம். தாம் விரும்பியபடி பிரம்மா எதை வேண்டுமானாலும் செய்யலாமா என்னும் கேள்வி ஆராய்ச்சிக்குரியது. பிரம்மாவின் செயல்கள் அனைத்தும் நம் கைவசத்தில் இல்லை. பிரம்மதேவனும்

தம்மை ஆராய்ச்சியின் பொருட்டு நம்மிடம் ஒப்படைத்தவர் அல்லர். அப்படியிருக்க அவரை அல்லது அவருடைய செயலை எப்படி ஆராய்வது என்னும் ஐயம் எழலாம். அவருடைய சொரூபம் எத்தகையது என்று ஆராய்ந்து தெரிந்து கொண்டால் பிறகு அவரைப்பற்றி விசாரித்துப் பார்ப்பதில் சிரமம் இல்லை. கடல் நீர் முழுதையும் ஆராய விரும்புகின்ற ஒருவன் அக்கடல் நீரில் ஒரு சிறு பகுதியை எடுத்துச் சோதனை செய்து பார்த்தால் போதும். பிறகு கடல் நீர் முழுதையும் பற்றி அவன் செய்கிற முடிவு உண்மைக்கு ஒத்திருக்கும். பிரம்மாவானவர் ஜீவர்களின் தொகை. ஏதேனும் ஒரு ஜீவனை தனித்தெடுத்துஅவனை வியஷ்டி என்றுசொல்லுவது வழக்கம். ஜீவர்களின் தொகையை சமஷ்டி என்றும் பகர்வர். வியஷ்டியாயுள்ள ஒரு ஜீவனைப்பற்றி அறிந்து கொள்ளும் அளவு சமஷ்டியாகிய பிரம்மாவைப் பற்றிய ஞானமும் நேராயிருக்கும். இக்கருத்துக்கள் **ஆராயும் வேளையில்** என்னும் தாயுமானவர் தொடரில் அடங்கியிருக்கின்றன.

ஜீவன் தனக்கென ஒரு செயல் உள்ளவனாகத் தென்படுகிறான். விரும்பியபொழுது அவன் உணவை உண்ணலாம், அல்லது உண்ணாதிருக்கலாம். உணவை மிகைப்படுத்தலாம், அல்லது குறைக்கலாம். ஓர் இடத்துக்குப் போவது அல்லது போகாதிருப்பது அவன் விருப்பத்தைப் பொறுத்தது. இந்த அளவில் ஆராய்ச்சியை நிறுத்திக் கொண்டால் ஜீவன் ஒருவனுக்கு இச்சா சுதந்திரம் அல்லது தனக்கென ஒரு செயல் இருப்பது போன்று தென்படுகிறது. பத்து நாளைக்கு வேண்டிய உணவை ஒரே தடவையில் ஏற்றுக்கொள்ளும் இச்சா சுதந்திரம் அவனுக்கு உண்டா? அது இல்லை என்பது வெளிப்படை. இரண்டொரு மாதத்

துக்கு உணவை ஏலாதிருந்து கொண்டு தன் அலுவல்களை முறையாகப் பார்த்துவர வேண்டும் என்னும் உரிமை ஓர் உயிருக்கு உண்டா? அதுவும் இல்லை என்பது தேற்றம். போக விரும்பும் இடம் மண்ணுலகிலேயே மிக அருகில் இருந்தாலும் காற்றும், மழையும், வெயிலும் அவனைத் தடைப்படுத்த முடியும். எப்பொழுதுமே எண்ணிய இடத்துக்கு எண்ணியாங்கு போவது சாத்தியமல்ல. இதற்கெல்லாம் மேலாக சாவதும், உயிர் வாழ்ந்திருப்பதும் அவன் கைவசத்தில் இல்லை. வேறு ஏதோ ஒரு சக்தி அவன் மீது ஆதிக்கம் செலுத்துகிறது. அதற்குட்பட்டே அவன் உயிர் வாழ்ந்திருக்கின்ருன், அல்லது மாய்கின்ருன். அதுதான் ஜீவாத்மாவைப்பற்றிய உண்மை. பிரம்மாவினுடைய நிலைமையும் அத்தகையதே. பிரம்மா முதல் எந்த உயிர்க்கும் தன் செயல் என்பது உண்மையில் இல்லை என்பது விசாரித்துப் பார்ப்பவனுக்கு விளங்கும். இக்கருத்துக்களை **ஐய ஒரு செயலுமில்லை** என்று தாயுமானவர் கூறுகிருர்.

செயல் புரிகின்றவர்களுக்கு இத்தகைய கட்டுப்பாடுகள் இருக்கின்றன. செயலற்றிருக்கின்ற மனிதன் ஒருவனுக்கு ஒரு கட்டுப்பாடும் இல்லை. வேண்டியவாறு அவன் செயலற்று இருந்து கொள்ளலாம் என்ற தடை ஒன்று எழலாம். செயலையெல்லாம் விட்டொழித்துவிட்டு அமைதியுற்றிருப்பது செயற்கரிய செயலே. யாரோ சிலருக்குத்தான் அது சாத்தியமாகும். மனபரிபாகத்தில் மேலே போகப்போக மனதில் நடுவுநிலையும் திறம்பெறுகிறது. மன அமைதி உடையவரையே பெருமக்கள் எனப்பகரலாம். குணசந்திரர் என்றும் அவர்களை இயம்பலாம். சந்திரன் வெளிச்சம் கொடுக்கின்ருன். ஆனல் வெப்பம் தந்து உயிர்களை அவன் வாட்டுவதில்லை. ஆதலால் அவன் தரும் வெளிச்சம் இனிமை நிறைந்

தது. இனிமை நிறைந்த மனிதனை ராமச்சந்திரன் என்றும் குணசந்திரன் என்றும் விதவிதமாய்ப் பாராட்டுகிறோம். அங்ஙனம் பெருமையே வடிவெடுத்துள்ள மேலோர்க்கும் யாது காரணத்தாலோ ஏதோ சில வேளைகளில் வெளிப் படையாகக் கோபம் மூண்டுவிடுகிறது. கோபத்தின் வசப்பட்ட மனிதன் தாற்காலிகமாகப் பயித்தியக்காரன் போன்று நடந்துகொள்கிறான். தனது நிறைநிலை எங்கேயோ மறைந்துபோய் விடுகிறது. நெட்டுயிர்த்தல் அல்லது பெரு மூச்சு விடுதல் ஒரு நொடிப் பொழுதில் ஆரம்பித்துவிடுகிறது. கொந்தளிப்பான கடலில் படகு நிலைகுலைந்து போய்விடுவது போன்று குணசந்திரர் தட்டழிந்துபோய் பொருந்தாத சொற்களைத் தாறு மாறாக உளறுகின்றனர். குணக்குன்று போன்றவர் என்னும் பெரு நிலையில் இருப்பவர்களுக்கே எதிர்பாராது இத்தகைய தடுமாற்றம் வந்துவிட்டால் அவர் களிடத்திலும் இச்சா சுதந்திரம் அல்லது தம் சொந்தச் செயல் என்பது இல்லை என்றுதானே முடிவுகட்டவேண் டும்! இக்கருத்துக்களை அமைதியொடு பேசாத பெருமை பெறு குணசந்த்ரரா மென இருந்த பேரும் நேராக ஒரு கோபம் ஒரு வேளை வர அந்த நிறைவொன்றும் இல் லாமலே நெட்டுயிர்த்துத் தட்டழிந்து உளறுவார் என்று தாயுமானவர் பகர்கிறார்.

வசனநிர்வாகர் என்பவர் சொல்வேந்தர் ஆகின்றனர். நாவைக் காக்க அவர்கள் கற்றிருக்கின்றனர். நாவுக்கு அரசர் நயம்படாத மொழிகளை மொழியார். இன்சொற் களையே அவர்கள் பேசுவார்கள். இன்சொற்கள் என்றா லும் அச்சொற்கள் நலம் தரமாட்டா என அவர்கள் அறிவார் களானால் அத்தகைய நலம் தராப் பேச்சுக்களையும் பேசமாட் டார்கள். பேசவேண்டிய அவசியம் ஏற்பட்டவிடத்து

சொற்களை அளவெடுத்தே அவர்கள் மொழிவார்கள். ஐந்து வார்த்தைகளில் முடிக்கவேண்டிய விஷயத்துக்கு அனாவசியமாக ஆறு வார்த்தைகள் உபயோகிக்கமாட்டார்கள். குறைபடப் பேசினால் அல்லது பேசாது வெறுமனே இருந்துவிட்டால் அதனால் கேடுவிளையும் என்று அவர்களுக்குத் தோன்றுமாகில் அச்சந்தர்ப்பத்தில் அவர்கள் பேசியே தீருவர். சொற்களை மிகைபடக் கையாளுதல் அவசியமென்றால் அதற்கும் தயங்கமாட்டார்கள். ஆகவே மிகைபடப் பேசுதல் என்ற குற்றத்துக்கோ, குறைபடப் பேசுதல் என்ற குற்றத்துக்கோ, பேசாதிருத்தல் என்ற குற்றத்துக்கோ ஆளாகாதிருப்பவர்களே வசனநிர்வாகர் என்று அழைக்கப்படுகின்றனர். அத்தகைய சொல்வேந்தர் பொருத்தமான இடத்தில், பொருத்தமான சொற்களையே, பொருத்தமாகப் பேசுகின்றனர். இங்ஙனம் அவர்கள் செய்வதே அவர்களுடைய பண்பாட்டுக்கு அறிகுறியாகும். ஆனால் அத்தகைய மேலோரும் சிற்சில இடங்களில் பேசவேண்டிய ஒரு விஷயத்தை ஒதுக்கிவைத்துவிட்டுப் பேசத்தகாத ஏதோ ஒரு விஷயத்தை முறை தவறிப் பிதற்றுவார்களானால் அது பரிதாபத்துக்குரிய செயல் ஆகும் அன்றோ! வசன நிர்வாகர் சிற்சில வேளைகளில் இப்படிச் செய்து விடுகின்றனர் என்பதை வசன நிர்வாகர் என்ற பேரும் பூராயமாய்ஒன்று பேசுமிடம் ஒன்றைப் புலம்புவார் என்ற தொடரால் தாயுமானவர் குறிப்பிடுகின்றார். அத்தகையவர்கள் முற்றிலும் தங்களுக்குத் தாங்களே வேந்தர்களா? அல்லது அவர்களை ஆட்டுவிக்கும் வேறு யாதோ ஒன்று இருக்கிறது என்று முடிவுகட்டுவதா?

நல்வாழ்வுக்கேற்ற நியதிகளைத் தீவிரமாகக் கையாளுதற்குத் தீர்மானம் செய்துகொண்டால் அது விரதம் என்னும் பெயர் பெறுகிறது. விரதங்களுள் பெரியது சிவராத்திரி

விரதம். அந்த விரதம் எடுத்துக்கொண்டவன் ஒருபகலும் ஓர் இரவும் முறையாக அதை அனுஷ்டித்தாகவேண்டும். உண்ணுது, உறங்காது இருப்பது அவ்விரதத்தின் புறச் செயலாகும். புறச் செயல்களைவிட மிகக் கடினமானது அகச் செயல். விரதி ஒருவன் மனதை எந்த நிலையில் வைத் திருக்கிருன் என்பது மிக முக்கியமானது. மனிதன் எப்படி யாவது உண்ணுது இருந்துவிடலாம். ஆனல் உணவைப் பற்றி எண்ணுது இருப்பது மிகக் கடினம். என்றைக்கு ஒரு நாள் ஒருவன் உண்ணுதிருக்கின்ருனே அன்றைக்குத்தான் உணவைப்பற்றிய எண்ணம் மிக வேகமாய் மனதில் உதிக் கும். அத்தகைய எண்ணத்துக்கு உடந்தையாயிருக்கும் ஒவ்வொரு வேளையிலும் விரதம் கலைகிறது. தெய்வபக்தி யில் ஆழ்ந்து மனதைத் திருப்பினலொழிய அது திரும்பத் திரும்ப உணவைப் பற்றியே சிந்தனை செய்யும். இரவு வேளையில் பசியின் கொடுமையும், உறக்கத்தின் ஆதிக்கமும் ஒன்று சேர்ந்து மனிதனை வாட்டும். உறக்கம் வலிவுபெறு தற்கு இரண்டு சந்தர்ப்பங்கள் இருக்கின்றன. விரும்பிய வாறு உணவை மிகைபட ஏற்றிருப்பவனுக்கு நல்ல உறக் கம் பிடிக்கின்றது. உண்ணுது தளர்வுற்றிருக்கின்றவனுக் கும் தன்னையறியாது உறக்கம் வந்துவிடுகிறது. உண்டிக் கும் உறக்கத்துக்கும் அடிமைப்படேன் என்று உறுதிகொண் டிருப்பவன் சிவராத்திரி விரதத்தை நன்கு அனுஷ்டிப்பவன் ஆகின்ருன். அதில் வெற்றியடையுமளவு மனம் உறுதி கொள்கின்றது. இச்சா சுதந்தரம் அத்தகைய மனிதனுக் குப் பெரிதும் இருக்கிறது என்றே இயம்பலாம். அங்ஙனம் உறுதிபெற்ற மனது ஆத்மசாதனத்துக்குத் தகுதி யுடைய தாகிறது. உறுதி படைத்த மனிதனுக்கே தெய்வ பக்தியும், ஞானமும் நன்கு வாய்க்கின்றன.

இரவெல்லாம் விழித்திருந்து ஜபம் செய்யவும், பஜனை பண்ணவும், தியானம் பண்ணவும், சத்காலக்ஷேபத்தைக் காதுகொடுத்துக் கேட்கவும் சிவராத்திரி விரதி ஒருவன் தீர்மானம் செய்கின்றான். அத்தீர்மானத்தில் மனது தளர்வுறுங்கால் இரவு முடிவில்லாத ஊழிக்காலம் போன்று விரிவடைந்துகொண்டு போவதாக அவன் உணர்கிறான். ஊக்கத்துடன் சாதனத்தில் ஈடுபட்டிருந்தாலோ காலம்கழிவது கருத்துக்கு வருவதில்லை. நெடுநேரம் நொடிப்பொழுது போன்று பறந்தோடிவிடுகிறது. தீவிரமாக விரதத்தை அனுஷ்டிக்கின்றவனுக்கே இது சாத்தியம். பெரும்பாலர் ஒவ்வொரு நொடிப்பொழுதையும் ஒரு மணி நேரம் போன்று எப்படியாவது கழித்தாகவேண்டும். மிக எச்சரிக்கையாக, தான் விழிப்புற்றிருப்பதாக மனிதன் எண்ணுகின்றான். அந்த எண்ணம் சிறிது நேரத்துக்குள் மனிதனை அறியாது சோர்வடைந்து விடுகிறது. அப்பொழுது அவன் அலாதியான ஓர் அனுபவத்தைப் பெறுகிறான். கிட்டத்தட்ட அது யோக நித்திரைக்கு ஒப்பானது. யோகநித்திரைக்கு அறிதுயில் என்பது மற்றொரு பெயர். இந்த அறிதுயிலைக் குறித்து 'ஆங்காரம் உள்ளடக்கி, ஐம்புலனைச் சுட்டறுத்து நான் தூங்காமல் தூங்கிச் சுகம்பெறுவதெக்காலம்' என்று ஆத்ம சாதகர் ஒருவர் பகர்ந்துள்ளார். சிவராத்திரி விரதம் அனுஷ்டித்துக் களைத்துப்போய் இருப்பவனுக்கு அகங்காரம் தானே அடங்குகிறது. தூக்கம் வருகின்ற வேளையில் ஒவ்வொருவனுக்கும் அகங்காரம் எப்படி உள்ளடங்குகின்றதோ அங்ஙனம் விழித்திருக்கின்ற வேளையில் விரதி ஒருவனுக்கு ஆயாசத்தால் அகங்காரம் அடங்குகிறது. ஐம்புலன்களும் தத்தம் வேலை செய்யாது நின்று விடுகின்றன. மனிதன் மட்டும் தூங்கிவிடவில்லை, விழித்திருக்கிறான். தூங்காத

தூக்கம் போன்று அல்லது அறிதுயில் போன்று அது தென் படுகிறது. ஒருவிதத்தில் அது காலத்தைக் கடந்தநிலை.மனம் அமைதியுற்றிருக்கின்ற வேளையிலெல்லாம்,காலத்தைக்கடந்த நிலைஏதேனும் ஒருவிதத்தில் வந்தமைகிறது. தான்எச்சரிக்கை யுடன் விழித்துக்கொண்டு அமர்ந்திருப்பதாக எண்ணுகின்ற சிவராத்திரிவிரதி திடீரென்று தன்தலை ஒருபுறம்சாய்ந்துவிழப் போவதை உணர்ந்து திடுக்கிட்டு எழுந்திருப்பான்! தன்னை யறியாது தன்மீது சிறிது நேரத்துக்கு உறக்கம் ஆதிக்கத் தைச் செலுத்தி விட்டதை அவன் உணர்ந்து தன்னைத் திரும் பவும் எச்சரிக்கை படுத்திக் கொள்வான். அப்படி அவன் உறக்கத்துக்கு வசப்படுகின்ற அளவு விரதத்தினின்று பிசகி யவன் ஆகின்றான். எவ்வளவு முயன்றும் தன் செயல் என் பதைக் கடந்து வேறு ஏதோ ஒரு சக்தி தன்மீது ஆட்சி செலுத்துவதை அவன் ஒத்துக்கொண்டாக வேண்டும். இதனை சிவராத்திரிப்போது துயிலோமென்ற விரதியரும் அறிதுயில் போலே இருந்து துயில்வார் என்று தாயுமான வர் பகர்கிறார். அப்படியானல் செயல்கள் அனைத்துக்கும் யார் இறைவன் என்னும் கேள்வி எழுகிறது.

பாராதி தன்னிலுள்ள செயல்களெல்லாம் யாருடைய செயல்கள்? பார் ஆதி என்பது இம்மண்ணுலகம் முதலியன எனப் பொருள்படுகிறது. நாம் வசித்து வரும் இடம் மண் ணுலகம். இதற்கு மிக அருகில் இருப்பது சந்திரலோகம். வியாழன், வெள்ளி, சனி முதலிய கிரகங்களும் இந்த சூரிய மண்டலத்தைச் சேர்ந்தவைகள். அவைகளுக்கேற்ற செயல் களும் இருக்கின்றன. நம் செயல்களுக்கு நாம் உரிமையாளர் என்று எண்ணி வருகின்றோம். ஆனால் பூரண உரிமை நமக்கு இல்லை என்பது இதுகாறும் நிரூபிக்கப்பட்டது. பார் முதற் கொண்டு சந்திரன் சூரியன் ஆகியவர்களுக்கு அவரவர்

செயலில் பூரண சுதந்திரம் இருக்கிறதா என்பது கேள்வி. ஆகர்ஷண சக்தி அவைகளை இயக்குகின்றது என்பது வான சாஸ்திரிகள் செய்த ஆராய்ச்சியின் முடிவு. ஒவ்வொரு கோளமும் கிரகமும் தக்க இடம் பெற்று முறையாக இயங்கி வருவது ஆகர்ஷண சக்தியாலேயேயாம். வண்டிச் சக்கரத்தை வேறு ஒரு விசை இயக்குவது போன்று விண்ணில் இருக்கின்ற கிரகங்களையெல்லாம் ஆகர்ஷண சக்தி ஆட்டுகின்றது. இந்த ஆகர்ஷண சக்தியே தன் திறமையைப் பூதப் பொருளின் பருமனுக்கு ஏற்றவாறு அதனிடத்திருந்து பெறுவதாக ஆராய்ச்சியாளர் முடிவு கட்டுகின்றனர். பூதப் பொருள் நுண்ணியதாகுங்கால் ஆகர்ஷண சக்தியும் எங்கேயோ ஒடுங்கி விடுகிறது. பூதப்பொருள்களுள் பிருதிவி அல்லது மண் என்பது ஊழிக்காலத்தில் நீரில் ஒடுங்குகிறது. நீர் நெருப்பில் ஒடுங்குகிறது. நெருப்பு காற்றில் மறைகிறது. காற்று வெளியில் ஒடுங்கி விடுகிறது. வெளி மூலப்பிரகிருதியினுள் மறைந்து போகிறது. மூலப்பிரகிருதி தன் திறனை பரமாத்மனிடத்திருந்து பெற்றுள்ளது என்பது தீர்க்கதரிசிகளுடைய துணிபு. அக்னியில் உஷ்ணம் அக்னிக்கு அன்னியமல்லாது இருப்பது போன்று மூலப்பிரகிருதியின் மாயா சக்தி யாண்டும் பரம்பொருளைச் சார்ந்திருக்கிறது. ஆதலால் செயல்கள் யாவும் நேர் ஆகவோ, மறைமுகமாகவோ பரம் பொருளிடத்திருந்து வருபவைகளாம்.

ஓர் அரசாங்கத்தைச் சேர்ந்த உத்தியோகஸ்தர்களும், சிப்பந்திகளும் விரைந்து அவரவர் வினையாற்றி வருகின்றனர். பல துறைகளில் தங்கள் ஆதிக்கத்தையும் அவர்கள் செலுத்தி வருகின்றனர். அவர்களுடைய ஆதிக்கத்துக்குப் பல படித்தரங்கள் இருக்கின்றன. அவர்களுள் ஒவ்வொருவரும் தம் தம் விருப்பத்துக்கேற்ற பிரகாரம் வினையாற்றி

வருபவர் போன்று தென்படுகின்றனர். ஆட்சி முறையை நன்கு ஆராய்ந்து பார்ப்பவர்க்கு இச்செயல்களுக்கெல்லாம் அடிப்படையான உண்மை ஒன்று புலனாகும். ஆதிக்கம் அனைத்துக்கும் பிறப்பிடம் அரசன். அவன் வேலை ஒன்றும் செய்யாது வெறுமனே உட்கார்ந்திருப்பவன் போன்று தென் படுகின்றான். ஆயினும் எந்த வேளையில் வேண்டுமானாலும் எந்த உத்தியோகஸ்தனுடைய செயலையும் மாற்றவோ, நிறுத்தி விடவோ அரசனுக்கு இயலும். இச்சா சுதந்திரம் படைத்திருப்பவர் போன்று தென்படும் அரசாங்க உத்தி யோகஸ்தர்களுக்கு உண்மையில் தம் செயல் என்பது இல்லை. ஆட்சிக்கு இருப்பிடமாகிய பார்ஆளும் அரசன் செயலே இத்தனை வித ஆட்சிகளுடைய செயல்களாகத் தென்படுகின்றன.

அண்டம் முழுதையும் ஆராய்ந்து பார்த்தால் எண்ணிக் கையில் அடங்காத சூரிய மண்டலங்கள் இருக்கின்றன. இப் பார் உலகம் போன்று உயிர் வாழ்க்கைக்குத் தகுதியான கோளங்களும் இருக்கின்றன. பரந்து விரிந்துள்ள இப்பாரி னுள் எண்ணிறந்த ஜீவகோடிகள் இருக்கின்றன. அவை யாவும் இச்சாசுதந்திரம் படைத்து தத்தம் வாழ்க்கையை நடத்தி வருபவை போன்று தென்படுகின்றன. ஓர் உயிர்ப் பிராணி மற்றோர் உயிருக்கு இரையாகின்ற காட்சியையும் காண்கின்றோம். அச்செயலில் சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் என்னும் மூவிதத் தொழிலும் அடங்கியிருக்கின்றன. உணவு ஆகும் உயிர்க்கு சம்மாரம். அதை உண்டு வாழும் உயிர்க்கு ஸ்திதி. அது நிலைபெற்றிருப்பதனால் அதனிடத் திருந்து அதன் சந்ததியாக மற்றோர் உயிர் தோன்று கிறது. ஒரு வேளையில் சிருஷ்டிக்கப்படுகின்ற உயிர் மற் றோர் வேளையில் துடைக்கப் பெற்று வேறு ஓர் உயிர்க்கு

உணவாகிறது. இப்பெரு நிகழ்ச்சி நிகழ்ந்து கொண்டிருப்பதற்கிடையில் ஒவ்வொரு ஜீவனும் தனது செயலுக்குத் தானே கர்த்தா என்று நினைக்கிறது. அந்த நினைப்புக்கேற்ப வினைப்பயனும் தனக்கு வந்தமைகிறது. தன்னைக் கர்த்தா வென்று எண்ணிக்கொள்ளும் உயிர்களுக்கு வினைப் பயனுக்கு ஏற்ப பிறவிகளும் அழிவும் மாறி மாறியமைகின்றன. ஜீவ நிலையில் வைத்து ஆராயுங்கால் அவரவர் வினையும் வினைப்பயனும் ஒழுங்காக நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன எனப் புலப்படுகிறது. இத்தனைகோடி உயிர்களின் இத்தனைவித செயல்களும் உண்மையில் பெரிய பொருளாகிய ஈசனிடத்திருந்து வந்த பெரும் செயலின் கிரணங்கள் எனக் காண்கின்றவனுக்குக் காட்சி இன்னொருவிதமாக மாறிவிடுகிறது. அரசனிடமிருந்து வந்த ஆதிக்கத்தை ஒவ்வொரு அதிகாரியும் தன் தன் சொந்த அதிகாரம் என்று சிறிது காலத்துக்கு அகங்கரிப்பது போன்று பரம்பொருளிடத்திருந்து வந்துள்ள செயலில் சிறு சிறு பகுதிகளை ஒவ்வொரு ஜீவனும் தன் செயலென்று அகங்கரித்து அதற்கேற்றவாறு அந்த ஜீவன் ஜனன மரணங்களில் உழன்று செல்கிறது. எல்லாம் உண்மையில் அவன் செயலே என்று கண்டுகொண்டவர்க்கே அகங்காரம் அடியோடு அகன்று போய்விடுகிறது. முற்றிலும் அப்பெரிய பொருளைச் சார்ந்திருப்பதைத் தவிர தனக்கு வேறு கதி ஒன்றும் இல்லை என்னும் உணர்வும் அப்பேருண்மையைக் கண்டு கொள்பவனுக்கே வருகிறது. நமது வாழ்வு என்னும் பெரிய செயலை ஆராய்ந்து பார்ப்போமானால் புல் முதல் பிரம்மாபரியந்தம் எல்லா உயிர்களும் இறைவன் ஒருவனுடைய செயலையே அவரவர் திறமைக்கும் சூழ்நிலைக்கும் ஏற்ப செய்து வருகின்றனர் என்பது தெளிவாகும். அதைத் தெரிந்துகொண்டவர்

நீக்கமற எங்கும் நிறைந்துள்ள பரிபூரணப் பெரும்பொரு ளையே போற்றியிருந்து, அப்பெரிய பொருளினுள் இரண் டறக் கலக்கின்றனர். இப்பெரிய கோட்பாட்டைப் பாராதி தனில் உள்ள செயலெல்லாம் முடிவிலே பார்க்கில் நின் செயல் அல்லவோ என்னும் தாயுமானவர் அடிகள் விளக்கு கின்றன. இக்கருத்துக்கள் யாவும் மேற்கூறிய தாயுமானவர் பாடலில் அடங்கியிருக்கின்றன.



# பரிபூரணனந்தம் - 4

அண்டபகி ரண்டமும் மாயா விகாரமே
அம்மாயை யில்லாமையே
யாமெனவும் அறிவுமுண் டப்பாலும் அறிகின்ற
அறிவினை யறிந்துபார்க்கின்
எண்டிசை விளக்குமொரு தெய்வஅரு ளல்லாமல்
இல்லையெனு நினைவும்உண்டிங்(கு)
யானென தறத்துரிய நிறைவாகி நிற்பதே
இன்பமெனும் அன்பும்உண்டு
கண்டன எலாம்அல்ல என்றுகண் டனைசெய்து
கருவிகர ணங்களோயக்
கண்மூடி யொருகண மிருக்கஎன் ருற்பாழ்த்த
கர்மங்கள் போராடுதே
பண்டையுள கர்மமே கர்த்தா வெனும்பெயர்ப்
பக்ஷம்நான் இச்சிப்பனோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந்தமே.

*பிரபஞ்சத்தின் தொகைக்கு அண்டம் என்று பெயர். அதில் நமக்குத் தென்படும் பகுதி எண்ணிக்கையில் அடங்காதது ஆகிறது. நமக்குச் சொந்தமாயுள்ளது ஒரு சூரியன். அதைச் சுற்றிப் பல கிரகங்கள் வந்துகொண்டிருக்கின்றன. இது ஒரு சூரிய மண்டலம். இதுபோன்று கணக்கற்ற சூரிய மண்டலங்கள் இருக்கின்றன. தொலைவில் உள்ள சூரியர்கள் நக்ஷத்திரங்களாக நமக்குத் தென்படுகின்றன. அவைகளைச் சுற்றிக் கொண்டு எத்தனை கிரகங்கள் வானவெளியில் அமைந்திருக்கின்றனவென்று நாம் உறுதிகூற முடியாது.*

தூரதிருஷ்டிக் கண்ணுடிகளுக்குப் பிரகாசித்துக்கொண்டிருக்கும் நக்ஷத்திரங்களைப் பற்றியசெய்தி ஏகதேசம் எட்டுகிறது. இங்ஙனம் நமக்கு எட்டுகின்ற பகுதிகள் அனைத்தையும் தொகுத்து எடுத்து அண்டம் எனப் பகரலாம். இதற்கப் பால் பகிரண்டம் என்னும் தலைப்பின் கீழ் அனந்தம்கோடி பகுதிகள் இருக்கின்றன. அவைகளையெல்லாம் கணக்கிட யாரே வல்லவர்! அவை யாவும் ஸ்தூல வடிவங்கள் எடுத்திருக்கின்றன என்ருலும் அவைகளைக் கணித்துவிட யாருக்கும் இயலாது. அகண்டாகாரத்தில் அவை யாவும் விரிந்து ஓடிக்கொண்டிருக்கின்றன என்று பகர்வதற்கு மேல் நாம் ஒன்றும் செய்துவிட முடியாது. அளவையில் அடங்கியுள்ள நமது அறிவைக்கொண்டு அளவையில் அடங்காத அகண்டாகாரப் பொருளை அறிந்து கொள்வது எங்ஙனம்? ஆயினும் யுக்திக்குப் பொருந்துகின்ற ஒரு முடிவுக்கு நாம் வரலாம். நமக்குக் கட்புலனுகின்ற இந்த சூரியன், சந்திரன், பூமி போன்ற இயற்கை அமைப்பு எங்கும் நிறைந்து அகண்டாகாரமாய் விரிந்துள்ளது. ஓர் உள்ளங்கை அளவு நீர் போன்றது நாம் காணும் பிரபஞ்சம். கடல் நீர் போன்றது நம் அறிவுக்கு எட்டாத பகுதி. உள்ளங்கைநீரின் அமைப்பை அறிந்து கொண்டால் கடல் நீர் அனைத்தின் அமைப்பையும் அறிந்து கொண்டதற்கு ஒப்பாகும். அதே பாங்கில் பிரபஞ்சத்தின் கட்புலனுகின்ற பகுதியைப்பற்றிய உண்மையைத் தெரிந்து கொண்டால் கட்புலனுகாத பெரும் தொகுதியைப் பற்றிய உண்மையையும் தெரிந்து கொண்டவர் ஆகின்ருேம்.

இதைப்பற்றிய உண்மைதான் என்ன என்று விசாரித்துப் பார்ப்போம். இயற்கை முழுதுக்கும் மாயை என்பது மற்ருெரு பெயர். மாயாவாதம் என்பதைப்பற்றிய தவறுதலான கொள்கை பலர்க்கிடையில் இருக்கிறது. மாயை

என்னும் சொல்லை சூன்யமென்றும், ஒன்றுமில்லாத பூஜ்யம் என்றும் பலர் பொருள் படுத்துகின்றனர். உண்மை அதுவன்று. மாயைக்குகந்த விளக்கம் சான்றோர்களிடமிருந்து வந்திருக்கிறது. **யா மா ஸா மாயா** என்பது மாயைக்கு சம்ஸ்கிருதத்தில் அமைந்த விளக்கம் ஆகிறது. **யா** எது **மா** ஒரு க்ஷணத்துக்கு முன்பு இருந்தது போன்று அடுத்த க்ஷணத்தில் இருப்பதில்லையோ **ஸா** அதுவானது **மாயா** மாயை. இயற்கையானது ஒரு நொடிப்பொழுதுக்கு முன்பு இருந்தது போன்று ஒரு நொடிப்பொழுதுக்கு பின்பு இருப்பதில்லை. ஓயாது அது உருமாறி அமைந்து கொண்டிருக்கிறது. ஆதலால் அதற்கு இயற்கை என்னும் பெயர்வந்தது. எது ஓயாது இயங்குகிறதோ அது இயற்கை. வானத்தில் தென்படும் மேகமானது சூன்யம் அல்லது வெறும் தோற்றமல்ல. அதன் வடிவம் மாறிமாறி அமைந்து கொண்டிருக்கிறது. கார்மேகமாக அல்லது வெண்மேகமாக நிறம் மாறுகிறது. நிறமற்றும் அது இருக்கமுடியும். இவைகளெல்லாம் மேகத்தின்கண் உண்டாகின்ற விகாரங்களாம். வெவ்வேறு வடிவெடுக்கும் தன்மைக்கு விகாரம் என்று பெயர். தோன்றா நிலையிலும் அது இருக்க முடியும். பிரபஞ்ச முழுதும் ஓயாது உருமாறி அமைந்து கொண்டிருக்கிறது. நிலைமாறி அமைவதும் அதற்குச் சாத்தியம். தோற்றத்தினின்று தோன்றா நிலைக்குப் போய்விடுவதும் அதற்கு இயலும். தோன்றா நிலை என்பதற்குப் பொருள் சூன்யமல்ல. நீராவி கட்புலனாவதில்லை. ஆனால் அது சூன்யமாய்ப் போய்விடவில்லை. பிரபஞ்சம் முழுதையும் பற்றிய உண்மை இதுவே. இக்கோட்பாட்டை **அண்டபகிரண்டமும் மாயா விகாரமே** என்கிறார் தாயுமானவர்.

மாயாவிகாரத்தைப் பற்றி இரண்டு அல்லது மூன்று உபமானங்களைக் கொண்டு அறிந்துகொள்வது அவசியமா

கிறது. நமக்குப் பயன்படும் வஸ்துக்களில் முக்கியமான தொன்று நீர். இது மூன்று நிலைகளில் மாறி மாறி அமைகிறது. ஆவியாய் உள்ள நிலை ஒன்று. அந்நிலையில் தாகத்தைத் தணித்துக் கொள்ளுதற்கு அது உதவாது. நீராவி யந்திரத்தை இயக்குதற்கு அது உதவுகிறது. கொஞ்சம் இறுகி அது நீர் ஆகிறது. அப்பொழுது உணவாகவும், பானமாகவும் அது உதவுகிறது. நீரிலே கடல் நீர், மழை நீர், ஆற்று நீர், சேற்று நீர், கிணற்று நீர், சாக்கடை நீர்—இப்படியெல்லாம் பல வடிவங்கள் உண்டு. நம் உடலில் ரத்தமாய் இருப்பதும் நீரின் விகாரம். ஒரு புண்ணில் சீழ் ஆக இருப்பதும் அதன் விகாரம். துணியில் ஈரமாய் இருப்பதும், பூமியில் சதுப்பு ஆக இருப்பதும், களிமண்ணில் பசைவாய் இருப்பதும் அதே நீரின் விகாரங்கள் ஆகின்றன. மிகைபட உறைந்துவிடும்பொழுது அது பனிக்கட்டி ஆகிறது. கல்போன்ற அதை அப்பொழுது கையில் எடுத்துக் கையாளலாம். வேறு பொருள்களிடத்து தணுப்பை உண்டு பண்ணுதற்கும் அது உதவும். ஒரு பெரிய மலையாகவும் அது நிலைத்திருப்பதுண்டு. சிறு நீர்த்திவலைகளாகி சூரிய வெப்பத்தால் வானவில்லாக வடிவெடுக்கவும் அதற்கு இயலும். இத்தனைவிதமான விகாரங்கள் நீர் என்னும் அப்பொருளின் வெறும் மாயா விகாரங்களாம். அவ்விகாரங்களை முன்னிட்டு பொருள் அழிந்துபட்டோ மாறுபட்டோ போய்விடவில்லை. மாறுபாடுகளெல்லாம் புறத்தோற்றங்களே. அதே பாங்கில் பிரபஞ்சமாகவும், பிரபஞ்சத்தில் இத்தனைவிதமான வேறுபாடுடைய பொருள்களாகவும் அமைந்திருப்பது ஒரே மூலப்பொருள்.

பொன்னால் செய்யப்பட்ட நகைகள் எண்ணிறந்தவைகளின் ரூபங்கள் மாறி மாறி அமைகின்றன. அதற்கேற்ப

பெயர்கள் மாறியமைகின்றன. அத்தகைய நாமரூபங்களில் கருத்தை வைப்பவர் ஒரு கூட்டத்தார். எல்லா நாம ரூபங் களுக்கும் அடிப்படையாக முற்றிலும் தன்மயமாய் இருக்கும் தங்கத்தைப் பொருள்படுத்துபவர் மற்றொரு கூட்டத்தார். யாண்டும் தங்கமாய் இருப்பது அதன் யதார்த்த நிலே. வேறு வேறு நகைகள் என்னும் மாயா விகாரங்களே எடுப்பது அதன் புறத் தோற்றநிலே. பிரபஞ்சமாகத் தோன்றி இருப் பதற்கிடையிலும் மூலப்பொருள் எப்பொழுதும் தன்மயமாய் இருக்கிறது. அந்த மூலப்பொருளேயே கடவுள் என்றும், நித்திய வஸ்து என்றும் இன்னும் பல பெயர்களே இட்டும் அழைக்கின்றோம்.

மற்றொருசான்று. திரையின்மீது விதவிதமான படங் களேத் தோற்றுவிக்கின்றோம். அது படக்காட்சி என்னும் பெயர் பெறுகிறது. தென்படுகின்ற படங்கள் விதவிதமான பாங்குடையவைகளாய் இருக்கின்றன. நல்லவை கெட்டவை, துன்புறுத்துபவை இன்புறுத்துபவை—இப்படி எல்லாம் படங்கள் வந்து அமைகின்றன. இப்படங்களேக் காட்டுதற் கேற்ற யந்திரம், கொட்டகை, திரை முதலியன இருக்கின் றன. படங்களேப் பார்த்துவிட்டு கொட்டகைக்கோ, யந்தி ரத்துக்கோ, திரைக்கோ மதிப்புப் போடலாகாது. நல்ல படம் காட்டுகிற கொட்டகைக்கு அதிக விலே கொடுக்கலாம் என்றும், கீழானபடம் காட்டுகிற கொட்டகைக்குக் குறைந்த விலே கொடுக்கவேண்டும் என்றும் தீர்மானிக்கலாகாது. கொட்டகை அமைப்பில் தென்படுகின்ற படங்கள் முக்கிய மானவைகள் அல்ல. படங்களே ஒருபுறம் ஒதுக்கி வைத்து விட்டுக் கொட்டகையையும், யந்திரத்தையும், திரையையும் தம் அளவில் மதிப்புப் போடவேண்டும். அத் திரையின் மீது தோன்றும் மாயா விகாரங்களாகும் படங்கள். அப்

படங்களைக் காரியப்படுத்துதற்கு யந்திரமும், திரையும், கொட்டகையும் உதவுகின்றன. இப்பிரபஞ்சக் காட்சி என்னும் படத்தை மூலப்பொருளாகிய சிதாகாசம் அல்லது கடவுள் தன்மீது தோற்றுவித்துக் கொண்டிருக்கின்றது. கொட்டகையில் யந்திரம் வேறு, திரை வேறு, கட்டிடம் வேறு. ஆனால் இப்பிரபஞ்ச அமைப்பிலோ மாயா காரியமாய் இருக்கும் பிரபஞ்சம் என்னும் படமும், மாயாவான் ஆக இருக்கும் திரையும் ஒன்றேயாம். தன்மீது இத்தனை வடிவங்களைக் காட்டிக்கொள்ளும் சக்தி கடவுள் ஆகிய அந்த மூலப்பொருளுக்கு உண்டு. ஆக, நீர்த்திவலைக்கு அன்னியமாக வானவில் இல்லை; தங்கத்துக்கு அன்னியமாக நகை இல்லை; திரைக்கு அன்னியமாகப் படம் இல்லை. அப்படிப் பரம்பொருளுக்கு அன்னியமாகப் பிரபஞ்சம் என்னும் மாயா விகாரங்கள் இல்லை. இதை நாம் உள்ளபடி யுக்திபூர்வமாக அறிந்துகொள்ளும்பொழுது நல்லறிவு அமையப்பெற்றவராகின்றோம். இக்கோட்பாட்டை அம்மாயை இல்லாமையே ஆம் எனவும் அறிவும் உண்டு என்கிறார் தாயுமானவர்.

இதை விசாரித்து அறிந்துகொள்ளும் அறிவு யாரோ சிலருக்குத்தான் உண்டு. பெரும்பாலர்க்கு மாயாவிகாரங்கள் உண்மை; மெய்யறிவு படைத்துள்ள சிலருக்கு மாயா விகாரங்களைக் காரியப்படுத்தும் சிதாகாசம் அல்லது சித் அம்பரம் உண்மை. இத்தகைய அறிவுதான் நமக்கு எங்கிருந்து வந்தது என்று எண்ணிப்பார்க்கவேண்டும். அருள் நிறைந்தவர் கடவுள் என்பது எல்லா சமயங்களுக்கும் ஒப்ப முடிந்த உண்மை. அருள் என்றால் என்ன என்பதை ஆராய்ந்து பார்க்கவேண்டும். நீர்த்திவலையும் சூரிய வெப்பமும் சேர்ந்து, இல்லாத ஏழு நிறங்கள் வானவில்லாக வடிவெடுத்து வரும்படி செய்கின்றன. ஜட உலகில் நீருக்கும்

வெளிச்சத்துக்கும் சேர்ந்து அமைந்துள்ள அருள் ஆகின்றது அந்த சூரிய வெப்பம். அத்தனை விதமான நிறங்களைக் கொண்டு அது தன்னைத்தானே அழகுபடுத்திக் கொள்கிறது. கடவுளைச் சித் அம்பரம் என்றோம். அறிவுப்பெரு வெளி என்பது அதன் பொருள். அந்தப் பேரறிவு கணக்கற்ற உயிர்களாகவும், உயிர்களிடத்து அறிவாகவும் இலங்கிக்கொண்டிருக்கிறது. எண்ணிறந்த உயிர்களாகவும், அறிவு வடிவங்களாகவும் தன்னை விளக்கிக்கொள்கின்ற சக்திக்கு அருள் என்று பெயர். சிறுசிறு உயிர்களிடத்துள்ள சிற்றறிவு சொரூபமாக ஆயிருப்பதும் அந்தப் பேரறிவின் தோற்றங்கள். சிறுசிறு உயிர்களுக்குடைய உடல்களாகத் தன்னைத் தோற்றுவித்துக் கொண்டிருப்பதும் அப்பேரறிவுப் பெருவெளியின் அருள் தோற்றம். சுருங்கச் சொல்லின் இப்பிரபஞ்சமாகத் தன்னை காண்பித்துக்கொண்டிருப்பது அதே அறிவுப் பொருள். பிரபஞ்சத்திலுள்ள இத்தனைவிதமான உயிர்களாகத் தன்னை காட்டிக்கொண்டிருப்பதும் அதே பெரிய பொருள். இத்தனைவித உயிர்வகைகளுக்கிடையில் இத்தனைவிதமான பாகுபாடுகளோடு கூடிய அறிவாக இலங்கிக்கொண்டிருப்பதும் அதே பெரிய பொருள். **அப்பாலும் அறிகின்ற அறிவினையறிந்து பார்க்கின் எண்டிசை விளக்குமொரு தெய்வ அருள் அல்லாமல் இல்லை எனும் கோட்பாட்டில் இவையாவும் அடங்கிவிடுகின்றன.**

ஜீவர்களாகிய நாம் ஒவ்வொருவரும் ஒரு தனி வியக்தியாக இலங்குகிறோம். காண்போன் என்றும் காணப்படு பொருள் என்றும் இரு பொருள்கள் நமக்குத் தென்படுகின்றன. இப்படி இவைகள் தென்படுவதற்கு மூலகாரணமாய் இருப்பது நினைவு. நினைவு ஒடுங்கிய இடத்தில் காண்போனுமில்லை, காணப்படுபொருளும் இல்லை. அயர்ந்து

நாம் தூங்குகின்றபொழுது நினைவு ஒடுங்குகிறது; அது அழிந்துபட்டுப்போவதில்லை. அது ஒடுங்கியிருக்கின்ற நிலையில் உலகத் தோற்றமும் நமக்கு இல்லாது போய்விடுகிறது. ஆதலால் நம்மைப் பொருத்த வரையில் நமது நினைவுக்கு அன்னியமாக உலகத்தின் தோற்றம் நமக்கு இல்லை. **நினைவும் உண்டு** இங்கு என்னும் விளக்கத்தில் இக்கருத்துக்கள் எல்லாம் அடங்கியிருக்கின்றன.

நினைவு சொரூபமாகிய நாம் மேலும் செய்யக்கிடக்கும் ஆத்ம சாதனம் யாது என்னும் கேள்வி எழுகிறது. அயர்ந்து தூங்குகின்றபொழுது நினைவு ஒடுங்கிவிடுகிறது, விழித்தெழுந்திருக்கின்றபொழுது நினைவு விரிவடைகிறது. விரிவடைந்த நினைவு தான் எடுத்துக்கொண்டுள்ள உடலைத் தன் சொரூபமாக அகங்கரிக்கிறது. இதன் விளைவாக நான் சிறியவன், நான் பெரியவன், நான் கற்றவன், நான் கல்லாதவன், நான் திட்பம் வாய்ந்தவன், நான் நோய்வாய்ப் பட்டவன்—என்கின்ற விதவிதமான விகாரங்கள் அகங்காரத்துக்கு வருகின்றன. இந்த நினைவு வெவ்வேறு உடல்களில் விலங்குகளாகவும், பறவைகளாகவும், நீர் வாழ்வனவாகவும் அகங்கரித்துக்கொண்டிருக்கின்றது. உடலோடு கூடிய நினைவுக்கு ஜீவாத்மன் என்று பெயர். ஒவ்வொரு ஜீவாத்மனும் தனக்கு உரியது என ஜடப்பொருள்கள் பலவற்றினிடத்துச் சொந்தம் பாராட்டுகிறது. இந்தச் சொந்தம் பாராட்டும் நிலைக்கு எனது அல்லது மமகாரம் என்று பெயர். இந்தக் கருத்தை தாயுமானவர் **யான் எனது** எனப் பகர்கின்றார்.

யான் எனது என்னும் கோட்பாட்டை மேலும் அறிய வேண்டியது அவசியமாகிறது. மரத்திலுண்டாகின்ற ஒரு சிறிய பிஞ்சு முதிர்ந்து பெரியதாகிறது. பிறகு முற்றிய

காய் ஆகிறது. கடைசியில் கனிந்த கனி ஆகிறது. முற்றிலும் கனிந்த பிறகு மரத்தை விட்டு அது விலகிக்கொள்கிறது. அத்துடன் மேல் ஓடு அல்லது தோல் வேறாகவும், உள்ளே இருக்கும் சுளே வேறாகவும் பிரிந்துகொள்கிறது. இக்கோட்பாடு யான் என்னும் அகங்காரத்துக்கும் பொருந்தும். சிற்றுயிர் என்பது அல்ப உடல்களை நான் என்று அகங்கரிக்கிறது. அப்படிப் பலபிறவிகளில் தன் அகங்காரத்தை மாற்றியமைத்துப் பேர் உயிராகப் பரிணமித்து வருகிறது. மானுட நிலைக்கு வரும்பொழுது இந்த அகங்காரம் உச்சத்துக்கு வந்துவிடுகிறது. சரீர அமைப்பில் அதற்கு மேல் உடலை மாற்றிக்கொள்ளவேண்டிய அவசியம் ஏற்படுவதில்லை. அதன் பிறகு உண்டாகின்ற முன்னேற்றமெல்லாம் மனதைப் பொருத்ததாகிறது. மனபரிபாகம் ஆகுமளவு உடல் அபிமானம் போய்விடுகிறது. உடலை நாடிய உயிர் இனி உடல் நினைவைக் கடந்து போகவேண்டும். அதற்காக ஞான விசாரம் செய்து பார்ப்பது ஆத்மசாதகனது கடமையாகிறது. நான் என்னும் நினைவுக்கு இலக்காய் இருப்பது யாது என்று அவன் எண்ணிப் பார்க்கின்றான். உடலை நான் என்று எண்ணியவன் இப்பொழுது எனது உடல் என்கின்றான். எது தானாய் இருந்ததோ அது தன்னுடையது ஆகிவிடுகிறது. என்னுடைய வீடு என்று சொல்லுகின்றவனுக்கு அவன் குடியிருக்கும் வீடு தன் சொரூபமாய்விடாது. தான் வேறு, தனது வீடு வேறு என்பதை அவன் நன்கு உணருகின்றான். அதே பாங்கில் என்னுடைய உடல் என்று சொல்லுகின்றவன் தான் உடலுக்கு அன்னியமானவன் என்பதை உணர்ந்தாகவேண்டும். இங்ஙனம் ஸ்தூல சரீரம், மனம், புத்தி, அகங்காரம் ஆகிய இவைகளையெல்லாம் தனக்கு அன்னியமாக உணர்ந்துகொள்ளுகின்றபொழுது

இவன் அகங்காரத்தைக் கடந்துபோகின்றவன் ஆகின்றான். உடலுக்கு உரியவைகளையும், உள்ளத்துக்கு உரியவைகளை யும் புறக்கணித்து விடுகின்ற இடத்து எனது என்கின்ற மமகாரம் போய்விடுகிறது. அதன் பிறகு எஞ்சியிருப்பது யாது என்கின்ற கேள்வி வருகின்றது.

யான், எனது என்பன அற்றுப்போன பிறகு எஞ்சி யிருப்பது துரிய நிறைவு எனப் பகரப்படுகிறது. இதை ஓர்ந்து உணர்தல் அவசியமாகிறது. அயர்ந்து தூங்குகின்ற பொழுது யான் எனது என்பன ஒடுங்கிவிடுகின்றன. ஆனால் அந்தநிலை துரிய நிறைவு ஆகாது. ஏனென்றால் நினைவும் ஆங்கு ஒடுங்கி விடுகிறது. ஆனால் துரியத்திலோ நினைவு விரிவடைகிறது. யான் எனது என்னும் எண்ணம் அறவே இல்லாது போய் விடுகிறது. தெளிந்து விரிந்த நினைவு துரியம் என்னும் பெயர் பெறுகிறது. இதற்காகத்தான் ஜீவன் இத்தனை விதமான பிறவிகள் எடுக்க வேண்டியது அவசியமாயிற்று. நினைவு அல்லது பிரக்ஞை சொரூபமாக உயிர்கள் அனைத்தும் இருக்கின்றன. சிற்றுயிர்களிடத்து நினைவு அல்லது பிரக்ஞை மங்கிக் கிடக்கிறது. அது விரி வடையுமளவு ஜீவன் பேருயிராகப் பரிணமிக்கிறது. ஒரு சான்றின் மூலம் இதை விளக்குவோம். தீபம் ஒன்று எரி கிறது. அதைச் சுற்றிலும் விதவிதமான நிறமுடைய கண் ணாடிகள் அமைக்கப் பெற்றிருக்கின்றன. கருப்புக் கண்ணாடி யின் மூலம் உள்ளிருக்கும் வெளிச்சம் நன்கு வெளியாவ தில்லை. சிவப்புக் கண்ணாடியின் மூலம் இன்னும் கொஞ்சம் அதிகமாக வெளிச்சம் வெளிப்படுகிறது. பச்சைக் கண்ணாடி யின் மூலம் அதை விட அதிகமாக வெளிச்சம் வெளியே வரு கிறது. மஞ்சள் கண்ணாடியில் இன்னும் கொஞ்சம் அதிகம். தூய கண்ணாடியின் வழியாக வெளிச்சம் உள்ளபடி வெளியா

கிறது. நினைவு உள்ளபடி வெளியாகின்ற நிலை துரிய நிறைவு எனப்படுகிறது. அதற்குக் கீழ்ப்பட்ட நிலைகளெல்லாம் ஜீவனுடைய அகங்காரத்தோடு கலந்த நிலையாகும். அகங்காரமற்ற இடந்தான் தெளிந்த பெரு நினைவு நிலை ஆகிறது. இக்கோட்பாட்டைப் பொய்யாமொழியும் இங்ஙனம் விளக்குகிறது:

யான் எனது என்னும் செறுக்கறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்.

நினைவு தெளிவடைந்துகொண்டு போகுமளவு ஆத்மா அடையும் ஆனந்தமும் மேல் நிலைக்குப் போகிறது. ஆனந்தம் அல்லது இன்பம் எல்லா உயிர்களிடத்தும் உண்டு. சிற்றுயிர்களின் இன்பம் மிகக் கீழ் நிலையில் இருக்கிறது. பேருயிர்களுக்கோ இன்பம் பெருநிலைக்குப் போய்விடுகிறது. மனிதனைச் சான்றாக எடுத்துக்கொள்வோம். மக்களுள் கடைப்பட்டவன் உடல் சம்பந்தமான இன்பத்தைப் பெறுகின்றான். மக்களுள் இடை நிலையில் இருப்பவன் அறிவுத்துறையில் இன்பம் எய்துகின்றான். மக்களுள் தலையானவன் ஆத்மாவின்கண் உள்ள இன்பத்தைப் பெற வல்லவனாகின்றான். துரிய நிறைவுக்கு வந்திருப்பவன் அனுபவிக்கும் இன்பம் உலப்பிலா இன்பம். அதைத் தடைப்படுத்துதற்கு ஒன்றுமில்லை. அந்த இன்பத்தை அனுபவிக்குமளவு அதனிடத்திலேயே அவனுடைய மனநாட்டமெல்லாம் போய்விடுகிறது. ஆத்ம சொரூபத்தை நேசிப்பதைத் தவிர வேறு எந்த விதமான நேசமும் அவனுக்கு இல்லை. உயிர்கள் அனைத்தையும் ஆத்மசொரூபமாக அறிந்து நேசிக்கின்றான். அவனுடைய நட்பைக் கலைத்துவிட இயற்கையில் எதும் தடையாய் வந்து நிற்பதில்லை. பேரின்ப சொரூபமாக அவன் இருக்கின்றான்; பேரன்பு சொரூபமாக அவன் இருக்கின்றான். இக்கோட்

பாட்டைத் துரிய நிறைவாகி நிற்பதே இன்பமெனும் அன்பும் உண்டு என்று பகர்கிறார்.

அந்தப் பெரு நினைவையும், பேரின்பத்தையும், பேரன்பையும் தன் சொரூபத்திலேயே உணர்ந்து திளைத்திருக்கின்ற நிறை ஞானி ஒருவன் புறவுலகில் பொறிவாயில் மூலமாகத் தென்படும் அனைத்தையும் உண்மையான ஆத்ம சொரூபம் அல்ல என்று புறக்கணித்து விடுகின்றான். மெய்யுணர்வு ஐம்பொறிகள் வாயிலாக வருவதல்ல. ஐம்பொறிகளைக் கொண்டு அறியப்படுபவைகளெல்லாம் மாயா விகாரங்களே. மாறுபடும் தன்மை அவைகளிடத்துண்டு. துரிய நிறைவு என்னும் ஞானக்கண்கொண்டு காணும் காட்சி மெய்ப்பொருள் காட்சி. சித் அம்பரம் அல்லது ஞானவெளி அதுவே. பிரக்ஞானம் என்னும் பிரம்மம் அதுவே. அத்தகைய மெய்க்காட்சி காண்பவனுக்கு பிரபஞ்சம் என்னும் மாயா விகாரங்கள் இல்லை. இக்கோட்பாட்டைக் கண்டன வெல்லாம் அல்ல என்று கண்டனை செய்து என்று தாயுமானவர் பகர்கின்றார்.

இந்த நிறைஞானத்தை அடைதற் பொருட்டு ஆத்ம சாதகன் செய்ய வேண்டிய சாதனங்கள் சில இருக்கின்றன. பொறிவாயில் ஐந்தையும் அடக்கியாண்டு பழகுதல் சாதனமாகிறது. பஞ்சேந்திரியங்கள் வாயிலாக மனது புறஉலகில் சஞ்சரித்துக்கொண்டே இருக்கின்றது. பல ஜன்மாந்திரங்களில் வந்துள்ள வாசனையின் விளைவு அது. முன்பு அகங்காரத்தைப் பெருக்கிக்கொண்டுபோவதற்குப் புதிய மேலாம் உடல் எடுக்க வேண்டியது அவசியமாய் இருந்தது. அதே பாங்கில் இந்திரியங்களையும் ஒன்றன் பின் ஒன்றாக ஜீவன் எடுத்துக்கொள்ள வேண்டியது அவசியமாயிற்று. ஓர் இந்திரியத்தோடு கூடிய உயிர் ஓரறிவைப் படைத்ததென்

றும், இரண்டு இந்திரியங்களோடு கூடிய உயிர் ஈரறிவைப் படைத்ததென்றும் இந்திரியங்கள் அதிகரிக்க அதிகரிக்க இயற்கையின் அறிவே அதிகரித்து வருகிறது என்பதும் நமக்கு வெளிப்டையாக விளங்குகிறது. இதை எதிர்மறையிலும் பகர்வோம். பிறவிக் குருடனுக்கு நிறங்களைப் பற்றிய ஞானம் இல்லை, வடிவு அழகைப்பற்றிய ஞானம் இல்லை, வெளிச்சத்தைப் பற்றிய ஞானமும் இல்லை. பிறவியிலேயே செவிடாக இருப்பவனுக்கு ஓசையைப்பற்றியஞானம் இல்லை. ஆதலால் அவன் மொழி பயின்றுகொள்ள முடியாது. தன் கருத்தை வித விதமாக விளக்குவதும் அவனுக்கு சாத்தியமல்ல. இப்படி பஞ்சேந்திரியங்களும் இல்லாது போய்விட்டால் புற உலகு இருந்தும் இந்திரியங்கள் இல்லாதவனுக்கு அது காட்சிக்கு வருவதில்லை. பஞ்சேந்திரியங்களின் வாயிலாகப் புற உலகம் முற்றும் காட்சிக்கு வருகிறது. அந்தக்கரணம் அல்லது அறிவானது அதை முறையாகப் பாகு படுத்துகின்ற இடத்து மனிதன் பெறுகின்ற அண்டபகிரண்டங்களைப் பற்றிய ஞானமாகின்றது. இதைக்கடந்து அவன் துரிய நிறைவுக்குப் போக முயலுகின்றபொழுது இந்தப் பஞ்சேந்திரியங்களையும் புறக்கணித்துவிட வேண்டும். அந்தக்கரணங்களாகிய சித்தம், மனம், புத்தி, அகங்காரம் ஆகியவைகளும் ஓய்ந்து விட வேண்டும். ஆனல் இவைகளெல்லாம் வெளி உலகில் போய்ப் பழகியிருப்பதினல் இவைகள் எளிதில் அடங்குவது கிடையாது. இவைகளின் செயல் ஞானிக்கு உகந்த செயல் ஆகாது. அவனுடைய ஞானக் காட்சிக்கு இவை தடையாகின்றன. தடையாய் இருக்கும் பாங்கு இங்ஙனம் பகரப்பெறுகிறது: கண்டன வெலாம் அல்ல என்று கண்டனை செய்து கருவி கரணங்கள்

**ஓய கண்மூடி ஒரு கணம் இருக்க என்ருல் பாழ்த்த கர்மங்கள் போராடுதே.**

கர்மங்கள் எவை என்பதையும் நாம் சிறிது அறிந்து கொள்ளவேண்டும். உடலின்கண் பல செயல்கள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. ஹிருதயம் ஓயாது அடித்துக்கொண் டிருக்கிறது. ரத்தம் உடலெங்கும் வியாபித்துக் கொண் டிருக்கிறது. இச்செயல்களும் வாழ்க்கையோடு சம்பந்தப் பட்ட கர்மங்களே. ஆனால் இவைகளைப் பொதுவாகக் கர்மங்கள் என்று நாம் அங்கீகரித்துக் கொள்வதில்லை. எந் தச் செயல் மனத்தகத்து இனியதாகவும் இன்னாததாகவும் பதிவு பெறுகிறதோ அச்செயலே கர்மமென அங்கீகரிக்கப் படுகிறது. தூங்கிக் கொண்டிருக்கின்ற வேளையில் உடலைக் கொசு ஒன்று வந்து கொட்டுகிறது. கை அதை அடித்து ஓட்டுகிறது. மனதில் அதன் பதிவு ஏற்படுவதில்லை. ஆத லால் அச்செயலைச் செய்ததற்கிடையில் ஜீவன் கொசுவை ஓட்டுதல் என்னும் கர்மத்தைச் செய்தவனல்லன். அதே செயலை விழித்திருக்கும் வேளையில் கர்மம் செய்கிறேன் என் கிற உணர்வோடு கூடி ஜீவன் செய்வானாகில் அது கர்மமென அங்கீகரிக்கப்படுகிறது. செயல்களெல்லாம் மனதில் வித விதமான பதிவுகளை உண்டுபண்ணுகின்றன. இந்தப் பதிவு களை சம்ஸ்காரம் என்கின்றோம். விருத்தி என்றும் அவை களை இயம்புவதுண்டு. சம்ஸ்காரங்களாக மனதில் பதிவு பெற்றிருக்கின்ற கர்மங்கள் திரும்பவும் உரு எடுத்து வருவ துண்டு. அவைகள் உரு எடுப்பதனால்தான் கனவு உண் டாகிறது. தியானம்பண்ண அமருகின்ற பொழுது அவை கள் மிக எளிதில் மனதில் உதித்துவர ஆரம்பித்து விடுகின் றன. அவைகளை அகற்ற அகற்ற ஆழ்ந்து உள்ளே புதைந்து கிடந்த பழைய விருத்திகள் ஓயாது வந்துகொண்டிருக்கும். ஆதலால் தான் பாழ்த்த கர்மங்கள் போராடுதே என்னும் முறையீடு வந்துள்ளது.

ஆறு சாஸ்திரங்களுள் பூர்வமீமாம்சம் என்பது ஒன்று. அந்த சாஸ்திரத்தின்படி கர்மமே கர்த்தாவாகக் கருதப் படுகிறது. கடவுளைப் பூர்வமீமாம்சம் அங்கீகரிப்பதில்லை. கர்மம் எல்லாம் வல்லது என்று அந்த தர்சனம் ஏற்றுக் கொள்கிறது. கர்மம் ஆதி அந்தமற்றது என்றும் அக் கோட்பாட்டை உடையவர்கள் நம்புகின்றார்கள். அது எல்லாம் வல்லது என்றும் அவர்கள் சொல்லுகின்றார்கள். தெய்வம் போன்று கர்மத்தைப் போற்றுவதே அவர்களின் குறிக்கோள். கர்மத்தின் துணைகொண்டு எதைவேண்டுமானா லும் பெறலாம் என்கின்றனர் அவர்கள். அவர்களுடைய கோட்பாட்டுக்கு ஒப்ப மனத்தகத்து முன்பு செய்த வினை யின் வேகம் ஓயாது தோன்றி வந்து ஆதிக்கம் புரிகிறது. அது யாராலும் வென்றுவிட முடியாதது போன்று இருக் கிறது. பூர்வமீமாம்சிகளுடைய பக்ஷம் கர்மமே எல்லாம் வல்லது என்பது. உத்தர மீமாம்சமாகிய வேதாந்தத்தினு டைய பக்ஷம் கருமத்தினும் உயர்ந்தது கடவுளின் கருணை என்பது. இங்ஙனம் இரண்டு பக்ஷங்கள் இருக்கின்றன. பூர்வபக்ஷம் ஒன்று, உத்தரபக்ஷம் மற்றொன்று. இவைக ளுள் பூர்வபக்ஷத்தை நான் சேர்ந்துவிடுவதா என்னும் வியாகூலம் நிறைந்த உணர்வுடன் **பண்டைஉள கர்மமே கர்த்தாவெனும் பெயர் பக்ஷ நான் இச்சிப்பனோ** என்று தாயுமானவர் பரிந்து பகர்கின்றார். நான் அக்கோட்பாட்டை இச்சிக்கலாகாது என்னும் கருத்துத்தான் அதில் அடங்கி யிருக்கின்றது.

கடவுள் நீக்கமற எங்கும் நிறைந்திருக்கின்றார். அவ ருக்கு அன்னியமாக ஒன்றுமில்லை. அவருடைய கருணையை நாடுகின்றவர்களுக்கு வினை ஆனது எவ்வளவுதான் வேகம் படைத்திருந்தாலும் அதன் வேகம் ஒடுங்கிவிடுகின்றது.

"இறைவா, உன்னையே நினைந்து உன் கருணையையே நாடி நான் இருப்பேனாகில் கர்மம் இவ்வளவு ஆதிக்கம் பெற்று மனத்தகத்து வந்து முன்னணியில் நிற்பதற்கு அதற்கு எங்ஙனம் இயலும்?" என்னும் கருத்து இப்பாடலில் வெளியாகின்றது. அருள் நாட்டம் நிறைந்திருப்பவர்க்கு வினையின் ஆதிக்கம் முன்னணிக்கு வருவதில்லை என்பதை மற்றொரு சான்றைக்கொண்டு நாம் அறிந்துகொள்ளலாம். ஒருவனுக்கு நெருங்கிய உறவினன் ஒருவன் திடீரென்று காலமாய் விடுகின்றான். பிரேதத்தை இன்னும் தகனம் செய்ய எடுத்துச் செல்லவில்லை. அதை வைத்துக்கொண்டு உற்றார் எல்லாம் துயரப்பட்டுக்கொண்டு இருக்கின்றனர். அவ்வேளையில் துயரப்படுகின்றவர்களுக்கு எந்தவிதமான இந்திரிய சுகத்தைப்பற்றிய எண்ணமும் வருவதில்லை. துயரத்தின் வலிவே மற்ற உணர்வுகளை யெல்லாம் பின்னணிக்குத் தள்ளிவிடுகின்றது. மாறுபடுகின்ற இரண்டு விதமான உணர்ச்சிகள் ஏககாலத்தில் மனதில் முன்னணிக்கு வரமுடியாது என்பது தேற்றம். தீவிரமான அருள் தாகத்துடன் கடவுளை நாடி இருப்பவர்க்கு "எல்லாம் வல்லது வினை" என்னும் கோட்பாடு உரு எடுப்பதற்கே இடமில்லாது போய்விடுகிறது. அத்தகைய தீவிர உணர்வு தமக்கு வரவேண்டும் என்றும் எங்கும் நிறைந்துள்ள பரிபூரணானந்தப் பரம்பொருளிடம் விண்ணப்பம் செய்யப்படுகின்றது. இக்கருத்துக்கள் முழுதும் மேலே கூறிய பாடலில் அமைந்திருக்கின்றன.

---

## பரிபூரணனந்தம் - 5

சந்ததமும் எனதுசெயல் நினதுசெயல் யானெனுந்
தன்மைநினை யன்றியில்லாத்
தன்மையால் வேறலேன் வேதாந்த சித்தாந்த
சமரச சுபாவமிதுவே
இந்தநிலை தெளியநான் நெக்குருகி வாடிய
இயற்கைதிரு வுளமறியுமே
இந்நிலையி லேசற் றிருக்கஎன் ருல்மடமை
இதசத்ரு வாகவந்து
சிந்தைகுடி கொள்ளுதே மலமாயை கன்மந்
திரும்புமோ தொடுவழக்காய்ச்
சென்மம்வரு மோஎனவும் யோசிக்கு தேமனது
சிரத்தையெனும் வாளும்உதவிப்
பந்தமற மெய்ஞ்ஞான தீரமுந் தந்தெனைப்
பாதுகாத் தருள்செய்குவாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந்தமே.

வாய்க்கால் வழியாக நீர் ஓடுகிறது. அதன் ஓட்டத்தில் அழகைக் காண்கின்ருேம். ஓடும் நீர் நெல், புல் முதலியவைகளுக்கு உணவூட்டி உயிர் வாழ்ந்திருக்கச் செய்கிறது. இப்படி ஓடுகின்ற நீரின் செயல் தனக்குச் சொந்தமானதன்று. அது ஆகர்ஷண சக்தியின் செயல். மேலே வீசிய கல் திரும்பவும் நிலத்துக்கு வருகிறது. அப்படி வருவது அதன் சொந்தச் செயல் அல்ல. ஆகர்ஷண சக்தி அதைத் திருப்பிக் கொண்டு வந்து சேர்க்கிறது. இலேசான காற்று அடைக்கப்பெற்றுள்ள மெல்லிய காகிதத்தில் செய்த

பந்து ஒன்று பூமியினின்று மேல் நோக்கிச் செல்லுகிறது. அத்தகைய செயலும் ஆகர்ஷண சக்திக்குரியது. கனமான காற்றைக் கீழே இழுப்பதால் இலேசான காற்று அடங்கிய காகிதப்பந்து மேல்நோக்கிப்போகிறது. நீரிலும், காற்றிலும், கல்லிலும் இத்தனை விதமான செயல்களைச் செய்வது ஆகர்ஷண சக்தி. கடிகாரத்தில் பல சக்கரங்கள் சுழல்கின்றன. அவைகளின் செயல்களனைத்தும் அவைகளை இயக்கும் விசை வில்லுக்கு (Mainspring) உரியவைகளாம். சமைப்பதற்கு மின்சக்தி அடுப்பு இருக்கிறது. அது தீயை உண்டுபண்ணுகிறது. நீரை உரையச் செய்வதற்கு ரெபரிஜிரேடர் (Refrigerator) என்னும் ஒருவகை மின்சக்திக் கருவி இருக்கிறது. அது தணுப்பை உண்டுபண்ணுகிறது. மின்சக்தி விளக்கு வெளிச்சத்தை உண்டுபண்ணுகிறது. யந்திரங்களிடத்து மின்சக்தி சலனத்தை உண்டுபண்ணுகிறது. குழல்களில் அது ஓசையை உண்டுபண்ணுகிறது. இத்தனை விதமான செயல்களெல்லாம் Electricityஎன்னும் மின்சக்தியின்செயல்களாம். விதவிதமான கருவிகளால் தங்கள் சொந்த செயல் என்று கருதப்படுபவைகளெல்லாம் உண்மையில் மின்சக்தியின் செயல்களே. வீதியில் நடந்து செல்பவர்களுக்கிடையில் போலீஸ்காரன் ஒழுங்குப்பாட்டை அமைத்து வைக்கிறுன். காரியாலயங்களில்உத்தியோகஸ்தர்களும்,குமாஸ்தாக்களும் வித விதமான செயல்கள் புரிகின்றனர். போர்க்களத்தில் சிப்பாய் யுத்தம் செய்கிறுன். இவையாவும் அரசாங்கத்தின் செயல்களாம். அதே பாங்கில் பிரபஞ்சத்தில் ஜடப்பொருள்களும், உயிர் வகைகளும் செய்து வருகின்ற செயல்களெல்லாம் அவைகளை இயக்குகின்ற தெய்வத்திடத்திருந்து உதித்தவைகளாம். இக்காரணத்தை முன்னிட்டே சந்ததமும் எனது செயல் நினது செயல் என்கிறுர் தாயுமானவர்.

சந்ததமும் என்னும் சொல் சர்வகாலத்திலும் எனப் பொருள் படுகிறது. உயிர்கள் அறிந்து செய்கின்ற செயலும் அறியா மல் செய்பவைகளும் உண்மையில் ஈசனுடைய பெருந்திட் டத்துக்கு உட்பட்டவைகள் எனப் பொருள்படுகிறது.

அழகு வாய்ந்ததாகக் கடல் இருக்கிறது. கடலுக்கு அழகை உண்டுபண்ணுவது அதன்கண் தோன்றுகின்ற அலை களேயாம். அத்தகைய அலைகள் கடலுக்கு அன்னிய மானவைகள் அல்ல. தன்னை அலங்கரித்துக் கொள்ளுதற்கு மனிதன் விதவிதமான ஆடை ஆபரணங்களைச் செய்கின்றான். அவைகளுக்கு வடிவங்கள் பல. உடலில் வெவ்வேறு அவயவங்களுக்கென்றே அவைகள் அமைந்தவைகள். நிறத் திலும் வடிவத்திலும் வேறு வேறு வகைப்பட்டவைகளாகத் தென்பட்ட போதிலும் நகைகள் அனைத்தும் பொன்னில் உண்டானவைகள். தங்கத்துக்கு அவைகள் வேறுபட்டவை கள் அல்ல. உடைகள் அனைத்தும் பட்டு அல்லது பருத்தியி லிருந்து வந்தவைகள். மூலப் பொருளுக்கு அன்னிய மாகக் காரியப்பொருள் ஆய்விடுவதில்லை.

சூரியமண்டலம் ஒன்றில் பூமியும், திங்கள் செவ்வாய் போன்ற கிரகங்களும் அமைந்துள்ளன. ஒவ்வொரு கிரகத் துக்கும் தனி வண்ணமும் இயல்பும் உண்டு எனினும் சூரிய னிடத்திருந்து சிதறி வந்து சூரியனையே அவைகள் சார்ந் திருப்பதால் அவையாவும் சூரியனுக்கு வேறுபட்டவைகள் அல்ல. அவைகளைப் பொறுக்கி யெடுத்துத் திரும்பவும் சூரியனிடத்து வீசி எறிந்தால் ஒரு நொடிப்பொழுதில் அவை யாவும் சூரியசொரூபமாகப்பழையநிலைமைக்குப் போய்விடும்.

உணவை உண்டு உயிர்கள் உடலை ஓம்பி வருகின்றன. உணவு வேறு, உடல் வேறு ஆக நமக்குத் தென்படுகின்றன. சிறிது நாளைக்கு முன்பு உணவாயிருந்தது இன்றைக்கு உடல்

ஆய்விடுகிறது. சிறிது நாளைக்குப் பின்பு இன்றைக்கு உட லாயிருப்பது வேறு ஒரு உயிர்க்கு உணவாக மாறிவிடுகிறது. உடலமைப்பு அனைத்தும் உணவு மயம். உடல் வேறு, உணவு வேறு அல்ல.

கணக்கற்ற நீர்நிலைகள்மீது கணக்கற்ற சூரியபிம்பங்கள் தென்படுகின்றன. அனந்தங் கோடி சூரிய பிம்பங்களை நில வுலகில் ஆங்காங்குக் காணலாம். சேற்று நீரில் ஒருவித சூரிய பிம்பம், ஆற்று நீரில் இன்னொரு வித சூரிய பிம்பம், மழைத்துளியில் மற்றொரு வித பிம்பம். வான வில்லாக வடி வெடுக்கும் பொழுது அதன் தோற்றங்கள் பலப்பல. ஆனால் இவையாவும் மூலப் பொருளாகிய சூரியனது மகிமைகளே யாகும். ஜீவன் ஒருவன் 'நான்' என்று தன்னை அகங்கரிக் கின்றான். அவன் கணக்கற்ற வடிவங்களில் இருந்தவன், இனியும் இருக்கவல்லவன். தன்னை மரம் என்று ஒரு நிலை யில் அவன் அகங்கரித்தான்; பறவை என்று இன்னொரு நிலையில் தன்னை அகங்கரித்தான்; விலங்கு என்றும், சிற் றுயிர் என்றும், பேருயிர் என்றும், மனிதன் என்றும், தேவன் என்றும், நல்லவன் என்றும், கெட்டவன் என்றும் தன்னை அகங்கரித்துக்கொண்டே இருக்கின்றான். இத்தனை வித நிலைகளில் அவனுடைய உண்மை வடிவம் யாது என்று பார்ப்போம். தனக்குச் சொந்தமான உடல் என்று கருதிய தெல்லாம் பஞ்சபூதங்களுக்கு உரியவைகளாம். பஞ்சபூதங் கள் பரம்பொருளிடத்திருந்து தோன்றி வந்தவைகள். வித விதமான உணர்ச்சிகளையும், மனப்பான்மைகளையும் உடைய வனயிருந்ததாகத் தன்னைக்குறித்து ஜீவன் எண்ணிக்கொள் கிறான். இத்தனை விதமான மனப்பான்மைகளெல்லாம் மகத் அல்லது ஹிரண்யகர்ப்பன் என்று சொல்லப்படும் பரமாத்மா விடமிருந்து வந்துள்ள பெரிய மனதின் பலவிதப்பட்ட கிர

ணங்களாம். ஜீவன் தன்னை அறிவுப் பொருளாக உணர்கிருன். இவனுடைய அறிவுக்கு மூலமாயிருந்தது பரம் பொருளின் பேரறிவாம். தன்னைப் பிரக்ஞை சொருபமாக ஜீவன் நினைக்கிருன். பிரக்ஞான கனத்தில் ஒரு கிரணமாகத்தான் தோன்றிக் கொண்டிருப்பது அவனைப்பற்றிய உண்மையாகும். இவ்வுண்மை உயிர்கள் அனைத்துக்கும் பொதுவானது. ஓர் உயிர் மற்ருேர் உயிர்க்கு அன்னியமானது என்று மனிதன் நினைக்கின்ருன். ஜீவனுகிய தான் பரம்பொருளுக்கு அன்னியமானவனென்றும் தன்னைப் பற்றி நினைத்துக்கொள்கின்ருன். தன் அமைப்பை உள்ளபடி ஆராய்ந்து பார்க்குமிடத்து எந்த நிலையிலும் ஜீவன் பரமாத்மாவுக்கு அன்னியமானவன் அல்லன் என்பது வெளியாகும். இக்கோட்பாட்டை **யான் என்னும் தன்மை நின்னை அன்றி இல்லாத் தன்மையால் (உனக்கு) வேறு அல்லேன்** என்கிருர் தாயுமானவர்.

உலகில் சமயங்கள் பல இருக்கின்றன. இவைகளுக்கிடையில் ஒற்றுமை அதிகமா, வேற்றுமை அதிகமா என்பது கேள்வி. வேதாந்தத்தைப் பற்றியும் சித்தாந்தத்தைப்பற்றியும், மக்கள் அடிக்கடி கேள்விப்படுகின்றனர். எது வேதாந்தம் எது சித்தாந்தம் என்பதை அறிந்து கொள்ளுவது அவசியமாகிறது. வேதத்தின் அந்தம் வேதாந்தம். மறைமுடி எனவும் அது பொருள்படுகிறது. கடவுள், இயற்கை, உயிர்கள் ஆகியவைகளைப் பற்றிய முடிவான கோட்பாடுகளுக்கு வேதாந்தம் என்று பெயர். வேதாந்தக் கோட்பாடுகளை ஆதாரங்களாக வைத்துக்கொண்டு கணக்கற்ற சமயங்கள் உரு எடுத்துள்ளன. அவைகளுள் ஆறு சமயங்கள் முக்கியமானவைகள். ஷண்மதங்கள் என்றும் அவைகளைப் பற்றிப் பகர்வதுண்டு. சைவம், வைஷ்ணவம், சாக்தம்,

கணபதேயம், கௌமாரம், சௌரம் என இவ் ஆறு மதங்களும் பெயர் பெற்றுள்ளன. ஒவ்வொரு மதமும் ஒவ்வொரு சித்தாந்தம் என்று சொல்லப்படுகிறது. ஓர் உபமானத்தைக் கொண்டு இதை நன்கு விளக்கலாம். ஓர் ஊரிலிருந்து மற்ருேர் ஊருக்குப் போவதற்குப் பல பாதைகள் இருக்கின்றன. பலவிதமான வண்டி வாகனங்கள் இருக்கின்றன. இத்தனைவிதப் பாதைகளுள் இன்ன பாதையில் இத்தகைய வாகனத்தைக் கொண்டு நான் செல்லுவேன் என்று ஒருவன் தனக்குத்தானே சித்தாந்தப்படுத்துகின்ருன். சித்தாந்தப்படுத்துதற்கு முடிவு கட்டுதல் என்பது பொருள். பாதைகளையும், வண்டி வாகனங்களையும் தொகுத்துப் பகருங்கால் அவை வேதாந்தத்துக்கு ஒப்பாகின்றன. பிரித்துப் பகருங்கால் அவைகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு சித்தாந்தமாகிறது. மெய்ப்பொருளை சிவன் எனக்கருதி வழுத்தும் மார்க்கம் சைவ சித்தாந்தம். அதே மெய்ப் பொருளை விஷ்ணு என்று கருதி வழுத்துமிடத்து அது வைஷ்ணவ சித்தாந்தம். இத்தனைவித மதங்களுக்கிடையில் கருத்து வேற்றுமை இருக்கிறதா என்பது கேள்வி. அடிப்படைத் தத்துவத்தில் வேற்றுமையில்லை. தத்துவத்தில் இவை யாவும் ஒன்றே என்று கண்டுகொள்பவர் சமரசம் காண்பவர் ஆகின்றனர். சமரசம் காண்பதற்கிடையில் ஒருவன் தனக்குற்ற ஒரு நெறியில்தான் தீவிரமாகச் செல்லவேண்டும். சமயங்கள் பல இருக்கின்றன என்ருலும் அனுஷ்டானத்தில் ஒருவன் தனக்குகந்த சமயத்தைத் தீவிரமாகக் கடைப்பிடிப்பது அவசியம். சித்தாந்தம் என்பதை இங்குத் தாயுமானுர் சைவ சித்தாந்தம் என்றே சிறப்பித்துக் கூறுகிருர். ஏனென்ருல் பல சித்தாந்தங்களுள் அவர் தீவிரமாகக் கையாண்டது சைவ சித்தாந்தம். அதற்கு அகச்

சான்றுகள் அவருடைய பாடல்களிலே ஏராளமாய் இருக்கின்றன. வேதாந்தமும் சித்தாந்தமும் எந்த இரண்டு உண்மைகளைத் தெளிவுபட வற்புறுத்துகின்றன என்று இங்கு இயம்புகிருர். தங்கள் செயல்கள் அனைத்துக்கும் தாங்களே கர்த்தாக்கள் என்று ஜீவர்கள் எண்ணி வருகிருர்கள். அப்படி எண்ணிக்கொண்டிருப்பதற்கிடையிலும் உண்மையை அறிந்துகொள்கிற வேளையிலும் அவர்களுடைய செயல்களெல்லாம் வாஸ்தவத்தில் கடவுளுக்குரிய செயல்களாம். இது விஷயத்தில் மதங்களுக்கிடையில் அபிப்பிராய வித்தியாசமில்லை. ஜீவ வியக்திகளுக்குப் பிறப்பிடம் எது, நிலைபெற்றிருக்கும் இடம் எது, முடிவில் ஒடுங்கும் இடம் எது என்பதை ஆராய்ந்து பார்த்தால் ஜீவன்கள் அனைத்தும் கடவுளிடத்திருந்து வந்தவைகள், கடவுளிலே நிலைத்திருக்கின்றன, கடவுளிலே ஒடுங்குகின்றன. இது விஷயத்திலும் மதங்களுக்கிடையில் கருத்து வேற்றுமை கிடையாது. சமரசமே யாண்டும் நிலவுகிறது. வேதாந்த சித்தாந்த சமரச சுபாவம் இதுவே என்று அவர் பகர்ந்துள்ளார்.

சமய அனுஷ்டானங்களெல்லாம் எதற்காக அமைந்துள்ளன என்பது கேள்வி. ஒன்ருேடு ஒன்று போராடுவதற்கோ, கருத்து வேற்றுமையை வளர்ப்பதற்கோ சமயங்கள் அமையவில்லை. வித விதமான உணவுப்பொருள்கள் உடலுக்குப் புஷ்டி தருவதற்கு அமைந்திருப்பது போன்று சமயங்கள் யாவும் மக்களுக்கு நல்லறிவு புகட்டுதற்கும், உயர்நிலையை அடைதற்கு யாண்டும் உதவி புரிதற்கும் அமைந்தவைகளாம். செயல்களை ஜீவன் ஒருவன் தனக்குச்சொந்தம் பாராட்டுகின்றபொழுது செயல்களுக்கேற்ற இன்ப துன்பங்களை அவன் அனுபவிக்கிருன். செயல்களையெல்லாம் கடவுளுக்குரியவைகள் என்று கருதி, கடவுள் கையில் கருவி

யாய் இருப்பது தன் கடமையென்று உணர்கின்ற ஜீவனுக்கு இன்பமுமில்லை, துன்பமுமில்லை. செயல் புரிவதற்கிடையில் செயல்களை யெல்லாம் அவன் கடந்தவனுகின்ருன். ஜீவன் ஒருவன் தனக்குத் தனி வியக்தியை உண்டுபண்ணிக் கொள்ளும்பொழுது அவனுக்கு வேற்றுமை புத்தி வருகிறது. மற்ற உயிர்களுக்குத் தன்னை அன்னியமானவனுகக் கருது கின்ருன். மற்ற உயிர்களிடத்து இயல்பாகவே விருப்பும் வெறுப்பும் உண்டாகின்றன. உயிர்கள் அனைத்தையும் தன் மயமாகவும், தன்னை மற்ற உயிர்கள் மயமாகவும் கருதிப் பழகுகின்றவனுக்கு வேற்றுமை புத்தி போகிறது, ஐக்கிய புத்தி ஓங்குகிறது. கடவுளின் காட்சியைப் பெற அவன் தன்னைத் தானே பக்குவப்படுத்துகின்ருன். எவ்வளவு தீவிரமாக இத்தகைய நாட்டத்தை ஜீவன் ஒருவன் கடைப் பிடிக்கின்ருனே அவ்வளவு விரைவில் அவன் கடவுள் சாந் நியத்தியத்தை அடையப்பெறுவான். நிறைஞானமும் அவ னுக்கு உண்டாகிறது. இப்படி முயற்சி பண்ணுபவனே நல்ல சாதகன். வீண் விவாதம் செய்துகொண்டிருப்பவன் ஆத்ம சாதகன் ஆகமாட்டான். தன்னைக் கடவுள் சொருபத்தில் லயப்படுத்த முயற்சி பண்ணுப்வனே பக்குவமடைந்து வரு கிருன். இந்தக் கோட்பாட்டை இந்த நிலை தெளிய நான் நெக்கு உருகி வாடிய இயற்கை திருவுளம் அறியுமே என்கிருர் தாயுமானவர். நெக்கு உருகுதல் என்பது கசிந்து உருகுதல் எனப் பொருள்படுகிறது. அப்படி உருகுதல் வாயிலாக மனத்தகத்து உள்ள மாசுகள் நீங்கப் பெற்றுத் தெளிவு ஏற்படுகிறது. ஜீவன் ஒருவன் உண்மையாக்ச் சாதனம் செய்து கொண்டிருக்கிருனு அல்லது பெயரளவில் ஆத்ம சாதகனுக அமைந்திருக்கின்ருனு என்பதை அவன் அறிந்துகொள்வதைவிடக் கடவுள் நன்குஅறிகிருர். ஆதலால்

அது விஷயத்தில் கடவுளைச் சார்ந்திருப்பதே முற்றிலும் பொருத்தமானதாகிறது.

கடவுளைச் சார்ந்திருப்பவனுக்கு நலன்கள் அனைத்தும் உண்டாகின்றன. கடவுளுக்கு அன்னியமாகத் தன்னை வைத்துக்கொண்டு ஜீவபோதத்தைச் சார்ந்திருப்பவர்க்கு இன்பதுன்பங்கள் மாறி மாறி அமைகின்றன. இந்த ஜீவ போதத்தை வளர்ப்பது எது என்பது கேள்வி. ஜீவ போதத்தை வளர்ப்பது மடமை அல்லது அறியாமை. பொய் யான நிலையை மெய்யான நிலையாக அது காட்டித்தருகிறது. மெய்யான நிலையையோ அது அறவே மறைத்து வைத்து விடுகிறது. ஜீவனுக்கு நலம் செய்வது போன்று அது பாசாங்கு பண்ணுகிறது. ஹிதசத்ரு என்பவன் நண்பன் போன்று தன்னைக் காட்டிக்கொண்டு நம்பியவர்க்குக் கேடு செய்பவன். ஜன்ம சத்துருவாக இருப்பவனைப்பற்றி நாம் அதிகம் கவலைப்பட வேண்டியதில்லை. ஏனென்றால் வெட்ட வெளியாக அவன் நமக்கு எதிரியாய்விடுகின்றான். எதிரி யாக நடந்துகொள்ளும் விஷயத்தில் அவனிடத்து நேர்மை இருக்கின்றது. ஆனல் ஹிதசத்துரு அத்தகையவன் அல் லன். ஹிதம் அல்லது நலம் செய்பவன் போன்று பாசாங்கு செய்கின்றான். மனிதனும் அவனை நம்பிவிடுகின்றான். எச் சரிக்கை எடுத்துக்கொள்ளாது அவனோடு உறவாடும் தன் மையும் வந்துவிடுகின்றது. நம்பியிருக்கின்றவனை முற்றிலும் அபாயத்தில் ஆழ்த்திவிடுபவன் ஹிதசத்துரு ஆகின்றான். மடமை அல்லது அக்ஞானம் அத்தகைய பொல்லாதது. இந்த அறியாமை மனிதனுக்குப் புறம்பாக வேறு எங்கேயோ குடிகொண்டிருந்தால் கேடு ஒன்றுமில்லை. பகை வன் கோட்டைக்கு வெளியில் இருப்பானாகில் அவனை எதிர்ப்பது எளிது. பேராபத்தை விளைவித்துவிட அவனுக்கு

இயலாது. ஆனால் எதிரியும் ஒருவனுடைய கோட்டைக் குள்ளேயே வசித்து வருவானாகில் அந்தக் கோட்டை மனித னுக்கு ஒன்றுக்கும் உதவாது போய்விடும். மடமை என்னும் எதிரி ஆத்ம சாதகனுடைய சிந்தை என்னும் கோட்டைக் குள்ளே குடிகொண்டிருக்கிறது. அங்குதான் சாதகனுக்குக் கேடுகள் பல சூழ்ந்திருக்கின்றன. இக்கோட்பாட்டை இந்நிலையிலே சற்று இருக்க என்றால் மடமை இதசத்து ருவாக வந்து சிந்தை குடிகொள்ளுதே என்கிறார். மன துக்கு சிந்தை என்பது மற்றொரு பெயர்.

மலம் என்றால் அழுக்கு. ஒரு பொருள் தனக்குரிய இடத்தில் இருக்கும்பொழுது அது அழுக்கு அல்ல. உரியது அல்லாத இடத்தில் வந்து அமையும்பொழுது அது அழுக்கு ஆகிறது. இடம் மாறி அமைந்து எது கேட்டை விளைவிக் கிறதோ அது அழுக்கு. சாகுபடிக்குரிய நிலத்தில் மண் இருக்கிறது. ஆங்கு அது அழுக்கு அல்ல. தூய ஆடை யின் மீது அது வந்து படியும்பொழுது அதை அழுக்கு என் கிறோம். பாம்பின் பல்லில் விஷம் இருக்கிறது. இருக்க வேண்டிய இடத்தில் அவ்விஷம் பாம்பைப் பெருமைப்படுத்து கிறது. ஆனால் அது நம் உடலினுள் செலுத்தப்பட்டால் அது பெருங்கேடாய் முடிகிறது. மனதில் மலம் படிந்தால் மனிதன் வெறும் ஜீவனாய் விடுகின்றான். மனதினின்று மலம் நீங்கினால் அதுவே சிவ சொரூபம் ஆகிறது. மனதை மலினப்படுத்தும் அழுக்கு எது என்பது அடுத்த கேள்வி. காமம், குரோதம், வெகுளி முதலியன மனதை அழுக்காக்கி விடுகின்றன. அவைகளை அறவே அகற்றிவிட்டால் சித்த மலம் அறுபடுகிறது. பின்பு அது சிவசொரூபம் ஆய்விடு கிறது. மனதை நிர்மலப்படுத்துவதே வாழ்க்கையின் நோக்கமாகும்.

மாயை என்பது திரிவுபட்டகாட்சி. மரக்கட்டை கள்ளன் போன்று காட்சி கொடுக்கிறது. கயிறு சர்ப்பம் போன்று காட்சி கொடுக்கிறது. இது திரிவுபட்ட காட்சி. இதேபாங்கில் பரம்பொருள் உலகம்போன்றுதென்படுகிறது. உலகமாகத் தென்படுவது பொய்க் காட்சி. பரம்பொருளா கத்தென்படுவது மெய்க்காட்சி. மனதுஎன்னும் கண்ணுடியை அணிந்து கொண்டு புறப்பொருள்களேப் பார்க்கிருேம். மலம் என்னும் குறைபாடு மனத்தகத்திருந்தால் புறப்பொருள் பிர பஞ்சமாகத் தென்படுகிறது. மனது என்னும் கண்ணுடி முற்றிலும் தூயதாகும்பொழுது பிரபஞ்சக் காட்சி மறைந்து போய்விடும்; பரம்பொருள் காட்சியே எங்கும் தென்படும். மனத்தகத்து மலம் இருக்கும் வரை மாயை என்னும் பிரபஞ் சப் பொய்க் காட்சியும் தென்பட்டுக் கொண்டிருக்கும்.

பிரபஞ்சத்துக்கு இயற்கை என்பது மற்ருெரு பெயர். அது ஓயாது இயங்குகிறது. ஆதலால் அது இயற்கை. இயங்குகின்ற உலகில் வாழும் உயிர்களும் இயங்கியாக வேண்டும். உயிர்களின் இயக்கத்துச்குக் கர்மம் என்று பெயர். உயிர் வாழ்க்கை இருக்கும் வரை கர்மம் நடைபெறு கிறது. உடலே எடுத்துள்ள உயிர்கள் கர்மத்தை ஒழித்து விட முடியாது. கர்மத்தை விட்டுவிட மனிதன் முயலுகிருன். ஆனல் அது சாத்தியப்படாது. பூமியில் வசிக்கின்றவன் பூமி சுழன்ருேடும் இடத்துக்கெல்லாம் ஓடிக்கொண்டிருக் கின்ருன். தான் இடம் மாறிப்போவது அவனுக்கு விளங்குவ தில்லே. ஆயினும் அவன் ஓயாது இடம் மாறிப் போய்க் கொண்டே இருக்கிருன். உடலே எடுத்தவர்கள் அங்ஙனம் கர்மம் புரிந்துகொண்டே இருக்கின்றனர். இம்மூன்றையும் தொகுத்து **மலமாயை கர்மம்** திரும்புமோ என்கிருர் காயுமானுர்.

ஒருநாள் என்று சொல்லுமிடத்து அதில் பகலும் இரவும் சேர்ந்து அமைந்திருக்கின்றன. அதே பாங்கில் ஜன்மம் என்று சொல்லுங்கால் ஜனனமும், மரணமும் அதில் அடங்கிக் கிடக்கின்றன. ஸ்தூல உடல் எடுத்து உலகில் தோன்றியுள்ள நிலைக்கு ஜனனம் என்று பெயர். சூக்ஷ்ம சரீரத்தில் பிரபஞ்சத்தில் மறைந்து கிடக்கும் நிலைக்கு மரணம் என்று பெயர். பிறப்பும் இறப்பும் இணைபிரியாதவைகள். பகலைத் தொடர்ந்து இரவு வருகிறது; இரவைத் தொடர்ந்து பகல் வருகிறது. ஒன்றுள்ள இடத்தில் மற்றதும் இருக்கிறது. விதையினின்று செடி வருகிறது; செடியினின்று விதை வருகிறது. இந்த நிலைகள் மாறி மாறி வருவதற்கு முடிவில்லை. எந்த ஜீவனுக்கு கர்மம் இருக்கிறதோ அவனுக்கு ஜனன மரணமும் நிகழ்ந்து கொண்டே வருகின்றன. ஜனனமரணம் துன்பம் நிறைந்தவைகள். உயிர் வாழ்க்கையில் இன்பம் இருப்பது போன்று தென்படுகிறது. நாளைக்கு சாவு வருமே என்று யோசிக்கின்றபொழுது இன்றைக்கே துன்பமும் தலையெடுத்து விடுகின்றது. இன்பத்தை அனுபவிக்கின்றவர்களெல்லாம் துன்பத்தையும் இனி அனுபவிக்கப் போகிறவர்கள் எனப் பொருள்படுகிறது. இவ்வுலகில் ஒருவேளையில் மகிழ்வுற்றிருப்பவன் மற்றொரு வேளையில் துன்பப்பட்டாக வேண்டும். இதினின்று யாரும் தப்பித்துக்கொள்ள முடியாது. இயற்கையின் நடைமுறை இதுவே. இக்கோட்பாட்டைத் தொடுவழக்காய்ச் **சென்மம் வருமோ எனவும் யோசிக்குதே மனது** என்று அச்சான்றோர் சாட்டுகின்றனர். தொடு வழக்கு என்பது முடிவில்லாத உலக நடைமுறையாம்.

மடமை அல்லது அறியாமை என்னும் சத்துருவினால் இத்தனைவிதக் கேடுகளெல்லாம் மனிதனுக்கு உண்டாயிருக்கின்றன. நலம்புரிவது போன்று கேட்டை விளைவிக்கின்ற

அந்த ஹித சத்துருவைக் கொன்றாக வேண்டும். பகைவன் பலம் மிகப் படைத்திருக்கும் பொழுது வெறும் கையால் அவனைக் கொன்றுவிட முடியாது. அதற்கேற்ற ஆயுதம் வேண்டும். வாள் ஒன்று வேண்டுமென்று விண்ணப்பிக்கப் படுகிறது. அக்ஞானம் என்னும் எதிரியை ஒழிப்பதற்கு சிரத்தையே பொருத்தமான வாள் ஆகிறது. சிரத்தை என் பதற்குப் பொருள் ஊக்கம். சிரத்தை இருக்குமளவு மனிதன் மேலோன் ஆகின்றான். ஒருநாளும் அது மனிதனைக் கீழ்மைப் படுத்துவதில்லை. சிரத்தை மூன்று வித வடிவெடுக்கிறது. ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊருக்குப்போக மனிதன் தீர்மானிக் கின்றான். அப்பயணத்தை நிறைவேற்றுதற்கு சிரத்தை வேண்டும். சிரத்தை இல்லாது அதைப் பூர்த்தி பண்ண முடியாது. முதலில் பிரயாணிக்குத் தன்மீது சிரத்தை உண்டாக வேண்டும். நம்பிக்கை என்று இவ்விடத்தில் சிரத்தை பொருள்படுகிறது. குறித்துள்ள ஊருக்குப் போக என்னால் முடியுமென்று தன்மீது நம்பிக்கை வரவேண்டும். பயணத்துக்குத் தான் தகுதியற்றவன் என்னும் தளர்வு வந்துவிட்டால் பிரயாணம் முறையாக நடைபெறாது. தன் மீது நம்பிக்கை வருவது சிரத்தையின் முதல் பகுதி. குறித் துள்ள ஊருக்குப் போக பல உபாயங்கள் இருக்கின்றன. நடந்து செல்லலாம், விதவிதமான வண்டிகளில் போகலாம், கப்பலில் போகலாம், ஆகாயத்தில் பறந்து போகலாம். இவைகளுள் ஏதேனும் ஒரு வாகனத்தின்மீது மனிதனுக்குச் சிரத்தை உண்டாக வேண்டும். வாகனத்தைக் குறித்து சந்தேகங்கள் வந்துவிட்டால் பயணம் நிறைவேறாது. வாகனத்தின்மீது நம்பிக்கை வைப்பது சிரத்தையின் இரண் டாவது பகுதி. தான் போய்ச்சேரும் ஊரில் தான் எண்ணிய எண்ணம் நிறைவேறும் என்கின்ற நம்பிக்கை சிரத்தையின்

மூன்ருவது பகுதி. இந்த மூன்று பகுதிகளும் ஒருங்கே அமைந்து விட்டால் சிரத்தை உச்சநிலேக்கு வந்து விடுகிறது. மடமையை அகற்றுதற்குத் தான். தகுந்தவன் என்று கருதுதல் வேண்டும். சான்ருேர்கள் காட்டியுள்ள உபாயங்கள் தான் அதற்குத் தகுந்தவைகள் என்கின்ற நம்பிக்கை வேண்டும். மடமையை அகற்றிய மேன்மக்கள் உலகில் இருந்திருக்கின்ருர்கள் என்று அவர்கள்மீது நம்பிக்கை வைக்கவேண்டும். இந்தப் பாங்கில் சிரத்தையுடன் பாடுபட்டால் மடமையில் வைத்துள்ள பந்தம் முதலில் போகிறது. நிலேயற்ற உலக வாழ்க்கையில் வைத்துள்ள பந்தம் அடுத்தபடியாகப் போய் விடுகிறது. கர்மபந்தம் கடைசியில் போய் விடுகிறது. மேகம் நீங்கப் பெற்றதும் சூரியப் பிரகாசம் உள்ளபடி தென்படுகிறது. மேகங்கள் இருந்த பொழுதும் சூரியப்பிரகாசம் இருந்தது. நம் கண்ணுக்குத் தென்படாது அதை மறைத்து வைத்தது மேகம். பரம்பொருளின் சொரூபம் அக்ஞான வேளேயிலும் நம் மனத்தகத்து மிளிர்ந்து கொண்டே இருக்கிறது. அப்படி அது மிளிர்ந்து கொண்டிருப்பதற்கிடையில் ஞானத்தைப் பெறவில்லே என்னும் மயக்கத்தை உண்டு பண்ணுவது மடமையின் செயல். சூரியனேக் கண்டதும் இது பகல்வேளே என்னும் உறுதிப்பாடு வருகிறது. அறிவோடு கூடிய உறுதிப்பாட்டுக்கு தீரம் என்று பெயர். கடவுளேப் பற்றிய ஞானமே மெய்ஞ்ஞானம். பிரபஞ்சத்தைப் பற்றிய ஞானம் பொய்யானது. பிறவிக் கடலினுள் அது மனிதனே ஆழ்த்தி விடுகிறது. கடவுளேப் பற்றிய மெய்ஞ்ஞானமோ கடவுளே அடைதற்கான உறுதியைக் கொடுக்கிறது. கடவுளே அடைதலே வீடுபேறு ஆகிறது. வீடு வந்து சேராதவன் மழையைப் பற்றியும், புயல் காற்றைப் பற்றியும், ஏனேய விபத்துக்களேப் பற்றியும் அஞ்ச

வேண்டும். ஆபத்துக்குட்பட்டவனுகவும் அவன் இருக்கின்ருன். வீட்டுக்குள் வந்ததும் கதவை அடைத்துக் கொள்ளலாம்; மழையில் நனையாது இருக்கலாம்; புயல் காற்றில் வேதனைப்படாதிருக்கலாம்; ஏனைய விபத்துக்களிடத்திருந்தும் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளலாம். கடவுள் என்னும் வீடுபேறு அடைந்தவர்களே பிறவிப் பிணியினின்று விடுபடுகின்றனர். துன்பம் கலவாத இன்பம் அவர்களுக்குக் கிட்டுகிறது. கடவுள் சாந்நித்தியம் என்னும் நல்ல பாதுகாப்பு அவர்களுக்கு அமைகிறது. இந்த நலன்கள் எல்லாம் தொகுத்துஎடுத்து இங்ஙனம் பகரப்பெறுகின்றன: சிரத்தையெனும் வாளும் உதவிப் பந்தமற மெய்ஞான தீரமும் தந்து என்னைப் பாதுகாத்து அருள் செய்குவாய். இக்கருத்துக்கள் அனைத்தையும் தொகுத்து மேற்கூறிய பாடலின்கண் தாயுமானர் அமைத்திருக்கிருர்.



## பரிபூரணனந்தம் - 6

பூதலய மாகின்ற மாயைமுத லென்பர் சிலர்
பொறிபுலன் அடங்குமிடமே
பொருளென்பர் சிலர்கரண முடிவென்பர் சிலர்
குணம்
போனஇட மென்பர்சிலபேர்
நாதவடி வென்பர்சிலர் விந்துமய மென்பர்சிலர்
நட்டநடு வேயிருந்த
நாமென்பர் சிலர்உருவ மாமென்பர் சிலர் கருதி
நாடில்அரு வென்பர்சிலபேர்
பேதமற வுயிர்கெட்ட நிலையமென் றிடுவர்சிலர்
பேசில்அரு ளென்பர்சிலபேர்
பின்னும்முன் னுங்கெட்ட சூனியம தென்பர்சிலர்
பிறவுமே மொழிவர்இவையால்
பாதரச மாய்மனது சஞ்சலப் படுமலால்
பரமசுக நிட்டைபெறுமோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந்தமே.

*பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள் சிலர் தாங்கள், சுவைக்கும் தின்பண்டங்களைப்பற்றி உரையாடலாயினர். தித்திப்பு நிறைந்த பொருள் எது என்பதைப்பற்றி அவர்களுள் கேள்வி ஒன்று எழுந்தது. தேன் குழல் மிகவும் தித்திப்பானது, தின்பண்டங்களுள் அதுவே சிறந்தது என்றான் ஒருவன். அதிரசந்தான் மதுரம் வாய்ந்தது, அதற்கு ஒப்பான தின்பண்டம் ஒன்றுமில்லை என்றான் மற்றொருவன். சுவைத்துண்ணும் பண்டங்களுள் லட்டுக்கு நிகரானது*

ஒன்றுமில்லை என்றான் இன்னொருவன். அதனிடத்துள்ள இனிப்பை வேறு எதிலும் காண முடியாது என்பது அவனுடைய கூற்று. இங்ஙனம் ஒவ்வொரு பிள்ளையும் ஒவ்வொரு பண்டத்தை இனிப்பு நிறைந்தது என்று உறுதி கூறினான். இப்பண்டங்கள் அனைத்துக்கும் சுவையைத் தந்தது ஒரு பொருளா, பல பொருள்களா என்று அவர்கள் ஆராய்ச்சி பண்ணவில்லை. வெறும் கருத்துவேற்றுமையில் அவர்களுடைய கேள்வி முடிவுக்கு வந்தது. அறிவிலிகளாகிய அப்பிள்ளைகளின் நிலையில் சமயவாதிகளில் பலர் இருக்கின்றனர். பிரபஞ்சத்தில் உயிர் வகைகள் பல இருக்கின்றன. ஜடப்பொருள்கள் எண்ணிறந்தவைகள். அவைகளை இயக்கும் விசைகளும் விதவிதமான பாங்குடையவைகள். இவை யாவுக்கும் ஆதிமூலமாயிருப்பது யாது என்னும் கேள்வியை நடுநாயகமாக இருந்து கேட்பவரைக் காண்பது அரிது. மேற்போக்காகவோ, ஏதோ ஒரு சமய சார்பாகவோ இருந்து ஒவ்வொருவரும் தத்தம் அறிவுக்கு எட்டியதுதான் முடிவான உண்மையென்று தீர்ப்புக்கட்டுகின்றனர். என்னென்ன பாங்கில் சமயவாதிகள் தீர்ப்புக் கட்டியிருக்கிறார்கள் என்பதைச் சிறிது ஆராய்ந்து பார்ப்போம்.

பூதங்களால் ஆனது இப்பிரபஞ்சம். பூதம் என்பதற்கு உண்டானது என்பது அர்த்தமாகும். ஐந்து பூதங்கள் இருக்கின்றன. அவையாவன: நிலம், நீர், நெருப்பு, காற்று, வெளி. இவ் ஐந்தினின்றே பிரபஞ்சத்திலுள்ள அனைத்தும் உருவெடுத்திருக்கின்றன. இந்த பூதங்களை ஆராய்ந்து பார்த்தால் அவைகளைப் பற்றிய உண்மை ஒன்று விளங்கும். ஒரு பூதம் மற்றொன்றாகப் பரிணமிக்க வல்லது. அப்படிப் பரிணமித்து வந்தது திரும்பவும் தனது பழைய நிலைக்கு ஒடுங்கிப்போய்விடுவதும் உண்டு. பூதங்களுள் மிக சூக்ஷ்ம

மானது ஆகாசம் அல்லது வெளி. அது எங்கும் வியாபக மாய் இருக்கிறது. அதற்கு எல்லை கிடையாது. ஒரு பெரிய சுவர் எடுத்திருக்கிறது என்று வைத்துக்கொள்வோம். அந் தச்சுவர் எங்கும் வியாபகமாயுள்ள வெட்ட வெளியை இரண்டு பகுதிகளாகப் பிரித்துவிடவில்லை. வெட்டவெளி யானது சுவருக்குள்ளும், சுவருக்கு வெளியிலும் தங்குதடை யற்று வியாபித்துள்ளது. இதை ஓர்ந்து உணருதல் அவசிய மாகிறது. இந்த வெட்ட வெளியினின்று வாயு உரு எடுக் கிறது. உரு எடுத்துள்ள வாயுவை ஸ்பர்சத்தால் நாம் உணருகிறோம். அது எப்படி உரு எடுத்து வருகிறது என் பது நமக்குப் புலனாவதில்லை. காற்றடித்து நம்மீது மோதும் பொழுதும் சுவாசிக்கும் பொழுதும் நாம் அதை உணர் கிறோம். அப்படியல்லாது வெட்டவெளியிலிருந்து காற்று உரு எடுத்து வருவதை வேறு எவ்விதத்திலும் அறிந்து கொள்ள நமக்கு இயலுவதில்லை. வெப்பத்தை உண்டு பண்ணவல்லதாகிறது காற்று. அதை உண்டுபண்ணத் தனக்கு இயலாவிட்டாலும் வெப்பத்தை வாங்கிக்கொள்ள வல்லது காற்று. மிக உயரமாயிருக்கும் மலையுச்சியில் வெப்பம் குறைந்து இருப்பதற்குக் காரணம் அதை வாங்கிக் கொள்ளும் காற்று மிகலேசானதாய் இருப்பதனாலேயாம். ஒரு சுரங்கத்துக்குள் சூரிய வெப்பம் நேர் செல்லுவதில்லை என்றாலும் அதற்குள் வெப்பம் மிக உண்டு. மிக இறுகிய காற்று ஆங்கே செறிந்துகிடப்பதுதான் அதற்குக் காரண மாகும். தீ எரிவதற்கும் காற்று தேவையாய் இருக்கிறது. ஆக, வாயுவினின்று நெருப்பு வருகிறது என்று இயம்பலாம். வெப்பத்தின் விளைவாகக் கடலிலுள்ள நீர் மேலே சென்று மழையாக மற்றோர் இடத்தில் பொழிகிறது. வெப்பத்தின் விளைவாக நம் உடலில் வியர்வை வருகிறது. ஆக, நீர்

உண்டாவதற்கு நெருப்பு துணை புரிகிறது என்று சொல்லுவது பொருந்தும். இளகியுள்ள பொருளைத் திரவம் அல்லது நீர்ப்பொருள் என்கிறோம். அது இறுகுகின்ற இடத்து மண்போன்ற கடினமான பொருள் ஆகின்றது. இவையாவையும் சுருக்கிச் சொல்லுமிடத்து காற்றுமயமாக சூரியன் இருக்கிறான்; வெப்பம் நிறைந்தவனாகவும் சூரியன் இருக்கின்றான். சூரியனிடத்திருந்து ஒரு பகுதி சிதறி வந்து பூமியானது. பூமியின்கண் அது இறுகிப்போய் நீர் ஆகவும் நிலம் ஆகவும் அமைந்திருக்கிறது. பூமி திரும்பவும் இளகிப்போனால் நீர் ஆகிறது. பிறகு அது விரிந்துபோய் வெப்பத்தில் ஒடுங்குகிறது. வெப்பம் காற்றில் ஒடுங்குகிறது. காற்று வெட்டவெளியில் சூக்ஷ்மமாக மறைந்துபோய்விடுகிறது. ஸ்தூலமாக இருக்கும் பூதங்கள் இப்படி சூக்ஷ்மமாகி மூலப்பிரகிருதி நிலைக்குப் போய்விடுகின்றன. மூலப்பிரகிருதிக்கு மாயை என்பது மற்றொரு பெயர். மாறி அமையும் தன்மையுடையது என அது பொருள்படுகிறது. பிரபஞ்சம் அனைத்துக்கும் மூலப்பிரகிருதியாகிய மாயைதான் காரணமென்று ஒரு சாரார் கருதுகின்றனர். பூதலயமாகின்ற மாயை முதல் என்பர் சிலர் என்று இக்கோட்பாட்டை தாயுமானவர் பகர்கிறார்.

வீடுகட்டி வீட்டுக்குள் வசித்திருப்பவர்கள் வெளியே வருவதற்கு வாயில் அமைக்கின்றனர். வெளியில் உள்ள காற்றும், வெளிச்சமும் உள்ளே போவதற்கு ஜன்னல் அமைக்கின்றனர். ஆக, வீட்டுக்குள் வசிப்பவர் ஜன்னல், கதவு முதலியவைகளைக்கொண்டு புற உலகோடு தொடர்பு வைக்கின்றனர். நம் உடல் அத்தகைய வீடுபோன்றது. உடலுக்குள் ஜீவாத்மன் குடியிருக்கிறான். இந்த உடலில் ஐம்பொறிகள் அமைந்திருக்கின்றன. ஒரு பொறி செய்கின்ற செயலை

மற்றென்று செய்யமுடியாது. பார்ப்பதற்கென்றே கண் அமைந்திருக்கிறது. புற உலகில் இருப்பவைகள் கண்ணுக்குப் புலனுகின்றன. எப்பொருள் எத்தகைய நிறமுடையது, எத்தகைய வடிவு உடையது, எத்தகைய வண்ணமுடையது ஆகியவைகளைக் கண்ணல் பார்த்து ஜீவன் முடிவுகட்டுகின்றான். பொறிக்கும் புலனுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. புறவுலகில் நிறமும், வடிவமும், வெளிச்சமும் இல்லாது போய்விட்டால் பொறியாகிய கண் இருந்தும் அது பயன்படாது. புலப்படுகின்ற புறப்பொருள்கள் இருந்து கண் இல்லாது போய்விட்டால் அப்பொழுதும் புறப்பொருள்களின் வண்ணம் வடிவம் முதலியவைகளைப் பற்றி ஜீவன் ஒன்றும் தெரிந்துகொள்ள முடியாது. கண் என்கின்ற பொறியும், வெளிச்சம் வடிவம் என்கின்ற புலனும் சேர்ந்திருந்தால்தான் புற உலகம் புலனுகிறது. இனி, காது என்னும் பொறியை ஆராய்ந்து பார்ப்போம். கண் செய்கின்ற வேலையைக் காது செய்ய முடியாது. காது செய்கின்ற வேலையைக் கண் செய்ய முடியாது. ஓசையைக் கேட்கும் திறன்காதுக்கு இருக்கிறது. ஓசையையும் ஒலியையும் புற உலகம் உண்டுபண்ணுகிறது. ஓசை, ஒலிகளுக்குப் புலன் என்று பெயர். காது என்கின்ற பொறியும் ஓசை ஒலி என்கின்ற புலனும் ஒன்றுக்கொன்று துணை புரிந்து புறவுலகம் ஜீவாத்மனுக்குப் புலனுகும்படி அமைந்திருக்கிறது. புறவுலகில் ஓசையே இல்லாது போய்விட்டால் காது இருந்தும் அது பயனற்றதாய்ப்போம். காது இல்லாது ஓசை இருக்குமிடத்தும் அது பயனற்றதாய்விடும். இக்கோட்பாடு சுவை, ஊறு, நாற்றம் ஆகிய மற்ற மூன்று பொறி புலன்களுக்கும் பொருந்துகிறது. ஐம்பொறிகள், வாயிலாக அமைந்திருக்கின்றன. புறவுலகம் ஐந்து விதங்களில் ஜீவாத்

மனுக்குப் புலனுகின்றது. இந்தப் பொறிகள் ஐந்தும், அவைகளுக்குரிய புலன்கள் ஐந்தும் இல்லாது போய்விட்டால் என்ன ஆகும் என்பது கேள்வி. அவைகள் இருப்பதற்கிடையிலே அவைகளைச் செயலற்றவைகளாகச் செய்துவிட மனிதனுக்கு இயலும் என்று ஒருசாரார் இயம்புகின்றனர். பொறிவாயில் ஐந்தையும் அவிந்துபட்டுப் போனவைகள் போன்று அடக்கி வைத்துப் பழகலாம் என்பது அவர்களுடைய கருத்து. அப்படி அவைகளை அடக்கிவிட்டால் புற உலகினின்று ஜீவனுக்கு ஒன்றும் புலனுவதில்லை. வீடு கட்டிய மனிதன் நாலாபக்கமும் சுவர் எடுத்து வீட்டுக்குள் தன்னை அடைத்து வைத்துக்கொண்டால் புறவுலகோடு தொடர்வற்றவனுய் விடுகின்றுன். அதே பாங்கில் பொறி புலன்களையெல்லாம் பயன்படுத்தாது விட்டுவிட்டால் பிறகு என்ன எஞ்சியிருக்கிறதோ அதுதான் முடிவான பொருள் என்கின்ற முடிவுக்கு இன்னெரு கூட்டத்தார் வந்து சேர்ந்தனர். மாயைதான் முடிவான நிலை என்று சொல்லுதற்கும், பொறிபுலன் அடங்கியவிடம் முடிவானநிலை என்று சொல்லுதற்கும் சற்று வேற்றுமை இருக்கிறது. மாயை ஜடப் பொருள். ஆங்கு உணர்வு இல்லை. ஆனுல் பொறிபுலன் அடங்கிய இடத்து உணர்வு மிச்சமிருக்கிறது. நமது அயர்ந்த உறக்கமே அதற்குச் சான்றுகிறது. அயர்ந்த உறக்கத்தில் பொறிக்கும் புலனுக்கும் இடமில்லை. ஆனுல் உறக்கத்தை அனுபவித்த ஜீவன் ஒருவன் இருந்திருக்கிறுன். முற்றிலும் தன்மயமாய் இருந்த அந்த ஜீவ உணர்வு தான் முடிவான நிலை என்பது ஒரு கூட்டத்தார் கருத்து. இக் கருத்தைப் பொறி புலன் அடங்குமிடமே பொருளென்பர் சிலர் என்று தாயுமானர் பகர்கிறுர்.

பொறிகளுக்கு இந்திரியங்கள் என்பது மற்றெருபெயர். புறவுலகைப் புலப்படுத்துதற்கென்றே அவைகள் அமைந்

தவைகள். பாகியேந்திரியங்கள் என்றும், பாகியகரணங்கள் என்றும் பொறிகள் பகரப்பெறுகின்றன. அந்தப் பாகியேந் திரியங்களைக் கருவிகளாகப் பயன்படுத்தும் அந்தக்கரணம் என்பது ஒன்று உண்டு. வெறுமனே கரணம் என்றும் அந்தக்கரணத்தைப் பகர்வதுண்டு. அது செய்கின்ற செயலை அனுசரித்து இந்த அந்தக்கரணத்துக்கு வேறு நான்கு பெயர்கள் உண்டு. சித்தம், மனம், புத்தி, அகங்காரம் என் பன அந்த நான்கு பெயர்களாம். பண்டகசாலையில் பொருள் களைச் சேகரித்துவைப்பது போன்று புறவுலகின் பதிவுகளை வெறுமனே வாங்கிவைத்திருப்பது சித்தம். அப்பதிவுகளை விதவிதமான உணர்வுகளாக அமைத்துக் காட்டுவது மனது. பசி, தாகம், குளிர், வெப்பம் ஆகிய உணர்வுகளை உருவாக்கு வது மனது. அப்படி உருவான உணர்வுகளை சுகம் நிறைந் தவைகள் என்றும், துக்கம் தருபவைகள் என்றும், வேண்டப் படுபவைகள் என்றும், விலக்கப்படுபவைகள் என்றும் பாகு படுத்துவது புத்தி. இத்தனைவிதமான உணர்வுகள் தனக் குச் சொந்தமானவைகள் என்று உரிமை பாராட்டுவது அகங்காரம். கரணம் என்பது இத்தனை விதங்களில் உள்ளிருந்து வினையாற்றிவருகிறது. இத்தகைய கரணமும் ஒடுங்கிப் போனபிறகு எஞ்சியிருப்பது எதுவோ அதுதான் முடிவானநிலை என்று மற்றொரு கூட்டத்தார் இயம்புகின்ற னர். கரண முடிவென்பர் சிலர் என்னும் கூற்றாக தாயு மானவர் பாடலில் இது இடம் பெற்றுள்ளது.

இப்பிரபஞ்சமானது முக்குணத்தால் ஆனது என்று சாங்கியதர்சனம் காட்டுகிறது. இக்கோட்பாடு சமயங்கள் அனைத்துக்கும் ஒப்ப முடிந்ததாகும். ஸத்வம், ரஜஸ், தமஸ் என மூன்று குணங்களும் பெயர் பெறுகின்றன. தமோ குணம் கார் இருள் மயமானது. கறுப்பு நிறம் அதற்குரியது.

உயிரற்ற ஜடப்பொருள்களெல்லாம் தமோகுணத்தின் தோற்றங்களாகும். அதைவிட ஒருபடி மேலே இருப்பது ரஜோகுணம். அதன் நிறம் சிவப்பு. இயற்கையில் தென் படுகின்ற வித விதமான விசைகளும் சக்திகளும் ரஜோ குணத்தின் தோற்றங்களாகும். நடமாட்டங்கள் அனைத்துக் கும் முகாமையாயிருப்பது ரஜோகுணம். அதற்கு ஒருபடி மேலே இருப்பது ஸத்வகுணம். அதன் நிறம் வெண்மை. உயிர்கள் தோன்றுதற்குத் துணையாயிருப்பது ஸத்வகுணம். இந்த மூன்று குணங்களும் ஒன்றோடொன்று சம்பந்தப் பட்டவைகள். ஒரு குணம் மற்றொரு குணமாக மாறியமை யும் தன்மை உடையது. குணபேதத்தை முன்னிட்டே பிர பஞ்சமுழுதிலும் சராசரமாயிருப்பவைகள், சேதன அசேதன மாயிருப்பவைகள் ஆகிய அனைத்தும் தோற்றத்துக்கு வந் துள்ளன. ஒரு குணம் மற்றொரு குணமாக மாறுவதால் பிர பஞ்சத்தில் பரிணமம் அல்லது முன்னேற்றத்துக்கு இட மிருக்கிறது. பிரபஞ்சத்திலுள்ள அனைத்தும் கீழ்நிலையிலி ருந்து மேல்நிலைக்குப் பரிணமித்து வருகின்றன. ஒரு குணம் மற்றொரு குணமாக மாறுதற்குச் சான்று ஒன்று எடுத்துக் கொள்வோம். புல் பச்சைப்பசேர் என்றிருக்கிறது. அது கறுப்புநிற இனத்தைச் சேர்ந்ததாகும். அதைத் தின்கின்ற பசு செக்கச்செவேரென்றிருக்கிற ரத்தத்தைப் பசும்புல்லி லிருந்து உண்டுபண்ணுகிறது. உயிர் வாழ்க்கையிலுள்ள சக்தியைச் சிவப்பு நிறமாயுள்ள ரத்தம் விளக்குகிறது. ரத்த புஷ்டியுடைய பசு அந்த ரத்தத்தை வெண்மை நிறம் படைத்த பாலாக மாற்றுகிறது. உயிரையே ஓம்பவல்லது பால். ஒரு நிறம் மற்றொரு நிறமாகப் பரிணமிப்பதற்குப் பசுவின் வாழ்க் கையிலுள்ள இச்செயல்கள் எடுத்துக்காட்டுகள் ஆகின்றன. ஸத்வகுணத்துக்கு வந்த பிறகு என்னவாகிறது என்பது

அடுத்த கேள்வி. குணத்தைக் கடந்தநிலைக்குப்போக அதன் பிறகு உயிர் வாழும் ஜீவன் ஒருவனுக்குச் சாத்யமா கிறது. குணத்தின் அறிகுறியாயிருப்பது நிறம். நிறத்தைக் கடந்த நிலைக்குப்போக ஒருபொருளுக்கு இயலும் என்று கண்டு பிடிக்குமிடத்து அது குணதீதத்துக்குப் போகிறது என்று யூகிக்கலாம். கருப்பஞ்சாற்றிலிருந்து கருப்பட்டி அல்லது கன்னங்கரேலென்றிருக்கின்ற உணவுப்பொருளை உண்டுபண்ணுகின்றோம். அதை இன்னும் கொஞ்சம் சுத்தம் செய்கின்ற இடத்து அது பழுப்பு நிறம் அல்லது சிவப்பு நிறம் பெறுகின்றது. நன்றாகச்சுத்தம் செய்கின்ற இடத்து வெள்ளைவெளேரென்றிருக்கின்ற தூயசர்க்கரை ஆகிறது. அதைச்சுத்த ஜலத்தில் கரைத்தால் நிறமற்ற பாகு ஆய்விடு கிறது. தூயவெள்ளை நிறத்துக்கு வந்தான பிறகு நிறத்தை யும் கடந்த நிலைக்கு ஒரு பொருள் போகக்கூடும் என்பதற்கு இவை சான்றுகள் ஆகின்றன. ஜீவனும் முக்குணத்தில் கட்டுண்டவனாய் இருக்கின்றான். உயிர் கீழான நிலையில் இருக்கின்றபொழுது தமோ குணமயமாய் அந்த ஜீவன் இருக்கின்றான். சற்று மேல்நிலைக்கு வரும்பொழுது ரஜோ குணம் வடிவெடுத்தவன் ஆகின்றான்; பின்பு ஸத்துவத்துக் குப் போகின்றான். ஸத்வகுணத்தில் இருக்கும் உயிரைப் பேருயிர் என்று பகரலாம். அந்த குணத்தைக் கடந்த நிலைக் குப் போகின்றபொழுது அந்த ஜீவன் பரம்பொருளில் சேர்ந்துவிடுகிறான். இக்கோட்பாட்டை குணம் போன விடமென்பர் சிலபேர் என்று தாயுமானார் பகர்கிறார்.

இயற்கையை இன்னொரு பாங்கில் ஆராய்ச்சி செய்ய லாம். இயற்கையினின்று ஓயாது ஓசை உண்டாய்க்கொண் டிருக்கிறது. ஓசையும் இயற்கையும் இணைபிரியாதவைகள். ஓசையை உள்ளபடி அறிந்து கொண்டால் இயற்கையை

முற்றிலும் அறிந்துவிடலாம். இயற்கையிலுள்ள ஒவ்வொரு பொருளும் ஓசைக்கு விளக்கமாகிறது. ஆகையால் தான் அப்பொருளுக்குப் பதார்த்தம் என்னும் பெயர் வந்தது. பதமும் அதன் அர்த்தமும் என்று அச்சொல் விரிவடைகிறது. ஜடப்பொருள்களும் நாதம் அல்லது சப்தசொரூபம்; சேதனப் பொருள்களும் நாதசொரூபம். நாதத்தை மாற்றியமைக்க மனிதனுக்கு இயலுகிறது. மற்ற உயிர்கள் தத்தமக்கு அமைந்துள்ள நாதத்தில் கட்டுப்பட்டவைகளாய் இருக்கின்றன. நாதத்தை வேண்டியவாறு மாற்றிவிட மனிதனுக்கு இயலும். 'சிவ', 'நாராயண' போன்ற மந்திரங்களை ஓயாது உச்சரிப்பதன் மூலம் தன் அமைப்பிலுள்ள நாதத்தை மனிதன் மாற்றியமைக்க முயலுகின்றான். அத்தகைய நாதங்களை உச்சரித்து அவன் சொரூபத்தையே புதுப்பித்துக்கொள்ள வல்லவனாகின்றான். நாதத்துக்கு அத்தகைய சக்தியும் மகிமையும் இருக்கிறது. பிரபஞ்ச முழுதுக்கும் அடிப்படையாயிருக்கின்ற ஓசைக்கு நாதப்பிரம்மம் என்று பெயர். இக்காரணத்தை முன்னிட்டு நாதவடிவென்பர் சிலர் என்னும் கோட்பாடு வந்துள்ளது.

பெரிய மரம் ஒன்றை ஓரிடத்தில் காண்கின்றோம். அதை மற்றொரு இடத்துக்குப் பெயர்த்தெடுத்துக் கொண்டுபோக முடியாது. ஆனால் அதேபோன்ற மரம் ஒன்றை மற்றோர் இடத்தில் உண்டுபண்ணிவிடலாம். அந்த மரத்தில் உண்டாகும் விந்து அல்லது விதையைப் பெறுவது அதற்குற்ற உபாயமாகிறது. ஒவ்வொரு பொருளுக்கும் ஏற்ற விந்து இருக்கின்றது. எந்த விந்துவிலிருந்து இயற்கை முழுதும் உண்டானது என்னும் ஆழ்ந்த கேள்வியை யாரோ சிலர் கிளப்பினர். அதற்கேற்ற ஆராய்ச்சியையும் செய்து பார்த்தார்கள். நாதப்பிரம்மமே பிரபஞ்ச முழுதுக்கும் விந்துவாய்

உள்ளது என்னும் உண்மையைக் கண்டறிந்தார்கள். இப்படிக் கண்டறிந்ததினால் விந்து மயமென்பர் சிலர் என்னும் கோட்பாடு வந்துள்ளது.

தத்துவதர்சிகள் இன்னொரு போக்கில் மெய்ப்பொருளைப் பற்றி ஆராய்ச்சி செய்தனர். சந்தைக் கடைத்தெரு ஒன்று இருக்கிறது. ஆங்கு ஜனசஞ்சாரம் ஏராளமாக நிகழ்கிறது. மக்களும் மற்ற உயிர் வகைகளும் ஓயாது வந்துகொண்டும், போய்க்கொண்டும் இருக்கிறார்கள். பண்டங்களின் போக்கு வரத்தும் அத்தகையதே. இந்த இடத்துக்கு உயிர்களே வராதவேளை ஒன்று உண்டா, பண்டங்களை இங்குக் கொண்டு செல்லாத வேளை ஒன்று உண்டாஎன்னும் கேள்வி பிறந்தது. அத்தகைய ஓய்வுவேளையேகிடையாது; சர்வகாலமும் உயிர்களும் பண்டங்களும் இங்கு வந்துகொண்டே இருக்கின்றன என்னும் முடிவுக்குப் பலர்வந்தனர். ஆனால் அக்கூட்டத்தில் ஒருவன் எழுந்து நின்றான். பண்டங்களும் உயிர்களும் வராத வேளை ஒன்றுண்டு என்று அவன் உறுதி கூறினான். அதைச் சற்று விளக்கு என்று மற்றவர்கள் கேட்டார்கள். அவன் விடைவிடுத்தான்: "பல நாட்களில் இரவெல்லாம் உறங்காதிருந்து இந்த இடத்தை நான் கண்காணித்து வந்திருக்கின்றேன். நள்ளிரவில்இங்குப்போக்குவரத்து ஒன்றும் கிடையாது. உயிர்களும் வருவதில்லை; பண்டங்களும் வருவிக்கப்படுவதில்லை. அத்தகைய நிலைக்குப் பல தடவைகளில் நான் சாக்ஷியாயிருந்திருக்கிறேன்" என்றான். இதே பாங்கில் பிரபஞ்சத்திலுள்ள அனைத்துக்கும் போக்கும் வரவும் உண்டு. இவைகளெல்லாம் போக்கு வரவற்று இருக்கின்ற பொழுது அந்நிலைக்கு சாக்ஷியாக ஏதேனும் ஒன்று உண்டா என்ற கேள்வி பிறந்தது. அந்தக்கேள்விக்கு விடையும் வந்தது. நட்ட நடுவே இருந்த நாம் என்பர் சிலர் என்பது அதற்கு விடை.

பொருள் ஒன்று சூக்ஷ்மநிலையில் இருக்கின்ற பொழுது நமக்குக் கட்புலனுவதில்லை. ஸ்தூலநிலைக்கு வருகின்ற பொழுது அது கட்புலனுகிறது. அதற்குத் திருஷ்டாந்தம் ஒன்று எடுத்துக்கொள்வோம். நீர் ஆனது ஆவியாக மாறி எங்கும் வியாபித்திருக்கிறது. ஆனல் நமக்கு அது புலப் படுவதில்லை. அது கார்மேகமாகவோ, வெண் மேக மாகவோ சிறிது ஸ்தூல நிலைக்கு வருகின்றபொழுது கண் ணுக்குப் புலனுகிறது. ஆனல் அதை நாம் கட்டிப்பிடிக்க முடியாது. அதைவிட ஸ்தூல நிலையாகிய நீர் ஆக அது மாறும்பொழுது மழையாகப் பொழிகிறது. மழை நீரைத் தடுத்து வைக்கலாம், எடுத்துக் கையாளலாம். அதைவிட ஸ்தூலநிலை ஒன்று அதற்குண்டு. உறைபனியாக மலையின் மீது வீழ்ந்து அவ்விடத்திலேயே அது நெடுங்காலம் இருக்க முடியும். அப்பொழுது பாத்திரம் ஒன்றும் இன்றி கல் போன்று அதை நாம் வெட்டி எடுத்து கையாளலாம். நமக் குப் பயன்படுதல் பொருட்டே அது உருவம் எடுத்து வந் துள்ளது. பிரபஞ்சமுழுதும் அப்படி உரு எடுத்து வந்தது. நம்முடைய நன்மைக்காக அது உரு எடுத்திருக்கிறது. நாம் அதைப் பயன் படுத்துதல் பொருட்டும் அது அப்படி அமைந் திருக்கிறது. ஆதலால் அதை உருவமாம் என்பர் சிலர்.

இப்படி அப்பொருள் உருவெடுத்திருப்பது அதற்குச் சிறப்பன்று. உருவெடுக்குமளவு அதன் சக்தி தடைப்பட்டு விடுகின்றது. உறைபனிக்கட்டியில் சக்தியின் விளையாட்டு பெரிதும் தடைப்பட்டு விடுகிறது. அது இளகி நீராக ஓடும் பொழுதோ அதன் சக்தி அதிகரிக்கிறது. சக்கரங்களை இயக்குகின்ற சக்தி நீருக்கு வந்துவிடுகிறது. அதை இன் னும் சூக்ஷ்ம நிலைக்கு மாற்றி ஆவியாகச் செய்துவிட்டாலோ, பெரிய யந்திரங்களை இயக்குகின்ற சக்தி நீராவிக்கு வந்து

விடுகிறது. சூக்ஷ்மநிலையில் அது படைத்திருக்கின்ற சக்தி முழுதும் ஸ்தூலநிலையில் மறைந்துபட்டுப் போய்விடுகிறது. ஆதலால் உருவத்தில் இருப்பதைவிட அருவத்தில் அதற்கு ஆற்றல் மிக வந்துவிடுகின்றது. ஆற்றல் மிகப் படைத்ததே ஆராதனைக்கும் உரியதாகிறது. ஆதலால் **கருதிநாடில் அரு வென்பர் சிலபேர்.**

கணக்கற்ற உயிர்வகைகள் இருக்கின்றன. ஒவ்வோர் உயிர்க்கும் அதன் தனி இயல்பு உண்டு. தனி இயல்புகளை யெல்லாம் நீக்கிவிட்டபிறகு உயிர்கள் என்ன நிலையில் இருக் கின்றன என்னும் கேள்வி பிறந்தது. ஆற்றுநீர், சேற்றுநீர், கிணற்றுநீர், கடல்நீர் ஆகியவைகளிடத்திருந்து ஒவ்வொன் றுக்கும் ஏற்பட்டுள்ள உபாதியை நீக்கிவிட்டால் சுத்த ஜலம் தான் மிச்சமிருக்கிறது. உயிர்களின் உபாதிகளையெல்லாம் நீக்கிவிட்டால் சுத்த சைதன்யம் எஞ்சியிருக்கிறது. இக் கோட்பாட்டை அடிப்படையாக வைத்துக்கொண்டே, **பேத மற உயிர்கெட்ட நிலையம் யென்றிடுவர் சிலர்.**

இயற்கையின் நடைமுறை தாறுமாறானதா அல்லது ஒரு ஒழுங்குப்பாட்டை அது அடிப்படையாகக் கொண்டிருக் கிறதா என்பது ஆராய்ச்சிக்குரிய கேள்வியாகும். இயற்கை யின் நடைமுறை முழுதிலும் ஒழுங்குப்பாடு இருக்கிறது. அதற்குச் சான்று ஒன்று எடுத்துக் கொள்வோம். ஒருவன் தனக்குத் தோன்றுகிற வேளையிலெல்லாம் உணவு உண் கிறான். மற்றொருவன் குறிப்பிட்ட வேளையில் மட்டும் அள வெடுத்து உண்கின்றான். ஒழுங்குப்பாடின்றி உணவு உண் பவன் தனது ஜீரண சக்தியைக் கெடுத்துக் கொள்கின்றான்; நோயை வருவித்துக் கொள்கிறான். அளவுபட முறையாக உணவு உண்பவனுக்கு ஜீரணசக்தி நல்ல நிலையில் இருக் கிறது; நோய் வராது தடுக்கப்படுகிறது. இயற்கை முழுதி

லும் இத்தகைய நேர்மையும் ஒழுங்குப்பாட்டையும் காண லாம். இந்த ஒழுங்குப்பாட்டுக்கு இறைவனது அருள் என் னும் பெயர் வந்துள்ளது. இதைப் பெருமைப்படுத்துகின்ற பாங்கில் பேசில் அருளென்பர் சிலபேர்.

மற்றெரு கூட்டத்தார் இன்னெருவித ஆராய்ச்சி செய் தனர். நம் ஒவ்வொருவர் உள்ளத்திலும் ஓயாது எண்ணங் கள் உதித்துக்கொண்டே இருக்கின்றன. ஹிருதயம் துடித் துக் கொண்டிருப்பதற்கு ஒப்பாகிறது எண்ணத்தின் உதயம். பிறந்தது முதற்கொண்டு சாகும் வரையில் ஹிருதயத்தினு டைய துடிதுடிப்புக்கு ஓய்வு கிடையாது. பல ஆண்டு களாக அது செயல்புரிந்து கொண்டே இருக்கிறது. அது சாத்தியப்படுமா என்னும் கேள்வி எழுகின்றது. ஓய்வு பெருவிடில் இயற்கையில் எதும் வேலைக்கு உதவாது என் பது கோட்பாடு. ஓய்வு பெருத ஹிருதயம் எப்படி நன்கு வேலை செய்ய முடியும்? உண்மையில் அதற்கு ஓய்வு உண்டு. முதல்தடவை துடிப்பதற்கும் இரண்டாந்தடவை துடிப்பதற் கும் இடையில் சற்று நேரம் அது ஓய்வுபெற்றிருக்கிறது. அது மிகச் சிறிய காலமாதலால் அது ஓய்வு நேரம் என்பது நமக்குப் புலனுவதில்லை. அதேபாங்கில் நம் மனதில் எழு கின்ற எண்ணங்களுள் முன்னுக்கு எழுந்த எண்ணம் என் பதும், பின்னுக்கு எழுந்த எண்ணம் என்பதும் உண்டு. இந்த இரண்டு எண்ணங்களுக்கும் இடையில் எண்ணமற்ற குறுகியநிலை ஒன்று இருக்கிறது. எண்ணமில்லாத நிலையை சூன்யம் என்று ஒருசாரார் இயம்புகின்றனர். அந்த நிலை யில் நம் சொரூபம் எப்படி இருந்தது என்பதைத் தெரிந்து கொண்டால் நம்மைப்பற்றிய முடிவான உண்மையை நாம் தெரிந்துகொண்டவர் ஆகின்றேம். பின்னும் முன்னும் கெட்ட சூன்யம் அது என்பர் சிலர் என்று இவர்களுடைய

ஆராய்ச்சிக்குத் தாயுமானவர் விளக்கம் கொடுத்துள்ளார். எண்ணிறந்த கோட்பாடுகளில் ஏதோ சில முக்கியமானவை கள்தான் ஈண்டு எடுத்து விளக்கப்பெற்றிருக்கின்றன. விளக்கப் பெருத பகுதிகள் பல இருக்கின்றன. அவைகளைப் பொதுவாக பிறவுமே மொழிவர் என்று தாயுமானவர் பகர்ந்துவிடுகிருர்.

இத்தனை விதமான ஆராய்ச்சிகள் மனிதனுடைய சாத னத்துக்குப் பயன்படுகின்றனவா என்பது கேள்வி. இவை களைக் குறித்து ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் பகர்ந்துள்ள ஓர் உவமைக் கதையை ஈண்டு எடுத்து இயம்புவது பொருந் தும். பழத்தோட்டம் ஒன்றினுள் தோழர்கள் சிலர் சென்ற னர். அவர்களில் பலர் பூமியின் விஸ்தீரணத்தையும், மர வகைகளின் எண்ணிக்கையைப்பற்றியும், அவைகளை உண்டு பண்ணிய சொந்தக்காரனைப் பற்றியும் விதவிதமான ஆராய்ச் சிகள் செய்துகொண்டு போனர்கள். ஆனல் அவர்களுள் ஒரு வன் மட்டும் அத்தகைய பொருளற்ற ஆராய்ச்சியில் தன் கருத்தைச் செலுத்தவில்லை. தோட்டக்காரனேடு சிநேகம் செய்துகொண்டு சில பழவகைகளை அவனிடமிருந்து பெற்று புசித்துப் பூரிப்படைந்திருந்தான். தோட்டத்துக்குள் சென் றவர்களுள் மரங்களையும், இலைகளையும் எண்ணியவர்கள் அறிவாளிகளா, கனிகளைப் பெற்று அருந்தியவன் அறி வாளியா என்று விசாரிக்குமிடத்துக் கனியுண்டவனே அறி வாளியாகின்ருன். மானுடனுக்கு ஆயுள் அற்பமானது. பொருள்படாத ஆராய்ச்சிகளில் வெறுமனே காலத்தைக் கழித்தல் கூடாது. பிறவிப் பெரும்பயனைப் பெற்ருக வேண் டும். அதற்காகத் தான் செய்ய வேண்டிய சாதனம் எது என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். அத்தகைய சாத னத்தில் ஈடுபட வேண்டும். வீண்காலம் போக்குபவர்களைக்

குறித்து இவையால் பாதரஸமாய் மனது சஞ்சலப்படும் அலால் பரமசுக நிஷ்டை பெறுமோ என்று தாயுமானவர் கேட்கின்ருர்.

பாதரஸத்தையும் மனதையும் ஒன்ருேடொன்று சீர் தூக்குவது முற்றிலும் பொறுத்தமானது. ஒரு பாண்டத்தில் வார்த்து வைத்திருக்கும் பாதரஸத்தை பாண்டத்தோடு தூக்கிச் செல்லுகின்றபொழுது அது அசைந்துகொண்டே இருக்கும். அசைவற்றிருக்கும் நிலையை அதனிடத்துக் காணமுடியாது. பாதரஸத்தில் ஒரு பகுதியைத் தரையின் மீது சிந்திவிட்டால் அது கணக்கற்ற துளிகளாகச் சிதற டைந்து போய்விடும். பிறகு அவையாவற்றையும் சேகரித்து ஒன்ருக்குவது மிகக் கடினமானது. ஆயினும் இத்தகைய பாதரஸத்தைக் கட்டவல்ல சித்த வைத்தியர்கள் இருக் கிருர்கள். திரவம்போன்று இருக்கும் பாதரஸம் கட்டியான பிறகு திரண்டு கடினமான மணி ஆக வடிவெடுத்து விடு கிறது. மணியாகக் கட்டப்பெற்ற பாதரஸம் நோய்களை நீக்க வல்லதாகிறது. தத்தளித்துக்கொண்டு இருக்கும் இயல்பு அதைவிட்டு அகன்றுவிடுகிறது. உறுதிப்பாட்டை யும், ஒன்றுபட்ட நிலையையும் அதனிடத்துக் காணலாம்.

புறப்பொருள்களில் ஒன்ருகிய பாதரஸத்திடத்துக் காணும் பாங்குகளையெல்லாம் அகப்பொருளாகிய மனத் திடத்தும் காணலாம். சஞ்சலப்படும் தன்மை அதனிடத் திருக்கிறது. இயல்பாக அது பதைபதைப்புடையது. மனது என்னும் குரங்கு ஆசை என்னும் கள்ளைக் குடித்து விட்டது. அதை முன்னிட்டு அதன் சஞ்சலம் பன்மடங்கு அதிகரித்தது. மனது என்னும் குரங்கைப் பொருமை என் னும் தேள் கொட்டிவிட்டது. அத்தகைய நிலையில் பாத ரஸத்தைவிடப் பன்மடங்கு சஞ்சலமே வடிவெடுத்ததாய்

விட்டது. தரையில் சிதறுண்டுகிடக்கும் பாதரஸத்தை ஒரு வேளை சேகரித்துவிடலாம். உலக விஷயங்களில் சிதறுண்டு கிடக்கும் மனதை ஒருமுகப்படுத்துவது இயலாத காரியம். மனது கூத்தாடுகின்றபொழுதெல்லாம் அதற்கு அடிப்படை யிலுள்ள ஆத்மசொருபத்தின் ஆனந்தம் மறைந்துபட்டுப் போய்விடுகிறது. மனது அமைதியுற்றிருக்கும் வேளையில் ஆத்மசொருபத்தின்கண் உள்ள ஆனந்தமும் வெளிப்படை யாகின்றது. அந்த ஆனந்த நிலையே பரமசுகமெனப் பகரப் பெறுகிறது. ஒப்பற்ற அந்தப் பரமசுகத்தில் மனது ஒடுங்கி யிருக்குமானால் அது நிட்டை அல்லது நிஷ்டை என்ப தாகும். ஆனால் கூத்தாடுகின்ற மனதுக்கும் பரமசுக நிஷ் டைக்கும் வெகுதூரம் என்பதைத் தாயுமானவர் இங்குக் குறிப்பிடுகிறார்.

முடிவானநிலை எது என்பதைப்பற்றி மேலே குறித் துள்ள ஒவ்வொரு கோட்பாடும் உண்மையை ஏகதேசம் எடுத்து இயம்புகிறது. ஒவ்வொரு கனியினிடத்தும் ஒரு விதச் சுவையும், உணவுச்சத்தும் இருப்பதுபோன்று இப் பாடலின்கண் அமைந்துள்ள கோட்பாடுகள் அனைத்திலும் மெய்ப்பொருளைப்பற்றிய உண்மை அடங்கியிருக்கிறது. உடலுக்கு ஒத்துக்கொள்ளும் சில கனிகளை அருந்தலாம்; அல்லது எல்லாக் கனிகளையும் அருந்தலாம். அவைகளைப் பற்றி வீணே பேசிக்கொண்டிருப்பதில் பயனில்லை. பரமசுக நிஷ்டைபெற விரும்புகின்றசாதகன் இந்தப்பாடலில் அடங்கி யுள்ள மெய்ப்பொருளைப்பற்றியுள்ள கோட்பாடுகளில் ஏதே னும் இரண்டொன்றைத் தீவிரமாக அனுஷ்டித்தாலும் அவனுக்கு மனம் ஒடுங்கும், நிஷ்டை கைகூடும். மதவாதங் கள் செய்வதில் அவன் காலம் கழிக்கலாகாது. தனக்கு உகந்த அனுஷ்டானத்தை அவன் தீவிரமாகக் கையாளுதல்

அவசியமாகிறது. அத்தகைய அனுஷ்டானத்தில் விருப்பம் வரவேண்டுமென்று பரிபூரண ஆனந்தமாயிருக்கும் பரம் பொருளிடத்து விண்ணப்பம் செய்யப்படுகிறது. இந்தப் பரம்பொருள் பரமபதத்தில் இருக்கின்ருர், அல்லது நமக் குத் தொடர்வில்லாத ஒரு அதீத நிலையில் இருக்கிருர் என் பது உண்மையல்ல. பார்க்குமிடமெங்கும் அவர் இருக் கின்ருர். வானத்தில் பார்க்குமிடமெங்கும் சிறு சிறு புள்ளி களாக நக்ஷத்திரங்கள் தென்படுவது போன்று வியாபித் திருக்கிருர் அல்லர்; நிறைபொருளாக, நீக்கமற்றவராக, அவரே யாவுமாய் எங்குமாய் இருக்கிருர். நம் மனத்தகத்தும் அவரே நிறைந்திருப்பதால் அவருடைய சான்னித்தியத்தை ஏதேனும் ஒரு சாதனத்தைத் துணையாகக்கொண்டு அறிந்து கொள்ளுதல் வேண்டும். இக்கோட்பாடுகள் அனைத்தை யும் தாயுமானவர் பரிபூரணனந்தம் ஆருவது பாடலில் அமைத்துப் பாடியிருக்கிருர்.

---

## பரிபூரணனந்தம் - 7

அந்தகா ரத்தையோர் அகமாக்கி மின்போல்என்
அறிவைச் சுருக்கினவரார்
அவ்வறிவு தானுமே பற்றினது பற்ருய்
அழுத்தவுந் தலைமீதிலே
சொந்தமா யெழுதப் படித்ததார் மெய்ஞ்ஞான
சுகநிட்டை சேராமலே
சோற்றுத் துருத்தியைச் சதமெனவும் உண்டுண்டு
தூங்கவைத் தவரார்கொலோ
தந்தைதாய் முதலான அகிலப்ர பஞ்சந்
தனைத்தந்த தெனதாசையோ
தன்னையே நோவனே பிறரையே நோவனே
தற்கால மதைநோவனே
பந்தமா னதுதந்த வினையையே நோவனே
பரமார்த்தம் ஏதுமறியேன்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந்தமே.

ஒவ்வொருவரும் குடியிருப்பதற்கு இடம் ஒன்றைத் தேடிக்கொள்கின்றனர். எத்தகைய இடத்தில் ஒருவர் வசித்திருக்கிருர் என்பதைப் பார்த்து அவருடைய பரிபாகத்தை ஓரளவு நாம் அறிந்துகொள்ளலாம். ஒருமனிதனை நேரில் பார்க்க இயலாவிட்டாலும் அம்மனிதன் வாழ்ந்திருக்கும் வீட்டைப் பார்த்தே அவனுடைய இயல்பைப் பெரிதும் தெரிந்துகொள்ளலாம். தனது வீட்டை அவன் எப்படி வைத்திருக்கின்ருன், அதன் சுற்றுப்புறத்தை என்ன நிலையில் வைத்திருக்கின்ருன், வீட்டினுள் பண்டங்களை எவ்விதம்

அமைத்து வைத்திருக்கின்ருன் ஆகிய இத்தகைய செயல் களைக் கொண்டு அம்மனிதனுடைய இயல்பைப் பெரிதும் கண்டு பிடித்து விடலாம். நல்ல இயல்புடையார் தமது வீட்டையும், அதன் சுற்றுப்புறத்தையும், அதன் உள்ளிருக் கும் பொருள்களையும் நேர்த்தியானபாங்கிலேயே வைத்திருப் பர். சபலபுத்தியுடையவர்; எண்ணிப்பார்க்கும் திறமையில் லாதவர், சடலம் போன்று வெறுமனே வாழ்ந்திருப்பவர் தமது வீட்டையும் தாறுமாருன நிலையிலேயே விட்டு வைத் திருப்பர். இனி, இயற்கை அளிக்கும் வசதிகளில் வெளிச் சத்தை நன்கு பயன்படுத்தும் உயிர்கள் உண்டு; வெளிச் சத்தை அறவே வெறுக்கும் உயிர்களும் உண்டு. ஆந்தை, வெளவால், வேங்கைப்புலி முதலியன வெளிச்சத்தை நாடுவ தில்லை. அந்தகாரம் அல்லது இருளை அவை பெரிதும் விரும்புகின்றன. மனிதனுடைய அமைப்பில் வெளிச்சத்தை விரும்புகிற பகுதியும் உண்டு, இருளையே நாடித்திரிகிற பகுதியும் உண்டு. நல்ல செயல்களைச் செய்ய விரும்புகின்ற வர்கள் வெளிச்சத்தை விரும்புவார்கள்; தீய செயல்களைச் செய்ய விரும்புகின்றவர்கள் அந்தகாரத்திலேயே ஆசை கொள்வார்கள்.

வானத்தில் படலம் படலமாகக் கார்மேகம் கூடி நிற் கிறது. சந்திரனும் அப்பொழுது வானத்தில் தென்படுவ தில்லை. அந்த வேளையில் எங்குத் திரும்பிப் பார்த்தாலும் ஒரே கார் இருள். பூமியில் ஓர் அடி முன் வைக்கக்கால் தயங்குகிறது. எதிரில் என்ன இருக்கிறது என்பது புலப் படுவதில்லை. பக்கத்தில் மரம் ஒன்று இருக்கின்றதா, அல் லது வெட்டவெளியாக இருக்கிறதா என்பதும் தென்படுவ தில்லை. அத்தகைய இருளில் புதிய இடத்தில் நிற்கும் மனிதன் ஒருவனுடைய நடமாட்டத்துக்கு அந்தக் கார்

இருள் பெருந்தடையாகிறது. அந்த நெருக்கடியில் திடீரென்று மின்னல் ஒன்று ஒளிர்கிறது. நொடிப்பொழுதுக்குள் அது மறைந்தும் போய்விடுகிறது. அத்தகைய மின்னலில் அனுகூலம் ஒன்று உண்டு, பிரதிகூலம் மற்றொன்று உண்டு. ஒரு நொடிப்பொழுதுக்குள்ளாக தான் எத்தகைய சூழ்நிலையில் இருக்கின்றான் என்பதை மனிதன் அறிந்துகொள்கிறான். அடுத்த நொடிப்பொழுதில் மறைந்துபோன மின்னலின் எதிர்ச்செயல் பழைய அந்தகாரத்தைப் பன்மடங்கு அதிகப்படுத்திவிடுகிறது. கார் இருள் மேலும் இருள் சூழ்ந்தது போன்று ஆய்விடுகிறது. புற உலகில் நமக்கு நிகழ்கின்ற இத்தகைய நிகழ்ச்சிக்கு நிகரான மற்றொரு நிகழ்ச்சி நம் மனத்தகத்து உண்டாகிறது. ஏதோ சிலவேளைகளில் நல்லறிவு படைத்தவர்களாக நாம் இருக்கிறோம். நல்லறிவு படைத்திருக்கும் வேளையில் நலன் இன்னது, கேடு இன்னது என்பது நமக்கு நன்கு விளங்குகின்றன. ஆனால் இந்த நல்ல அறிவையே மறைக்கும் மயக்கம் ஒன்று நம்மிடத்துப் பெரிதும் குடிகொண்டிருக்கிறது. அந்த மயக்கத்தின் இயல்பு இன்னதென்றே நமக்கு விளங்குவதில்லை. புற உலகில் இருக்கின்ற இருளை இருள் என்று நாம் அறிந்துகொள்கிறோம். ஆனால் மனத்தகத்துள்ள இருளை மயக்கம் என்று அறிந்துகொள்ளாதவாறு தன்னையே மறைத்துவைக்கும் தன்மை உடையது அந்த மயக்கம். மயக்கமாகிய அந்தகார நிலையோ தெளிந்தநிலை என தன்னைக்காட்டிக்கொள்கிறது. இருள் சூழ்ந்த இத்தகைய மானுட இயல்பை ஒரு கேள்வியின் மூலம் தாயுமானவர் விளக்குகின்றார். **அந்தகாரத்தை ஓர் அகம் ஆக்கி மின்போல் என் அறிவைச் சுருக்கினவர் ஆர்?** அகம் என்பது வீடு அல்லது குடியிருக்கும் இடம் எனப்பொருள்படுகிறது. அகமுடையான், அகமுடையாள்

என்னும் சொற்கள் அகம் என்னும் சொல்லைத் தொடர்ந்து வருகின்றன. வீட்டுக்குத் தலைவன் என்றும் தலைவி என்றும் அச்சொற்கள் பொருள்படுகின்றன. அகமுடையான் என்னும் சொல்லை ஆமுடையான் என்று கொச்சையாகச் சொல்லுவாரும் உண்டு. அதே பாங்கில் அகமுடையாளை ஆமுடையாள் என்று பகர்வாரும் இருக்கின்றனர். வழக்கில் இருக்கும் அச்சொற்கள் இலக்கியத்துக்கு ஒவ்வா.

மின்னல் நொடிப்பொழுதுக்கே நிலைத்திருக்கிறது. அந்த நொடிப்பொழுதுக்குள் பொருள் ஒன்றை அரைகுறையாக அது விளக்கிவிடுவது உண்டு. அதே பாங்கில் மனிதனுடைய உள்ளத்தில் ஏதோ ஒரு வேளையில் உதயமாகும் நல்லறிவு தெளிந்த நிலையிலேயே இருக்குமாகில் உண்மையை உள்ளபடி அறிந்துகொள்ள அதற்கு இயலும். ஆனல் நொடிப்பொழுதில் தோன்றிய விவேகம் உண்மையை மாறுபடுத்திக் காட்டிவிடவும் வல்லதாகிறது. சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். இருளில் எத்திசையில் கால் வைத்து நடப்பது என்பது தெரியாதிருந்த ஒரு மனிதனுக்கு கணப்பொழுதுக்கு மின்னல் தென்பட்டது. தன்னைச் சுற்றிலும் மரங்கள் நிற்பதைக் கண்டான். ஒரு திசையில் மட்டும் வெட்டவெளி இருப்பதாகத் தோன்றியது. அந்த வெட்ட வெளியில் பாழுங்கிணறு ஒன்று இருந்தது புலப்படவில்லை. அதை அறிந்துகொள்ளுதற்கு முன்பே மின்னல் மாயமாய் மறைந்துபோய்விட்டது. வெட்டவெளி தென்பட்ட திசையை நோக்கி நடப்பது என்று அவன் தீர்மானித்துக்கொண்டான். மற்ற திசைகளில் அவன் மனதைச் செலுத்தவில்லை. அந்த ஒரே திசையை ஆழ்ந்து பற்றிப் பிடித்துக்கொண்டான். நிதானமாக அத்திசையில் நடந்துசெல்லுகின்ருன். உண்மையில் பாழுங்கிணற்றை நோக்கி அவன் போய்க்கொண்டிருக்

கின்றான். நல்ல வழியில் போவதாக அவன் நினைத்துக் கொண்டிருக்கின்றான்; விரைவில் அவன் ஆபத்துக்கு ஆளா கப்போகிறான் என்பது அவனுக்குத் தெரியாது. அதே விதத்தில் மனிதனுக்கு உலகத்தில் ஏதேனும் ஒருபொருளில் அல்லது மக்களுள் ஒரு சிறு கூட்டத்தாரிடத்தில் பெரும் பற்றுதல் வந்துவிடுகிறது. தாம் பற்றிப்பிடித்துள்ள பொருளைத் தவிர வேறு எப்பொருளும் தனக்கு நலனை உண்டு பண்ணாது என்று அவன் தீர்மானித்து விடுகின்றான். தான் பற்றிப்பிடித்துள்ள மக்களைத் தவிர வேறு யாரும் தனது அன்புக்கு இலக்கு ஆகத் தகுதியில்லை என்கின்ற முடிவுக்கு வந்துவிடுகின்றான். மிகைபட்ட பற்றுதலை ஒரு பொருளிடத்தில் வைக்கின்றவன் அப்பொருளினின்றே துன்பத்தையும் பெறுவான். மிகைபட்ட பற்றுதலை ஒரு சிலரிடத்து வைக்கின்ற மனிதன் அம் மக்களிடத்திருந்தே துன்பத்தையும் பெறுவான்.

யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்

என்னும் கோட்பாடு அவனுக்குப் புலப்படுவதில்லை. பற்றுதல் வைக்கவேண்டிய அவசியமில்லாதவிடத்தில் பற்றுதல் வைத்துக்கொண்டு அவன் படாதபாடு படுகின்றான். துன்ப மனைத்துக்கும் தனது பற்றுதலே முதல் காரணம் என்பதை அவன் அறிந்துகொள்வதில்லை. இந்தக் கோட்பாட்டை மற்றொரு கேள்வியில் தாயுமானவர் கேட்கின்றார்: **அவ் அறிவு தானுமே பற்றினது பற்றாய் அழுந்தவும் தலை மீதிலே சொந்தமாய் எழுதப்படித்ததார்?** தலை எழுத்து என்பதைப்பற்றி இங்குச் சிறிது நாம் அறிந்துகொள்ள வேண்டும். ஓலையிலும், காகிதத்திலும் நாம் எழுத்துக்களை எழுதுவது போன்று நம் தலையிலே நாம் படும் இன்பதுன்

பத்துக்கு ஏதுவாகிய எழுத்துக்கள் எழுதி வைக்கப்பட்டிருக்கின்றன என்று பலர் நம்புகின்றனர். அப்படித் தலையில் எழுதிவைக்கப்பட்டிருப்பது ஓலையில் எழுதி வைத்திருப்பது போன்று ஸ்தூல எழுத்துக்கள் அல்ல. மனிதனுடைய இயல்பு என்பதுதான் அவனுடைய தலையெழுத்து. தன் இயல்பை மாற்றிக்கொள்ள எம்மனிதனுக்கும் இயலும். ஆதலால் தன் தலையெழுத்தை மாற்றிக்கொள்ளத் தனக்கு இயலும். வாழ்ந்து வருகிற உடலுக்கு வளர்ச்சி உண்டு, தேய்வு உண்டு, கொழுத்துப்போதல் அல்லது மெலிந்து போதல் என்னும் மாறுபாடும் உண்டு. அதே விதத்தில் மனிதன் தன் இயல்பையும் வெவ்வேறு பாங்கில் மாற்றியமைத்து வருகிறான். அங்ஙனம் மாறி அமையும் இயல்பு அவனுடைய தலையெழுத்து ஆகிறது. அதை மனிதன் தனக்குத்தானே அமைத்துக்கொள்வதால் அது அவனுக்குச் சொந்தமாக எழுதப்பட்டிருக்கிறது. அப்படி எழுதப்பட்டுள்ள இயல்புக்கு ஏற்ப அவனுடைய நடை உடை பாவனை வந்தமைகின்றன. நடை உடை பாவனைக்கு புறத்தோற்றம் உண்டு. இயல்புக்கோ புறத்தோற்றம் இல்லை. வாய்விட்டுப் படிப்பதற்கு ஒப்பானது இயல்பின்புறத்தோற்றம். இக்கருத்துக்கள் யாவும் மேலே நாம் பகர்ந்துள்ள அடியில் அடங்கியிருக்கின்றன.

உயிர்வகைகளுள் அதனதன் இயல்புக்கேற்ற வாழ்க்கை முறை உண்டு. வாழ்க்கை முறையைக்கொண்டே ஓர் உயிரின் பாங்கு விளக்கப்பெறுகிறது. நீரில் நீந்தித் திரிவது மீனின் இயல்பு. நிலத்தில் அலைந்து திரிவது விலங்கின் இயல்பு. விலங்கு மீன்போன்று நீரினுள் சென்று நீந்துவதில்லை. விலங்குபோன்று மீன் நிலத்தில் வந்து திரிவதில்லை. பறவையோ வானத்தில் பறந்து சஞ்சரிக்கிறது. அதனதன்

செயல் அந்தந்த உயிரின் பாங்கை விளக்குகிறது. மனித னுடைய பாங்கு யாது என்னும் கேள்வி அடுத்தபடியாக வருகிறது. உணவின் பொருட்டு அலைந்து திரிவது மனித னுடைய பாங்கா? உணவுக்காக அலைந்து திரிவது நீந்து வன, நடப்பன, பறப்பன, ஆகிய அனைத்துக்கும் பொது வானது. அச்செயல் ஒன்றிலேயே மனிதன் தனது கருத்து முழுதையும் செலுத்திக் கொண்டு வருவானாகில் அவன் மற்ற சிற்றுயிர்களைவிட எவ்விதத்திலும் சிறப்புடையவன் ஆகான். உண்பது, உறங்குவது, உயிர் வாழ்ந்திருப்பது, இனத்தைப் பெருக்குவது, எதிரிகளைத் தாக்குவது, எதிரிகளிடத்திருந்து தப்பித்துக்கொள்ளுவது ஆகிய இச்செயல்கள் உயிர் வாழ் வன அனைத்துக்கும் பொதுவானவை. மற்ற உயிர்கள் போன்று மனிதனும் இச்செயல்களில் மட்டும் ஈடுபட்டிருப் பானாகில் அப்பொழுதும் அவனுக்குத் தனிச் சிறப்பு ஒன்று மில்லை. மனிதன் தன்னை மேலோன் ஆக்கவல்லவன். உடல் அமைப்பு அவனுடைய சொரூபத்தில் முக்கியமான இடம் பெறலாகாது. உடலை வளர்ப்பதற்கென்றே ஏனைய உயிர் கள் வாழ்ந்திருக்கின்றன. ஆனால் உடலை ஒரு கருவியாக வைத்துக்கொண்டு உயர்ந்த நிலைக்குப் போதற்கென்று மனிதன் வாழ்ந்திருக்கின்றான். தனக்குரிய சிறந்த செயலைச் செய்யாது புறக்கணித்துவிட்டால் அவன் உயர்நிலையினின்று கீழ்மையில் வீழ்ந்தவன் ஆகின்றான். சுகம் பல உயிர்களுக் குப் பல படித்தரங்களில் அமைந்துள்ளது. உடலில் பற்று வைத்திருக்கும் உயிர்கள் உடலினிடத்திருந்து இன்பத்தைப் பெறுகின்றன. மனிதன் மற்ற உயிர்கள் போன்று உடலி னின்று இன்பம் பெறலாகாது. அறிவை வளர்ப்பது மனித னுடைய தனிச் செயல். அறிவு வளர்ச்சியினின்று விளையும் சுகம் சாசுவதமானது. அத்தகைய சுகமே பேரானந்தம்

என்றும், பேரின்பமென்றும் பகரப்பெறுகிறது. உடலினின்று பெறும் இன்பம் நிலைத்திருப்பதன்று. சிறிது நேரத்தில் மறைந்து போகும் தன்மை அதனிடத்திருக்கிறது. ஆகவே, அது சிற்றின்பம் எனப்படுகிறது. உடலுக்குத் தேவையாயிருக்கும் உணவைக் கொடுத்துவிட்டுத் தன் எண்ணத்தையெல்லாம் அறிவு வளர்ச்சியின்கண் திருப்புவது மனிதனுடைய கடமை. மெய்யறிவு வளர்ச்சியினின்று வெளியாகும் சுகமே நிலைத்த சுகமாகிறது. அதை இடைவிடாது நாடுதல் நிட்டை அல்லது நிஷ்டை எனப் பெயர்பெறுகிறது. அத்தகைய மெய்ஞ்ஞான நிஷ்டையில் நாட்டமுடைய மனிதனே மானுடப்பிறவியின் சீரியக் குறிக்கோளைக் கடைப்பிடிப்பவன் ஆகின்றான். வெறுமனே உடலை வளர்ப்பவன் வீணே வாழ்ந்தவன் ஆகின்றான். இக்கோட்பாட்டை மெய்ஞ்ஞான சுகநிட்டை சேராமலே சோற்றுத் துருத்தியை சதமெனவும் உண்டுண்டு தூங்கவைத்தவர் ஆர் கொலோ ? என்னும் கேள்வியின் மூலம் ஞாபகப்படுத்துகிறார். கொல்லனுடைய பட்டடையில் துருத்தி இருக்கிறது. காற்றை வாங்கி வாங்கி அது ஊதுகிறது. அதனால் உலையில் தீ சுடர் விட்டு எரிகிறது. மானுடனுடைய உடல் அத்தகைய துருத்திபோன்று காற்றை வாங்கி வாங்கிஊதிக் கொண்டிருக்கிறது. அதன் உள்ளிருக்கும் வைசுவானரன் என்னும் அக்னி எரிந்து கொண்டிருப்பதற்கு அது ஏதுவாகிறது. கொல்லன் பட்டடையில் இருப்பது உயிரற்ற துருத்தி. மானுட உடல் உயிரோடு கூடிய துருத்தி. அது புற உலகிலுள்ள தீயை வளர்க்கிறது. இது உடலின்கண் உள்ள தீயை வளர்க்கிறது. அப்படித் தீயை வளர்த்தால் போதாது, அறிவை வளர்க்க வேண்டும். நிலையற்ற உடலின் துணைகொண்டு நிலைபேறுடைய ஞானத்தை மனிதன்

பெறலாம். அதை மறந்துவிட்டு இந்த உடலம் சதமானது என்று மனிதன் ஏமாற்றமடையலாகாது. அழிந்துபோம் தன்மையுடைய உடலே அழியாதது என்றெண்ணி மனிதன் மயங்கிவிடலாகாது.

கோட்டைக்குள் வசிக்கும் துருப்புக்கள் கோட்டைக்கு வெளியே இருக்கும் மக்களோடு வேண்டுமானல் தொடர்வு வைத்துக்கொள்ளலாம்; வேண்டாமென்ருல் அகழியின் குறுக்கே உள்ள பாலத்தை மடக்கி எடுத்துக் கொண்டு கோட்டைக்குள்ளேயே தகுந்த பாதுகாப்புடன் வாழ்ந்திருக்கலாம். புறஉலகுக்கும் கோட்டைக்கும் இடையில் இணக்கத்தை உண்டுபண்ணுவது பாலம். அதே பாங்கில் உடல் வாழ்க்கை என்னும் கோட்டைக்குள் இருக்கிற மனிதனுக்குப் புற உலகத்தோடு தொடர்வை உண்டுபண்ணுவது மனம். மனம் என்ருல் என்னஎன்பதை அது செய்கின்றசெயலேக் கொண்டுதான் தெரிந்துகொள்ள முடியும். மனது ஆசை சொருபமாய் இருக்கிறது. ஆசை என்னும் வேகத்தால் தூண்டப்பெற்று அது எண்ணவும் உணரவும் செய்கின்றது. மனமொடுங்கிய நிலேயில் ஆசை இல்லே. ஆசை ஒடுங்கிய நிலேயில் மனம் இல்லே. அயர்ந்து தூங்குகின்ற மனிதன் ஆசைப்படுவதில்லே. அவன் தூங்கும்பொழுது அவனுடைய மனதும் ஒடுங்கிவிடுகிறது. மனது ஒடுங்கிவிடுவதால் புற உலகின் உணர்வு அவனுக்கில்லே. நாள்தோறும் மனிதன் தூங்கச்செல்லுகின்ருன். தூங்காதிருக்க அவனல் இயலாது. தூங்காதிருக்க முயன்ருல் தன்னே அறியாது உறக்கம் வந்துவிடுகிறது. அப்பொழுது புறவுலகோடு ஒரு தொடர்வும்உண்டாவதில்லே.புறவுலகம்தூங்குகின்றவனுக்கு மறைந்துபோய் விடுகின்றது. தான் வாழ்ந்திருக்கும் இடத்தைப்பற்றிய எண்ணம் தூங்குகின்றவனுக்கு இல்லே. தான்

உடைத்திருக்கும் செல்வங்களைப் பற்றிய உணர்வு தூங்குகின்றவனுக்கு இல்லை. உடலின்கண் உள்ள பஞ்சேந்திரியங்களைக்கொண்டு தான் அடையும் இன்பத்தைப் பற்றிய உணர்வு தூங்குகின்ற வேளையில் வருவதில்லை. தான் நேசித்து வரும் உற்றார் உறவினரைப்பற்றியஉணர்வு தூங்குகிறவனுக்கு இல்லை. இவையாவும் மறைந்து போவதற்குக் காரணம் அவனுடைய மனத்தின் மறைவேயாம். மனது மறைந்துபோம் இடத்து அகிலப் பிரபஞ்சமும் அம்மனிதனுக்கு மறைந்துபோய் விடுகிறது. இது தூக்கத்தில் நிகழும் நிகழ்ச்சி. விழிப்பிலேயே இந்த அனுபவத்தைப் பெற முடியுமா என்பது அடுத்து வரும் கேள்வி. விழிப்பு நிலையிலேயே அகிலப்பிரபஞ்சத்தையும் ஒடுக்கிவிடும் இயல்பைப் பெற முடியும் என்கின்றனர் சான்றோர். அதற்குற்ற உபாயம் யாது என்பது அடுத்த கேள்வி. மனது ஆசை வடிவெடுத்திருக்கிறது என்பதை ஆராய்ந்தோம். இந்த ஆசையை அகற்றிவிட்டால் நாம் காணும் உலகுக்கு என்ன ஆகிறது? ஆசை ஒடுங்குமளவு உலகின் காட்சி மாறுபடுகிறது. மனத்தகத்துள்ள ஆசைக்கு ஏற்றவாறு அகிலப்பிரபஞ்சத்தின் காட்சி தென்படுகிறது. கீழான ஆசை உடையவனுக்கு அதன் காட்சி ஒருவிதமானது. மேலான ஆசை உடையவனுக்கு அதன் காட்சி மற்றொரு விதமானது. ஆசை மாற மாற உலகக்காட்சி மாறி அமைகிறதென்றால் இது விந்தையுள் பெரு விந்தையாகிறது.ஆசையை வென்றவன் மக்களைக் காண்கின்றான்; மலையையும் நதியையும் நிலத்தையும் காண்கின்றான். ஆனால் அவைகளைப்பொருள்படுத்தும் பாங்குபுதியதாய்விடுகிறது. ஆசையை வென்றவனுக்குத் தந்தை தாய் முதலான சுற்றத்தார் உளர். ஆனால் ஆசை அகன்று போன தன்விளைவாக ஒருசிலர் உற்றார் எனவும் மற்றொரு சிலர் வேற்

ளூர் எனவும் அவனுக்குக் காட்சி கொடுப்பதில்லை. உற்ளூர் வேற்ளூர் ஆகிய அனைவரும் மெய்ப்பொருளின் காட்சியையே அம்மனிதனுக்கு வழங்குகின்றனர். சுகப்பிரம்மம் என்னும் மானுடன் ஒருவர் மண்ணுலகில் பிறந்தார். பிறந்தபொழுதே ஆசையை வெல்லுதல் என்னும் பெருநிலையில் அவர் இருந் தார். ஆசை அற்றவராக அவர் அவனியில் வாழ்ந்திருந்தார். அவர் காட்சியில் தென்பட்டது பிரபஞ்சம் அல்ல. பிரபஞ்சம் என்னும் அதே பொருள் அவருடைய காட்சியில் பரப்பிரம்ம மாய் இருந்தது. நம்போன்றவர்களுக்கு தூங்கும் பொழுது ஆசை வடிவெடுத்துள்ள மனது இல்லை. சுகப்பிரம்மம் போன்றவர்களுக்கு விழித்திருக்கின்ற பொழுது ஆசைவடிவ மாகிய மனது இல்லை. நமக்குத் தூக்கத்தில் எல்லாம் மறைந்துபோனது. சுகப்பிரம்மம் போன்றவர்க்கு விழிப்பு நிலையில் மெய்ப்பொருள் உணர்வு உறுதிபெற்றிருந்தது. ஆனல் பிரபஞ்சக் காட்சி அவருக்கு இல்லை. ஆசை அகன்று போன இடத்தில் பிரபஞ்சம் என்னும் பொய்க்காட்சி போய் விடுகிறது. பரப்பிரம்மம் என்னும் மெய்க்காட்சி எஞ்சி யிருக்கிறது. இக்கோட்பாட்டை தந்தை தாய் முதலான அகிலப் பிரபஞ்சந்தனைத் தந்தது எனது ஆசையோ! என்னும் அடியில் தாயுமானர் விளக்குகிளூர்.

மனிதனுக்குச் சத்துருவாய் இருப்பது அவனது ஆசை. மெய்ப்பொருள் காட்சியை மறைப்பது ஆசை. இத்தகைய ஆசைக்குக் காரணம் யாது என்னும் கேள்வி வருகிறது. ஆசையை உண்டுபண்ணிக் கொண்டவன் தானு அல்லது பிறரா என்னும் கேள்வி வருகிறது. தன்னிடத்துள்ள ஆசைக்கெல்லாம் தானே முதற் காரணம் என்று ஒரு சாதக னுக்குப் படுகிறது. தன்னிடத்துள்ள கீழான ஆசைகளை யெல்லாம் படிப் படியாகத் தனக்கு ஊட்டியது தன்னுடு

பழகி வந்த பிறர் என்கின்ற கருத்து இன்னெருவனுக்குப் படுகின்றது. அத்தகைய மனிதரைச் சந்தியாதிருந்திருந்தால் தனக்குக் கீழான ஆசைகள் தோன்றுதற்கு இடமில்லாது போயிருந்திருக்கும் என்றும், அம்மனிதன் எண்ணுகின்ருன். ஆசைக்குக் காரணம் காலநிலே என்று இன்னெரு சாதக னுக்குத் தென்படுகிறது. ஒவ்வொரு காலத்திலும் மனது ஒவ்வொரு வடிவெடுக்கின்றது. மனிதன் குழந்தையாயிருந்த காலத்தில் அவனுக்கு ஆசையில்லே; கிழவன் ஆனபிறகு அவனுடைய ஆசைஒடுங்கிவிடுகிறது. யௌவனத்திலோ ஆசை மிகப் பொல்லாதது ஆகிறது. ஒருவிதமான ஆடை ஆபரணங்களேப் போட்டுக்கொள்ள வேண்டும் என்கிற ஆசை ஒருகாலத்தில் வருகின்றது. இன்னெரு விதமான ஆடை ஆபரணங்களேப் போட்டுக்கொள்ள வேண்டும் என் னும் ஆசை மற்ருெரு காலத்தில் தோன்றுகிறது. காலகதி யில் அகப்பட்டுக்கொள்கின்ற மனிதன் காலத்துக்கேற்ற பிரகாரம் தனது ஆசையையும் மாற்றிக் கொண்டே போகி ருன். ஆசைக்கு முதல் காரணம் எது என்று ஆராய்ந்து பார்க்க, ஞானிக்கு வித விதமான கருத்துக்கள் தோன்றின. ஒருபாங்கில் பார்க்குமிடத்து எல்லாஆசைகளுக்கும் காரணம் தானே என்பது தென்பட்டது. இன்னெரு பாங்கில் பார்த்த விடத்து பிறர்தான் அந்த ஆசைக்குக் காரணம் என்பது தென்பட்டது. காலப்போக்கே ஆசைக்கு வலிவு கொடுத்தது என்ற உணர்வு வேருெரு வேளேயில் தென்பட்டது. அத் தகைய விசார நிலேயை, தன்னேயே நோவனே, பிறரையே நோவனே, தற்காலமதை நோவனே? என்னும் கூற் றைக் கொண்டு தாயுமானுர் படம் பிடித்துக் காட்டுகிருர்.

மேலும் விசாரித்துப் பார்க்குமிடத்து பந்தத்தின் விளே வாக ஆசை உண்டாகிறது என்று புலப்படுகிறது. உலகில்

ஏதேனும் ஒன்றனிடத்துப் பற்று வைக்குங்கால் அது பந்தம் என்று சொல்லப்படுகிறது. தாய்க்குத் தன் குழந்தையினிடத்துப் பந்தம் வருகிறது. குழந்தையின் பொருட்டுத் தன் உயிரையே கொடுக்க அவள் ஆயத்தமாய் இருக்கின்ருள். படாத பாடுபட்டு அவள் குழந்தையை வளர்த்து வருகிருள். குழந்தை வளர்ந்து சிறுவன் ஆகிறது. பிறகு யுவன் ஆகின்ருன். அவன் முழு மனிதனுக வளர்ந்த பிறகு பொல்லாதவனுகப் போய்விடுகிருன். பெற்று வளர்த்த தாயையே கொடூரமாக நடாத்துகிருன். அவளைப் பல துன்பத்துக்கு அவன் ஆளாக்குகிருன். துன்பப்பட்டுக்கொண்டிருப்பதற்கிடையிலும் தன் மகன் மீது வைத்துள்ள வாஞ்சையை மாற்ற அவளுக்கு முடிவதில்லை. மகனை அறவே மறந்துவிட்டு அவள் கவலையற்றிருக்கலாம். ஆனல் அப்படி மறக்க அவளுக்கு இயலாது. தன்னைத் துன்புறுத்துமளவு மைந்தன் மீதே அவள் மேலும் மனதைச் செலுத்துகிருள். இந்த நிலைக்குத்தான் பந்தம் என்று பெயர். இது எப்படி உண்டாயிற்று என்பதை மேலும் ஆராய்ந்து பார்த்தால் மகன்மீது பந்தம் வைத்தது அந்த மாதுவின் வினை ஆகும். தான் செய்த செயலே தனக்குப் பாசமாக வந்தமைந்தது. பட்டுப் புழு தான் உண்டுபண்ணிய பட்டு நூலினுள்ளேயே அடைப்பட்டுப் போய்விடுவதுண்டு. அதேவிதத்தில் மனிதன் பந்தத்துக்காளாகிருன். தான் செய்கின்ற ஒவ்வொரு செயலும் அவனை பந்தத்தில் தளைக்கிறது. அத்தகைய செயல்செய்யும்படி ஆசை அவனைத் தூண்டுகிறது. ஆசையினுல் தூண்டப்பெற்று நிகழ்கின்ற ஒவ்வொரு கர்மமும் புதிய புதிய தளையை மனிதனுக்கு அமைக்கிறது. தப்பித்துக்கொள்ள முடியாத பாங்கில் பெரிய பந்தத்துக்குள் அகப்பட்டுக் கிடக்கின்றபொழுது அதைப்பற்றிய விசாரம் வருகின்றது. சிறையினுள்

குற்றவாளி ஒருவன் அடைபட்டுக் கிடக்கின்றுன். எவ்வளவு தான் முயன்ருலும் சிறையினின்று வெளியேக அவனுக்கு இயலாது. குற்றவாளி சிறைச்சாலேயில் அடைபட்டுக் கிடப்பதுபோன்று வினையாளி அந்த வினையினின்று விளைந்த பந்தத்தில் கட்டுண்டு கிடக்கின்றுன். கட்டை உடைத்துவிட்டு, தளையைக் கழற்றி எறிந்துவிட்டு விடுதலே பெற்றவனுக வினை என்னும் வலேயினின்று வெளியேக அவனுக்கு இயலுவதில்லே. கட்டுண்டு கிடக்கின்றவனுடைய பரிதாபகரமான நிலே தாயுமானவருக்கு விளங்குகிறது. அந்த நிலேயில் தாமே இருப்பதாகவும் அவர் உணருகிருர். அவ்வுணர்வை **பந்தமானது தந்தவினையையே நோவனே** என்னும் சொல்லில் விளக்குகிருர். பிரபஞ்ச வாழ்க்கையின் உட்கருத்துத்தான் என்ன என்பது அவருக்கு விளங்கவில்லே. துருவி ஆராய்ந்து பார்க்கப் பார்க்க திரைகள் நீங்கப் பெறுவது போன்று தென்படுகிறது ; ஆனல் ஒரு திரையை நீக்கி விட்டால் அதற்குப் பின் மற்ருெரு திரை தென்படுகிறது. அந்த திரையை நீக்கி விட்டால் அதன் பிறகு இன்னெரு திரை தென்படுகிறது. திரைக்கு முடிவே இல்லேபோல் இயற்கை காட்சி கொடுக்கிறது. இதைக் குறித்து வியப்புறுகிற பாங்கில் **பரமார்த்தம் ஏதுமறியேன்** என்று அவர் முறையிடுகின்ருர். பரமார்த்தம் என்னும் சொல் அடிப்படைக் கோட்பாடு எனப் பொருள்படுகிறது.

கடவுள் இன்ன இடத்தில் இருக்கிருர், இன்ன இடத்தில் இல்லே என்று வரையறுத்துச் சொல்லமுடியாது. இடம் யாவும் அவர் சொரூபத்தில் ஒடுங்கிப் போய்விடுகிறது. ஒடுக்கம் என்பது அவருக்கு இல்லே. நிறைபொருளாகவே அவர் யாண்டும் உள்ளார். ஆனந்தம் பெரிய பொருளின் பேரியல்பு. **பார்க்குமிடமெங்கும் ஒரு நீக்கமற நிறை**

கின்ற பரிபூரணானந்தமே என்னும் சொற் சித்திரத்தில் அவருடைய சொரூபத்தை விளக்குகிறார். அந்தப் பரம் பொருளிடத்து அவர் பரிந்து விண்ணப்பிக்கிறார். பிறவி யைப் பெருங்கடல் போன்று விரித்தது ஆசை. சிற்றுயிர் பேருயிராகப்பரிணமிப்பதற்குத் தூண்டுதல் செய்தது ஆசை. பல பிறவிகளில் துன்பங்கள் பல துய்த்ததற்குக் காரணமா யிருந்தது ஆசை. மனிதனைப் பக்குவப்படுத்துதற்கு ஏதுவா யிருந்ததும் ஆசை. அந்த ஆசையை ஒழித்துவிட்டால் மனி தனுடைய ஜீவபோதமே ஒழிந்துபோய்விடுகிறது. பிரபஞ்ச வாழ்வுக்கு மூலகாரணமாயிருக்கிற ஆசையின் இயல்பை உள்ளபடி காட்டியருள வேண்டுமென்பதும், அந்த ஆசை யைப் பிறகு அறவே அகற்றி வைக்கவேண்டும் என்பதும் அவர் செய்கிற விண்ணப்பமாம். அந்த விண்ணப்பம் மேற் கூறிய பாடலில் தொகுக்கப்பெற்றிருக்கிறது.

---

## பரிபூரணனந்தம்-8

வாரா தெலாமொழிய வருவன வெலாமெய்த
மனதுசாட் சியதாகவே
மருவநிலை தந்ததும் வேதாந்த சித்தாந்த
மரபுசம ரசமாகவே
பூராய மாயுணர வூகமது தந்ததும்
பொய்யுடலை நிலையன்றெனப்
போதநெறி தந்ததுஞ் சாசுவத ஆனந்த
போகமே வீடென்னவே
நீராள மாயுருக வுள்ளன்பு தந்ததும்
நின்னதருள் இன்னும் இன்னும்
நின்னையே துணையென்ற என்னையே காக்கவொரு
நினைவுசற் றுண்டாகிலோ
பாராதி யறியாத மோனமே யிடைவிடாப்
பற்றுக நிற்க அருள்வாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந்தமே.

*கிடைப்பதற்கு அரிய சித்திரப் படம் ஒன்று கடை வீதிக்கு விற்பனைக்கு வந்தது. அதைக்குறித்துக் கடைத் தெருவில் வியாபாரம் நிகழ்ந்தது. விற்க முயன்றவன் ஒரு வன்; வாங்க முயன்றவர்கள் பலர். இவர்களுக்கிடையில் பெரிய சொற்போர் — விற்க முயன்றவன் அதற்கு எவ்வளவு அதிகமாகப் பணம் பண்ணலாம் என்னும் நோக்கம் கொண் டிருந்தான்; வாங்கவந்தவர்கள் குறைந்த விலைக்குக் கிடைத் தால் கொண்டுபோகலாம் என்று முடிவு கட்டினர். அவர்கள் கொண்டிருந்த நோக்கம் நிறைவேறுதற்பொருட்டு அத்த*

கைய சொற்சண்டை நிகழ்ந்தது. இதற்கிடையில் வழிப் போக்கன் ஒருவன் அங்கு வந்துசேர்ந்தான். படத்தைப் பார்த்ததும் அவன் பிரமித்து நின்றுவிட்டான். விற்பவனும் வாங்குபவர்களும் கிளப்பிய இரைச்சல் அவனுடைய காதில் விழவில்லை. படத்தை ரசிப்பதிலேயே அவன் கண்ணும் கருத்துமாய் இருந்தான். தனக்குள்ளே அவன் எண்ணு வானாயினன்: 'என்ன அதிசயம்! இப்படத்தில் விதவிதமான ரசங்கள் ஒன்றுசேர்ந்து பொலிகின்றன. மனத்தகத்து நாம் வரவழைத்துக்கொள்ளும் பாவனைக்கு ஏற்ப இப்படத் தின் காட்சி மாறியமைகிறது. துயரப்படுபவனுக்கு அது சோகக்காட்சி காட்டுகிறது. இன்பமுற்றிருப்பவனுக்கு அதில் இன்ப ரசம் திகழ்கிறது. மனப்பான்மைக்கு ஏற்ப அதில் விதவிதமான இயல்புகள் தென்படுகின்றன.' இப்படி யெல்லாம் எண்ணி அவன் படத்தைப் பார்த்துப் பாராட்டிக் கொண்டிருந்தான். இதைக் குறித்து இப்பொழுது கேள்வி ஒன்று எழுகிறது. ஒரு வேளையில் படம், விற்பவனுக்குச் சொந்தமாய் இருந்தது; மற்றொரு வேளையில் வாங்கியவ னுக்கு அது சொந்தமாயிற்று. படத்தை மனப்பூர்வமாக ரசித்தது யார்? விற்றவனா? வாங்கியவனா? சாக்ஷியாக நின்று வேடிக்கை பார்த்த வழிப்போக்கனா? வேடிக்கை பார்த்தவனுக்கு அந்தப் படம் சொந்தமாக வில்லை எனினும் அதை நன்கு ரசித்தவன் அவன் ஒருவனே.

இப்பிரபஞ்சம் என்பது ஒரு பெரிய படம். உலக மக் கள் விற்பவர்கள் போன்றும், விலைக்கு வாங்குபவர்கள் போன்றும், இதில் வியாபாரம் செய்கின்றனர். இதினின்று எவ்வளவு சுகபோகத்தைப் பெறலாம்? எத்தகைய பதவி யைப் பெறலாம்? எவ்வளவு பொருள்களைப் பெறலாம்? இப்படி யெல்லாம் முயன்று இங்கே இன்ப துன்பங்களை

அடைந்து வருகின்றனர். ஆனால் இவ்வுலகம் என்னும் இந்த அரிய படத்தை சாக்ஷியாயிருந்து வேடிக்கை பார்க்கும் சான்றோர்கள் யாரோ சிலரே. இவ்வுலகம் அளிக்கின்ற இன்ப துன்பங்களில் பங்கெடுத்துக் கொள்கின்றவர்கள் இவ்வுலகின் பாங்கை உள்ளபடி அறிவதுமில்லை, இதை ரசிப்பதுமில்லை. வெறும்சாக்ஷியாக நின்று இதை வேடிக்கை பார்க்கின்றவர்கள் மிகச் சிலரே. அப்படி வேடிக்கை பார்க்கத் தெரிந்துகொண்டவர்கள்தான் இவ்வுலகை உள்ள படி காணவும் ரசிக்கவும் முடியும். அத்தகைய மனசாட்சி யைப் பெறுவது ஆத்ம சாதனங்களுள் மிக முக்கியமானது ஒன்று ஆகும். சாதனங்கள் பல புரிந்து சாத்தியம் அடைந்த நிலை என்றே அதைப் பற்றி இயம்பலாம். வாழ்க்கையின் நிகழ்ச்சிகள் அனைத்துக்கும் மனது சாக்ஷியாவதற்கு உபா யம் ஒன்று உண்டு. வாழ்க்கையில் மனது கட்டுப்பட்டுக் கிடக்கின்றபொழுது வேண்டுதல் வேண்டாமை என்னும் இரண்டுவிதப் பாங்குகளில் மனது தத்தளிக்கின்றது. சுகம் தருபவைகள் எல்லாம் தனக்கு வந்து அமையவேண்டும் என்று அது வேண்டுகிறது. துக்கம் தருபவைகளையெல் லாம் அகற்றிவிட வேண்டுமென்று அவைகளிடத்து மனது வெறுப்புக்கொள்கிறது. வேண்டுதல் வேண்டாமை ஆகிய இரண்டு நிலைகளுக்கிடையில் அது ஊசலாடிக்கொண்டிருக் கிறது. படத்தை விற்பவனும், வாங்குபவனும் எண்ணிய எண்ணங்களையெல்லாம் மனது எண்ணி யெண்ணி ஏங்கிக் கொண்டிருக்கிறது. சாக்ஷி என்னும் நடுவு நிலைக்கு மனது வந்து விடுகின்றபொழுது அது வாழ்க்கையை வேறு ஒரு பாங்கில் பொருள் படுத்துகிறது. ஆசையில் அது அழுந்திக் கிடந்தபொழுது தான் விரும்பிய பொருள் வாராதிருந்தகாலை அதைக்குறித்து மனது பெருமுயற்சி எடுத்துக்கொண்டது.

இப்பொழுதோ ஆசை மனத்தைவிட்டு அகன்றுபோய் விட்டது. வாராத இன்பப் பொருள்களைக் குறித்து அதுகவலைப் படுவதில்லை. **வாராத எலாம் ஒழிய** என்னும் சாக்ஷி நிலைக்கு மனது வந்துவிட்டது. பிராரப்த கர்மத்தை முன்னிட்டுப் பிணி முதலிய எதிர்பாராத துன்பங்கள் வந்து அமைகின்றன. அவைகளை எப்படியாவது அகற்றிவிட வேண்டும் என்கின்ற முயற்சி இப்பொழுது மனத்தகத்து எழுவதில்லை. தற்செயலாய், இன்ப துன்ப மயமாக வருவனவெலாம் எய்த என்னும் பான்மையை மனது பெற்றுவிடுகிறது. இத்தகைய நடுவு நிலையை மனது பெற்றவுடனே உலகம் அளிக்கின்ற இன்ப துன்பங்களெல்லாம் மாயமாய் மறைந்துபோய்விட்டன. இந்த மனதுக்குச் சொந்தமாகவும், பொருத்தமாகவும் இருக்கின்ற மேலாம் நிலை ஒன்று உண்டாயிற்று. உலகை உள்ளது உள்ளபடி பொருள்படுத்தித் தனக்குச் சொந்தமாயுள்ள பேரானந்தத்தில் திளைத்திருப்பதுவே அந்த மேலாம் நிலையாயிற்று. அதைப் பாராட்டிக் கடவுளிடத்து மனது சாட்சியதாகவே மருவ நிலை தந்ததும் நீயே என்று போற்றுகிறார்.

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு

என்பது மறைமொழி. இந்த அறிவுக்கு விவேகம் என்பதும், ஊகம் என்பதும், யூகம் என்பதும் வெவ்வேறு பெயர்களாம். இந்த நல்லறிவு வாய்க்கப் பெருத மக்கள் நாய்போன்று ஆய்விடுகின்றனர். ஒரு நாய் மற்றொரு நாயைக்கண்டதும் பல்லைக்காட்டி உறுமுகிறது, சீறுகிறது, கடிக்கப்போகிறது. பிறகு பெரும் சண்டை வந்துவிடுகிறது. மதவாதிகளுக்கிடையில் உண்டாகிற சண்டை அத்தகையது, மதத்தை முன்னிட்டுத் தங்களுடைய மானுட இயல்பையே அவர்கள்

மறந்துவிடுகின்றனர். நாய்போன்று குலேக்கத் தொடங்கி விடுகின்றனர். ஆனால் மெய்ப்பொருள் நாட்டம் உடையவர் கள் மனதை எப்பொழுதும் நடுநிலேயில் வைத்திருக்க வேண் டும். எம்மதத்திடத்தும் ஓரம்சாராது நடுவுநிலேயிலிருந்து மதங்களே யெல்லாம் ஆராய்ந்து பார்த்தால் அவை யாவும் மெய்ப்பொருளிடத்து மனிதனே அழைத்துச் செல்லும் மார்க் கங்கள் என்பது புலனுகும். வித விதமான உணவு வகை களேக் கடவுள் அமைத்து வைத்திருக்கிருர். அவைகளு ளெல்லாம் உணவுச் சத்துக்கள் இருக்கின்றன. யாருக்கு எந்த உணவு ஒத்துக்கொள்கிறதோ அவ்வுணவை உண்டு உடலே உறுதிப்படுத்தி நல்வாழ்வு வாழ்ந்திருப்பதே வாழ் வின் நோக்கமாகும். உணவு உண்ணுது அதைக் குறித்துச் சண்டை போட்டுக் கொண்டிருந்தால் ஒரு நலனும் உண்டா காது. சமயவாதிகளுக் கிடையில் சண்டைபோடும் இயல்பு காலமெல்லாம் உண்டு. ஆனல் தீவிரமாக ஆத்ம சாதனத் தில் செல்லுகின்றவர்களுக்கு அப்படிச் சண்டைபோட்டுக் கொள்ள நேரமில்லே. வேதாந்த சாஸ்திரங்கள் புகட்டு கின்ற கோட்பாடுகளே நடுவு நிலேயிலிருந்து ஆத்ம சாதகர் கள் ஆராய்ந்து பார்க்க வேண்டும். சைவ சித்தாந்தம், வைஷ்ணவ சித்தாந்தம் ஆகிய சாஸ்திரங்களேயும் நடுவு நிலே யிலிருந்து ஆராய்ந்து பார்க்கவேண்டும். அப்படி ஆராய்ந்து பார்க்கின்றவர்களுக்கு ஓர் உண்மை விளங்கும். ஓர் ஊரி லிருந்து மற்றெரு ஊருக்குப் போவதற்கு இத்தனேவிதப் பாதைகள் இருக்கின்றன என்று ஒருவர் தொகுத்துச் சொன்னுர். வேதாந்த சாஸ்திரம் அந்தத் தொகுப்பு ஆகிறது. அத்தனேவிதப் பாதைகளில் நான் இந்தப் பாதையில் செல் கிறேன், அந்தப் பாதையில் செல்கிறேன் என்று ஒவ்வொரு சாதகனும் தனக்கேற்ற பாதையை எடுத்துக்கொண்டான்.

அப்பாதைகளுக்கு சைவம், வைஷ்ணவம், சாக்தம் போன்ற பல பெயர்கள் வந்தன. ஒவ்வொன்றும் ஒவ்வொரு சித்தாந்தம். அந்தந்த சமயத்துக்குரிய ஐதிகம் அதன் மரபுஎன்னும் பெயர் பெறுகிறது. இவையாவும் ஒரே உயர் நிலேக்கு வந்து சேருகின்றன என்னும் உண்மையை அறியும்பொழுது சமரசம் தானுக உண்டாகிறது. இத்தகைய சமரசம் மேற்பூசலாக வருவதல்ல; உபசாரத்துக்காகவென்று அமைவதல்ல. எல்லா நதிகளும் கடலே வந்து சேருவதுபோன்று சமயங்கள் யாவும் கடவுளேயே வந்து சேருகின்றன என்று மனப்பூர்வமாக அல்லது சுவானுபூதிமயமாக அறிகின்ற இடத்து அது பூராயமாய உணர்வு என்னும் பெயர் பெறுகிறது. இக்கோட்பாடுகளேயெல்லாம் தொகுத்து வேதாந்த சித்தாந்த மரபு சமரசமாகவே பூராயமாயுணர வூகமது தந்ததும் என்று இறைவன் கொடுத்த நல்லறிவுக்குத் தாயுமானவர் நன்றி செலுத்துகிருர்.

தர்மராஜா யுதிஷ்டிரர் வனவாசம் செய்துகொண்டிருந்த பொழுது நிகழ்ச்சி ஒன்று நேர்ந்தது. அவருக்கும் ஒரு யக்ஷனுக்கும் இடையிலே அரியதொருசம்பாஷணேநடைபெற்றது. யக்ஷன் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் தர்மராஜன் சரியான விடைகொடுத்தால் மாண்டுபோன அவன் உடன்பிறந்தவர்கள் திரும்பவும் உயிர்பெறுவார்கள் என்று அந்த யக்ஷன் பகர்ந்தான். தமது அறிவுக்கு ஏற்ற அளவு விடை தருவதாக யுதிஷ்டிரர் ஒத்துக்கொண்டார். யக்ஷன் கேட்ட கேள்விகளில் ஒன்று: ‘ உலக நடைமுறையிலுள்ள அதிசயங்களுள் பெரிய அதிசயம் எது?’ இக்கேள்விக்கு யுதிஷ்டிரர் விடைவிடுத்தார்: ‘நாள்தோறும் மக்கள் மாய்ந்துகொண்டே இருக்கின்றனர். மாண்டுபோனவர்களே உற்ருர் உறவினர் மறுமைக்கு அனுப்பிக்கொண்டே இருக்கின்றனர். இந்த

நிகழ்ச்சிக்கு ஒப்வே இல்லை. கண்ணெதிரே இது யாண்டும் நிகழ்ந்துகொண்டு இருக்கிறது. எனினும் ஒவ்வொரு மனிதனும் தான் மட்டும் இவ்விதிக்கு விலக்கானவன் என்றும், தான் சாசுவதமாக இம்மண்ணுலகில் வாழ்ந்திருப்பவன் என்றும் எண்ணிக்கொள்கின்றான். இதுவே உலக அதிசயங்களுள் பெரிய அதிசயம்.' அவர் விடுத்த விடை முற்றிலும் சரி என்று யக்ஷன் ஒத்துக்கொண்டான். சுடர்விளக்கு ஒன்றைக் கைப்பற்றக் கைக்குழந்தை ஒன்று முயலுகிறது. எரிகின்ற விளக்கைக் குழந்தை தொடாத வண்ணம் தாய் பாதுகாக்கிறாள். எனினும் அவள் அஜாக்கிரதையாய் இருந்த வேளை ஒன்றில் குழந்தை சுடரொளியைத் தொட்டு விட்டது. அதன் கையில் சூடுபட்டதும் விரைந்து அது கையை மடக்கிக்கொண்டது. ஆயுட்காலத்துக்கெல்லாம் அது பாடமாயிற்று. தீயைத் திரும்பவும் தொட அக்குழந்தை தனது வாழ்க்கையில் எப்பருவத்திலும் முயலவில்லை. இயற்கையின் நடைமுறையைப்பற்றிய உண்மையை அறிந்துகொண்டதின் விளைவு அது. இயற்கையின் நடைமுறைகளுள் உடல் அழிந்து பட்டுப்போவது தடுக்க முடியாத செயல். உயிர்கள் அனைத்தும் உலகில் ஒன்றன்பின் ஒன்றாக உரு எடுத்தது போன்று உரு அழிந்துகொண்டே இருக்கின்றன. கண்கூடாக இந்நிகழ்ச்சியைப் பார்த்துக் கொண்டிருப்பதற்கிடையில் மனிதன் மட்டும் இதை உள்ளபடி அறிந்தவன் அல்லன். உடல் அழிந்துபட்டுப்போம் என்பதை உள்ளபடி ஒருவன் உணருவானாகில் அதற்கேற்ற திருத்தம் அவனுடைய வாழ்க்கையில் ஏற்படும். அரிதிலும் அரிதாக யாரோ சிலர்க்குத்தான் அத்தகைய பேருணர்வு வருகின்றது. பெரும்பாலோர் தமது சடலத்தைச் சதமென்றே எண்ணிக்கொண்டிருக்கின்றனர். அந்த எண்ணத்

துக்கேற்ற வாழ்வே அவர்களிடத்து நிகழ்ந்துகொண்டும் இருக்கிறது. உடலைப் பொய்யானது என்று அறிந்து கொள்பவனுக்கும், அறிந்து கொள்ளாதவனுக்கும் இடையி லுள்ள வித்தியாசம் அவரவர் வாழ்க்கையின் மூலம் விளங்கு கிறது. உடல் அழிவது திண்ணம் என்னும் பாடம் மனிதன் கற்றுக்கொள்ள வேண்டிய பாடங்களில் எல்லாம் மிக எளிது எனினும் இதைக் கற்றுக்கொள்ளுதற்குத்தான் அவன் நெடுங்காலம் எடுத்துக் கொள்கின்றான். எண்ணிறந்த பிறப்பு இறப்புகளுக்குப் பிறகே இவ்வெண்ணம் அவ னுடைய உள்ளத்தில் உறுதிபெறுகிறது. இவ்வெண்ணம் உறுதி பெறும்பொழுது அவனுக்கு வாழ்க்கையில் புதிய அத்தியாயம் வடிவெடுக்கிறது. இறைவன் அருளால் தமக்கு அத்தகைய எண்ணம் வந்துவிட்டது என்று தாயு மானவர் நன்றி செலுத்துகின்றார். பொய்யுடலை நிலையன் றெனப் போதநெறி தந்ததும் என்னும் அவர் வாக்கு அவர் கற்றுள்ள பெரிய பாடத்துக்குச் சான்று ஆகிறது. இந்தப் பாடத்தை அவர் போதநெறி என்று அழைக்கிறார். நெறி என்பது வாழ்க்கைமுறை, போதநெறிஎன்பது பேரறி வோடு கூடிய வாழ்க்கை முறையாம்.

போகம் என்பது பஞ்சேந்திரியங்கள் மூலமாய் நுகரும் இன்பம். பஞ்சேந்திரியங்கள் மூலமாக இன்பம் அகப்படா விட்டால் உயிர்கள் இந்த ஐந்து இந்திரியங்களையும் உப யோகப்படுத்த மாட்டா. அவைகளைப் பயன்படுத்தாவிட் டால் வாழ்க்கையே தடைப்பட்டுவிடும். எல்லா உயிர் களும் பொறிவாயில் ஐந்தின் வழியே ஆனந்தத்தை நாடி வெளியுலகில் மனதைச் செலுத்திக் கொண்டிருக்கின்றன. அவ்வுயிர்கள் எடுத்துக்கொள்கின்ற முயற்சிக்கு ஏற்ப, பொறிகள் வாயிலாகப் புற உலகம் ஆனந்தம் தருவதாகப்

புலப்படுகிறது. ஆனந்தம் என்னும் பெருநிலை அக உலகுக்கும் புற உலகுக்கும் இணக்கத்தை உண்டு பண்ணுகிறது. ஆயினும் இவ் இணக்கத்தைப் பற்றிய பேருண்மை ஒன்று உளது. உலகம் தருகிற ஆனந்தம் நிலையற்றது. மேகங்களுக்கிடையே மின்னல் தோன்றுவது போன்று, உலகப் பொருள்களுக்கிடையிலே மனிதனுக்குச் சிறிது ஆனந்தம் கிட்டுகிறது. அதை அவன் அனுபவிப்பதாக எண்ணி முடிப்பதற்குள் அந்த ஆனந்தம் மறைந்து போய்விடுகிறது. ஆயினும் உலகினின்று ஆனந்தத்தைப் பெறுதலில் மனிதன் கொண்டுள்ள முயற்சிக்கு முடிவில்லை. மனிதன் மட்டுமல்ல, எல்லா உயிர்களும் ஆனந்தத்தை நாடி அலைந்து திரிகின்றன. ஆனந்தம் அகப்பட்டுக்கொண்டே இருக்கிறது. அகப்படுதற்கிடையில் அது கைநழுவிப் போய்க்கொண்டே இருக்கிறது. நிரந்தரமாக அது கைக்கு அகப்பட்டுவிடும் என்று நம்பி உயிர்களெல்லாம் ஓயாது அதன்பொருட்டு அலைந்துகொண்டே இருக்கின்றன. ஆனால் சாசுவதமான ஆனந்தம் இவ்வுலகில் இல்லை என்கின்றபாடத்தை உயிர்கள் எளிதில் கற்றுக்கொள்வதில்லை. ஒட்டகம் ஒன்று நல்லுணவுகளுக்கிடையிலே முள் செடியை வைத்தால் நல்லுணவுகளைஒதுக்கி வைத்துவிட்டு முள் செடியையே தின்னும். முள் தன் உதட்டில் தைத்துக்கொண்டு ரத்தம் சொட்டுவதாயிருந்தாலும் அந்தச் செடியைத் தின்னும் செயலை அது நிறுத்திவிடாது. உலக மக்கள் ஒட்டகம் போன்றவர்கள். இவ்வுலகம் இன்பத்தைத் தருவதாக ஆசை ஊட்டுகிறது. அவ்வின்பத்தை ஒருகையால் கொடுத்து மற்றொரு கையால் மாந்தரை அது மொத்துகிறது. இவ்வுலகம் தரும் இன்பம் தினையளவு என்றால் அதே இவ்வுலகம் தரும் துன்பம் பனையளவு பெரியது. தினையளவு இன்பத்துக்குப் பனையளவு துயரத்தைத்

துய்க்க அவர்கள் ஆயத்தமாய் இருக்கின்றனர். ஆனல் சாசுவதமான ஆனந்தம் இவ்வுலகில் இல்லை. தங்கள் சித்த மிசை குடிகொண்டிருக்கும் தெய்வத்திடமிருந்துவரும் ஆனந்தமே சாசுவதமானது என்று அறிந்துகொண்டால் மனிதன் குறிக்கு அருகில் வருபவன் ஆகின்றான். ஆனந்தத் தைத் தேடிப் பல பிறவிகளில் அலைந்தான பிறகு அது தன் மனத்தகத்து வீற்றிருக்கும் தெய்வத்தின் இயல்பு என்பதைத் தெரிந்துகொள்கின்றான். கஸ்தூரிமான் செய்த குற்றத்தை மனிதனும் செய்தவன் ஆகின்றான். தன் உடலில் இருக்கும் கஸ்தூரி நறுமணம் வீசிற்று. அது எங்கிருந்தோ வரும் நறுமணம் என்று வெளியில் கஸ்தூரிமான் காடெங்கும் அலைந்து திரிந்தது. அதே பாங்கில் ஆனந்தத்தை நாடும் மனிதன் அது வெளியுலகில் இருக்கிறதென்று அலைந்து திரி கிறான். வெளி உலகில் இருப்பது ஆனந்தம்போன்றுதென் படும் துக்கமேயாம். ஆதலால் அது சாசுவதமானதன்று. அது வீடுபேறு ஆகாது. மனத்தகத்திலிருப்பதோ நிலை யானது. அதை அறிந்துகொள்கின்றவன் வீடு என்னும் நிலைக்கு வந்தவன் ஆகின்றான். அத்தகைய பெரும்பேறு தாயுமானவருக்குக் கிட்டும் தருவாயில் இருந்தது. குழந்தை ஒன்றுக்கு நல்ல தின்பண்டம் ஒன்றைக் காட்டி அதன் கைக்கு அகப்படாது சற்று உயரத் தூக்கிப் பிடித்துக் கொண்டால் அதைப் பெறுதற்கு அக்குழந்தை படாதபாடு படும். ஆனந்தத்துக்கு இருப்பிடமாகிய வீடுபேறு இன்ன தென்று ஆத்மசாதகன் ஒருவனுக்குக் கடவுள் கிருபைகூர்ந்து காட்டியருளுகின்றார். ஆனல் அதை உடனே அந்தச் சாதக னுக்கு அவர் உரியது ஆக்குவதில்லை. அப்பொழுது அதைப் பெறுவதற்குக் கண்ணீரும் கம்பலையுமாக உருகுகின்றான். அருள் தாகமெடுத்து அவன் உருகுகின்றகாலை அவனுடைய

ஆத்ம பரிபாகம் மேலும் பண்படுகிறது. ஆனந்த நிலையின் காட்சி ஓயாது அவன் கண்ணெதிரே இருக்கிறது. ஆதலால் அதன்மீது அன்புகொண்டு மேலும் மேலும் அதை அடைதற் பொருட்டே அவன் முயலுகின்றான். தாயுமானவருக்கு அத் தகைய தகைமை வந்துவிட்டது. சாசுவத ஆனந்த **போகமே வீடென்னவே நீராளமாயுருக உள்ளன்பு தந்த தும் நின் அருள்** என்ற அவருடைய வாக்கு மூலம் அவர் அடைந்த பரிபாகத்துக்கு அத்தாட்சியாகிறது. உலகப் பொருள்களை நாடிக் கண்ணீர் சிந்துவது மனிதனுக்கு மிக எளிது. அருள் நாட்டத்தில் கண்ணீர் சிந்துவது அரிதிலும் அரிது. அருள் நாட்டத்தில் உள்ளம் உருகுவதுகிடையாது. அது உருக ஆரம்பித்துவிட்டால் கண்ணீர் மல்குவது எளிதா கிறது என்பதும் இக்கூற்றினின்று வெளியாகிறது. மற் ருேர் உண்மையும் இதினின்று வெளியாகிறது. பூமியெங்கும் நிறைந்துள்ள நீர் உறைபனியாக ஏதோ சில இடத்தில்தான் இருக்கிறது. இளகிய நீராக இருப்பது அதன் பொது இயல்பு ஆகிறது. நீராளமாயுருக வேண்டுமென்று சொல்லு கிறவிடத்துக் கடவுள் நாட்டம் கொண்டிருப்பதுதான் உயிர் களுக்குப் பொருத்தமான நிலை என்பது விளக்கப்படுகிறது.

மேலே சொல்லியுள்ள பெருநிலைகள் அனைத்தும் கடவு ளின் அருளால் தமக்கு வந்தது என்று தாயுமானவர் இயம்பு கிருர். அருள் என்ருல் என்ன என்பதை நாம் அறிவது அவசியமாகிறது. அருள் என்னும் இனிய காற்று நமக்கு அனுகூலமாக ஓயாது அடித்துக்கொண்டிருக்கிறது என் கிருர் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர். நமது வாழ்வு என்னும் படகு பிறவிக் கடலில் போய்க்கொண்டிருக்கிறது. படகுக் குரிய பாயை விரித்து வைத்தால் அருள் காற்றைப் பயன் படுத்திப் படகு விரைவில் குறியைப்போய்ச் சேர்ந்துவிடும்.

கடவுளின் அருள் ஓயாது நமக்கு அனுகூலமாக வந்துகொண் டிருக்கிறது. பாயை விரித்துப் பிடித்தல் என்னும் கோட் பாடு இறைவனுடைய அருளுக்கு ஒத்ததாயிருக்கும் ஜீவப் பிரயத்தனம் என்று பொருள்படுகிறது. கடவுளின் துணை யும், ஜீவனுடைய முயற்சியும் ஒன்று சேர்ந்துவிட்டால் எல்லா நலனும் அப்பொழுது வந்து அமைந்துவிடுகிறது. தமக்கு நலன்கள் பல அமைந்திருக்கின்றன என்று தெளிவு படத் தாயுமானவர் பகர்ந்துகொண்டே வருகிறார். இந்த அருளைப்பெறும் தாம் அதை எப்படிப் பயன்படுத்த வேண்டு மென்பதையும் பகர்கின்றார். அதை ஆராய்வோம்.

மனிதன் எடுத்துக்கொள்கின்ற முயற்சிகளுக்கெல்லாம் மனது அல்லது அந்தக்கரணம் கருவியாகிறது. இந்த மனதை உலக விஷயங்களில் திருப்ப மனிதனுக்கு இயலும். இதே மனதைக் கடவுளிடத்துத் திருப்பவும் மனிதனுக்கு இயலுகிறது. கடவுளிடத்து மனதைத் திருப்பினால் அதற்கு நலன் அனைத்தும் உண்டாகிறது. உலகப் பொருள்களி டத்து அதைத் திருப்பினால் தொடர்ந்து கேடுகள் பல வரு கின்றன. கடவுள் ஒருவர்தான் தனக்குத் துணை என்று கடவுளைச் சார்ந்திருக்கும் மனிதன் கடவுள் தன்மையை எளிதில் பெற்றுவிடுகிறான். தம்மைப் பொறுத்தவரையில் அத்தகைய தீர்மானத்தைத் தாம் செய்தாய் விட்டதென்றும் அந்தத் தீர்மானத்துக்கு ஏற்ப தாம் வாழ்ந்து வருவதாகவும் அவர் இயம்புகின்றார். **இன்னும் இன்னும் நின்னையே துணை என்ற என்னை** என்று சொல்லுதலின் மூலம் தமது முயற்சி எத்தகையது என்பதை அவர் தெய்வத்திடம் விண் ணப்பிக்கின்றார்.

கடவுளிடத்து மனிதனுக்கு விசுவாசம் இருக்கவேண் டும் என்பது கோட்பாடு. சாதகனுக்கு முற்றிலும் அனுக்

கிரகம் செய்கின்ற பாங்குடையவராகக் கடவுள் இருக்கலாம். சாதகனைப் பராமுகமாக விட்டுவிடுகிற பாங்கிலும் அவர் இருக்கலாம். அவர் எங்ஙனம் திருவுளம் கொள்கிருரோ அதை அறவே சார்ந்திருப்பது சாதகன் ஒருவனுடைய இயல்பு. என்னென்ன பாங்கில் தமக்கு நலன்களையெல்லாம் கடவுள் செய்து வைத்துள்ளார் என்பதை அவர் எண்ணிப்பார்க்கின்ருர். அதைக் குறித்து மகிழ்ச்சியும் அடைகின்ருர். தாம் அடைய வேண்டிய பேறுகளில் பெரும் பகுதியைப் பெற்ருய்விட்டது என்பதையும் உணருகிருர். இத்தனைவிதமான நலன்களை நல்கிய தெய்வம் மேலும் ஏதேனும் உதவிபுரியவும் திருவுளம் கொண்டிருக்கலாம். என்னைக்காக்க ஒரு நினைவு சற்று உண்டாகிலோ என்னும் கோட்பாட்டில் கடவுளின் துணையை அவர் உணர்த்திவிடுகிருர். காத்து வருகின்ற தெய்வம் சாதகனுக்குரிய நலத்தை யெல்லாம் அமைத்துவிடுவது இயல்பு. அந்த நலன் என்ன வடிவெடுத்து வருமோ என்பதைச் சாதகன் அறிந்துகொள்ள முடியாது. அது என்ன வடிவெடுத்து வந்தாலும் சாதகனுக்கு நன்மை விளைவிப்பதாகவே இருக்கும். கடவுளை முற்றும் சார்ந்திருக்கின்ற சாதகன் எனக்கு இன்னதைத்தா என்பதைக் குறித்துச் சொல்ல வேண்டிய அவசியமில்லை. ‘நன்றே செய்வாய், பிழை செய்வாய் நானே இதற்கு நாயகமே’ என்னும் கோட்பாட்டுக்கு இணங்க பொறுப்பு அனைத்தையும் பரமனிடத்துப் போட்டுவிட்டு பக்தன் அவரைத் துணையாகக் கொண்டிருக்கின்ருன். அந்த இயல்பு இங்கு வெளியாகிறது. அதற்கிடையில் தாமே ஏதாவது தெய்வத்திடம் விண்ணப்பிக்க வேண்டியது அவசியமாயின் அதையும் தாயுமானவர் விண்ணப்பித்துவிடுகின்ருர். இறைவா, உன்னிடத்து நான் கொண்டுள்ள

பற்றுதல் இடைவிடாப் பற்ருக நிற்க அருள்வாய் என்று விண்ணப்பிக்கின்ருர். குறிப்பிட்ட சில வேளைகளில் கடவுளிடத்தில் பற்றுவைப்பதும், வேறு சில வேளைகளில் உலகைச் சார்ந்திருப்பதும் சாமான்யமான பக்தர்களுடைய போக்கு. அவர்கள் ஒரு விதத்தில் வீட்டில் தென்படும் ஈக்கள் போன்றவர்கள். வீட்டில் உள்ள ஈ சிலவேளைகளில் சுத்தமான பண்டங்களின் மீது உட்காருகிறது. வேறு சில வேளைகளில் அசுசியான மலம் முதலியவைகள்மீது உட்காருகிறது. தெய்வத்திடம் இடையீடு படிந்த பற்று வைக்கின்றவர்களுடைய போக்கு அத்தகையது. அத்தகைய பற்று தமக்கு வேண்டாம்என்று அவர் புறக்கணிக்கின்ருர். ஆனல் சான்ருேர்களோ வீட்டு ஈ போன்றவர்கள் அல்லர். தேன் ஈக்கு அவர்கள் ஒப்பாகின்றனர். தேன் ஈ அசுசியான இடத்தில் உட்காராது. மலர்மிசை ஏகுதல், அல்லது தனது இருப்பிடமாகிய அடையில் இருப்பது—இதைத்தான் தேனீ அறிந்துள்ளது. சான்ருேர்கள் அங்ஙனம் சர்வகாலமும் தெய்வ சான்னித்தியத்தையே சார்ந்திருக்கின்றனர். அத்தகைய பெருநிலையை இறுதியாகத் தமக்குத் தந்தருள வேண்டுமென்ற விண்ணப்பம் வெளியாகிறது. ஆத்மசாதகர்கள் அனைவரும் செய்கின்ற விண்ணப்பம் இதுவே. அப்படி விண்ணப்பிக்கின்ற பொழுது தெய்வத்துக்குப் பொருத்தமான அடைமொழிகள் சிலவற்றையும் அவர் பகர்ந்துவிடுகிருர். பாராதி அறியாத மோனமே என்பதே கடவுளுக்கு அவர் சாத்தியுள்ள அடைமொழிகளாம். மௌனம் என்னும் சொல் மோனம் எனத் திரிவுபடுகிறது. ஓசை ஒலிகளெல்லாம் கடந்த நிலை மோனம். அது எங்கே இருக்கிறது என்னும் கேள்வி பிறக்கலாம். அகிலப் பிரபஞ்சம் இருக்குமிடத்தில் மௌனமில்லை. மௌனமிருக்குமிடத்து அகிலப்

பிரபஞ்சம் இல்லை. பிரபஞ்சத்துக்கு இயற்கை என்பது மற்றொரு பெயர். அது ஓயாது இயங்குவதால் அதற்கு இயற்கை என்ற பெயர் வந்தது. எது இயங்குகிறதோ அது ஓலமிடுகிறது. இயற்கை முழுதிலும் இவ்வுண்மையைக் காணலாம். அசைவும், ஓசையும் இணைபிரியாதவைகள். அசைந்துகொண்டிருக்கின்ற இயற்கை முழுதும் ஓசைமயமாய் இருக்கிறது. நாத வடிவெடுத்து இருக்கிறது என்று அதைப்பற்றி நவிலுவது உண்டு. இந்தப் பிரபஞ்சத்துக்கு அப்பாற்பட்டது மௌனமாயுள்ள பரம்பொருள் என்னும் கோட்பாட்டைத் தெளிவுபட பாராதியறியாத மோனமே என்னும் இந்த அடைமொழிகளைக் கொண்டு தாயுமானவர் விளக்கிவிடுகின்ருர். இவைகளையெல்லாம் ஒன்ருகத் தொகுத்து அவர் மேற்கூறிய பாடலில் அமைத்து வைத்திருக்கிருர்.



# பரிபூரணனந்தம் - 9

ஆழாழி கரையின்றி நிற்கவிலை யோகொடிய
ஆலம்அமு தாகவிலையோ
அக்கடலின் மீதுவட அனல் நிற்க வில்லையோ
அந்தரத் தகிலகோடி
தாழாமல் நிலைநிற்க வில்லையோ மேருவுந்
தனுவாக வளையவிலையோ
சத்தமே கங்களும் வச்ரதர ணையில்
சஞ்சரித் திட வில்லையோ
வாழாது வாழவே இராமனடி யாற்சிலையும்
மடமங்கை யாகவிலையோ
மணிமந்த்ர மாதியால் வேண்டுசித் திகள்உலக
மார்க்கத்தில் வைக்கவிலையோ
பாழான என்மனங் குவியஒரு தந்திரம்
பண்ணுவ துனக்கருமையோ
பார்க்குமிட மெங்கும்மொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந்தமே.

*இந்தப் பூமியின் மேற்பரப்பில் நிலத்தைவிட நீர் அதிகமாக இருக்கிறது. முக்கால் பங்கு நீரும் கால் பங்கு நிலமும் இந்தப் பரந்த உலகின் மேற்பரப்பில் அமைந்திருக்கின்றன. ஊர்வன, நடப்பனவாகிய உயிர் வகைகளுக்கு அமைந்த இடம் மிகக் குறைவு. நீந்துபவைகளுக்கு அமைந்துள்ள இடம் மிக மிக அதிகம். அதனிடத்து எல்லை காணாத மேற் பரப்பு இருப்பது போன்று மிக மிக ஆழமானபகுதியும் அதில் உண்டு. இமயமலை போன்ற பெரிய பெரிய மலைகளை சமுத்திரம் தன்னுள் மறைத்து வைத்திருக்கிறது. மூன்று*

மைலுக்குமேல் ஐந்து மைல் பரியந்தம் அதனுள் ஆழத்தை மக்கள் பல இடங்களில் கண்டிருக்கின்றனர். அதற்கு அதிகப்படியான ஆழமும் வெவ்வேறு இடங்களில் இருக்கக் கூடுமென்று யூகிக்க கடல் இடந்தருகிறது. கரைகாணுத இந்த நீர்ப்பரப்பு சில இடங்களில் மலைபோன்ற உறைபனி யாக இறுகிக் கிடக்கிறது. தன்னகத்தே பலநதிகளாக அது ஓடிக்கொண்டும் இருக்கிறது. இந்த விரிந்த நீர்ப் பரப்பு பேரலையாக வடிவெடுத்து நிலத்தின்மீது வந்து நெடுந்தூரத்துக்கு அதைப் பாழ்படுத்திவிட முடியும். அத் தகைய பெருங் கொந்தளிப்பு அதன்கண் அமைவதில் சிரமம் ஒன்றுமில்லை. ஆயினும் தன்னுடைய பெரிய வடிவத்துக் கேற்ற பெரிய அலையாக உரு எடுக்காது சிற்றலைகளையே அது கரையின் மீது விடுத்து விளையாடிக்கொண்டிருக்கிறது. தந்தையானவன் கோபாவேசம் கொள்ளாது தன் குழந்தை யோடு விளையாடுவது போன்று அகன்றகடல் குறுகிய நிலத் தோடு விளையாடிக்கொண்டிருக்கிறது. இக்கோட்பாட்டை விளக்குதற்கே தாயுமானவர் ஆழாழி கரையின்றி நிற்க விலையோ என்னும் கேள்வியைக் கேட்கிருர்.

வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் என்பது பழமொழி. வல்லவர்களில் எல்லாம் மிக வல்லவன் செம்பொருளாகிய சிவபெருமான். மற்றவர்களெல்லாம் செய்ய முடியாத பெரும் செயல் ஒன்றை அவர் சர்வகாலமும் செய்துகொண் டிருக்கிருர். இடையருது அவரிடத்து நிகழ்கின்ற அச் செயல் முன்பு ஏதோ ஒருகாலத்தில் நிகழ்ந்தது போன்று புராணம் விளக்குகிறது. பால் கடலைக்கடைந்த வரலாறே அப்புராணக் கதையாகும். அதில் நிகழ்ந்தது யாது என்று பார்ப்போம். தேவர்களும் அசுரர்களும் பொதுவாக ஒன்று கூடுவதில்லை. ஆனல் பாற்கடலைக் கடைவதற்கு அவர்கள்

கூட்டுறவு கொண்டாடினர்கள். அதைக் கடைதற்கேற்ற பெரிய ஏற்பாடு செய்யப்பட்டது. மேருமலையை மத்தாக வைத்துக்கொண்டு, வாசுகி என்னும் சர்ப்பத்தைக் கயிருக அமைத்து தேவர்கள் ஒருபக்கமும், அசுரர்கள் மற்ெருரு பக்கமும் நின்று கொண்டு பால் கடலைக் கடைந்தார்கள். சரஸ்வதி, லக்ஷ்மி, ஐராவதம், காமதேனு, கற்பகவிருக்ஷம், கௌஸ்துபம் போன்ற விதவிதமான தெய்வசம்பத்துக்களும், தெய்வ சொருபங்களும் தோன்றிவரலாயின. அவைகளைத் தேவர்களும் அசுரர்களும் பங்கு போட்டுக் கொண்டார்கள். கடைசியாக ஆலால விஷம் தோன்றியது. அதைப் பங்கு போட யாரும் முன்வரவில்லை. அதினின்று விலகிக்கொள்ள இருதரத்தாரும் முயன்றனர். ஆனல் அக்கொடிய நஞ்சு யாரையும் விட்டுவிடவில்லை. மூன்று லோகங்களுக்கும் ஓடிய தேவர்களையும், அசுரர்களையும் அது தொடர்ந்து சென்றது. கடைசியாக சிவபெருமானின் திருவடியில் சென்று அவர்கள் தஞ்சம் புகுந்தனர். அவர்களை உய்விக்க அந்த நஞ்சை எடுத்து அவர் உண்டார். கண்டத்தில் அதை நிறுத்தினர். அதை முன்னிட்டே அவருக்கு நஞ்சுண்டவன் என்றும், கறைகண்டன் என்றும் பெயர்கள் வந்தன. எது உயிரைப் பேணுகிறதோ அது அமுது அல்லது அமிர்தம். மரணமற்றது என்பது அதன் பொருள். மரணத்தை உண்டு பண்ணும் விஷம் சிவபெருமான் கையில் மரணத்துக்கு எதிரிடையாகிய அமிர்தமாய் மாறிவிட்டது. இந்த வரலாறு ஒரு தத்துவத்தை விளக்குகிறது. வாழ்க்கை என்னும் கடலை நல்லவர்களும் கெட்டவர்களும் யாண்டும் கடைந்து கொண்டே இருக்கின்றனர். உயிரை அது அடிப்படையாகக் கொண்டிருப்பதை விளக்குதற்கு அது பாற்கடல் என்று விளக்கப்படுகிறது. வாழ்க்கையைப் பயன்படுத்துகிறவர்

கள் கல்வியைப் பெறலாம்; செல்வத்தைப் பெறலாம்; ஆடை ஆபரணங்களைப் பெறலாம்; வண்டி வாகனங்களைப் பெறலாம்; விதவிதமான வசதிகளைப் பெறலாம். இவை யாவும் வாழ்வுஎன்னும் கடலிலிருந்து தோன்றியவைகளாம். இறுதியில் மரணம் என்னும் விஷம் வருகிறது. உயிர்கள் எவ்வுலகுக்கு ஓடினாலும் மரணத்தினின்று தப்பிக்க முடியாது. ஆனல் சிவனையடைந்து சிவசாயுஜ்யம் பெறுகின்றவர்கள் மரணமிலாப் பெருநிலையைப் பெறுகின்றனர். இவர்களை எடுத்து விழுங்குதற்கிருந்த மரணம் சிவபெருமானால் விழுங்கப்படுகிறது. இந்த அதிசயச் செயல் காலமெல்லாம் நிகழ்ந்துகொண்டிருக்கிறது. கடவுளின் அருள் திறன் இதுவேயாம். **கொடிய ஆலம் அமுதாகவிலையோ** என்று இவ்வற்புதத்தைக் குறித்துத் தாயுமானவர் கேட்கின்றார்.

இயற்கையின்கண் உள்ள மற்றொரு அதிசய நிகழ்ச்சி புராண வரலாறாக ஈண்டு எடுத்துப் பகரப்படுகிறது. இந்தப் பூமி பண்டொரு காலத்தில் சூரியன் என்னும் பெருங்கோளத்தில் இருந்தது. ஒரு சிறு துளியாக அதனிடத்திருந்து சிதறி நெடுந்தூரத்துக்கு அப்பால் வந்து இப்பொழுது அதன்கண் உள்ள நிலையை அடைந்தது. பூமியின் மேல்பரப்பு உயிர்கள்வாழத் தகுதியுடையதாய் இருக்கிறது. ஆயினும் இப்பூமியைக் குடைந்துகொண்டு உள்ளே சென்றால், ஐம்பது மைலுக்குக் கீழே அதனிடத்துப் பழைய அக்னிக் குழம்பு உள்ளடங்கிக் கிடக்கிறது. சிற்சில வேளைகளில் எரிமலைகளிலுள்ள சிறு சிறு துவாரங்கள் வாயிலாக இந்த அக்னிக்குழம்பு பூமிக்கு வெளியே வருவதுண்டு. அப்படி அது வெளியில் வருகின்றபொழுது உயிர்வகைகளுக்கு அது எத்தகைய தீங்கு செய்கிறது என்பது நாம் அறிந்துள்ள விஷயம். கடலில் உள்ள மலைகளிலும் அது

வெளித் தோன்றுவதுண்டு. கடலில் உள்ள மலையுச்சி நீர் மட்டத்தளவில் இருக்குமாகில் இந்த அக்னிக் குழம்பு நீரி னின்று வெளியே கிளம்புவது போன்று தென்படுகிறது. பிறகு அது நீருக்குள் விழுந்து ஆறிப்போய்விடுகிறது. இக் கோட்பாட்டைப் புராணம் ஒரு பாங்கில் சொல்லுகிறது. பெண் குதிரையின் வடிவெடுக்கும்படி சிவபெருமான் இந்த அக்னிக்கு ஆணையிட்டார். கடலினுள் அக்னி சொரூபமாகத் தோன்றியுள்ள அந்தக் குதிரை கடல் கரைபுரண்டுபோகாத படி அதைக் காத்து வந்தது என்பது கோட்பாடு. இது இயற்கையின் நிகழ்ச்சி. இயற்கையின் நிகழ்ச்சிகள் எல்லாம் ஈசனுடைய விளையாட்டு. இயற்கைத் தாயின் பேராற்ற லுக்கு இவைபோன்ற நிகழ்ச்சிகள் பெரிய எடுத்துக்காட்டு கள் ஆகும். இக்கோட்பாட்டை அக்கடலின்மீது வட அனல் நிற்கவில்லையோ என்று தாயுமானவர் கேட்கிறார்.

அண்டங்களின் அமைப்பைப்பற்றி நாம் எண்ணிப் பார்ப் பதில்லை. சந்திர சூரிய நட்சத்திரங்கள் வாயிலாக அவை களின் அமைப்பு ஓரளவு நம் தோற்றத்தில் இருந்துகொண் டிருக்கிறது. ஆனால் அதை நாம் பார்க்கவேண்டிய பாங்கில் ஆராய்ந்து பார்ப்பதில்லை. நாம் வசித்துவரும் பூமியைப் பற்றியே நாம் முறையாகச் சிந்திப்பதில்லை. எண்ணிப் பார்த்தால் இந்தப் பூமி எவ்வளவு பெரியது ; அதில் நாம் எவ்வளவு சிறிய வடிவத்தில் இருக்கிறோம் என்பது புலனா கும். இப்பூமியோடு சீர்தூக்கிப் பார்க்குமிடத்து நாம் ஓர் அணு உயிர் போன்றவர். ஆயினும் நம்மை நாம் மிகச் சிறப் புடையவர்களாக எண்ணிக்கொள்கிறோம். இப்பூமியோடு சீர்தூக்கினால் நாம் இருப்பதும், அழிந்துபட்டுப் போவதும் இந்தப் பூமியின் அமைப்புக்கு லாபமோ நஷ்டமோ ஆய் விடாது. இப்பெரிய பூமியோ நமது சூரியமண்டலத்தில்

ஒரு சிறு தூசிக்கு ஒப்பானது. ஏனைய சூரிய மண்டலங்களோடு சீர்தூக்குகிற இடத்து நமது சூரியமண்டலம் ஒரு தூசிக்குச் சமானமாய் விடுகிறது. நமது சூரியனைவிடப் பன்மடங்கு பெரிய சூரியன்கள் வானவெளியில் ஆங்காங்கு மிதக்கிக்கொண்டிருக்கின்றன. நமது காட்சிக்கு எட்டாத அவ்வளவு தொலைவில் அவைகள் இருக்கின்றன. இனி, இவைகளுடைய நடைமுறை எத்தகையது என்று பார்க்குமிடத்து அது நமக்குப் பெரு வியப்பூட்டுகிறது. ஒவ்வொரு கோளமும் தன் போக்கில் வானவெளியில் விரைந்து சுழன்று வந்துகொண்டிருக்கிறது. இவைகளில் ஏதேனும் ஒன்று தன் பாதையை விட்டுச் சிறிது பிசகிவிடுமானல் மற்றென்றோடு மோதித் துகள் துகளாகப் போய்விடும். அதன் விளைவாக ஏனைய கோளங்களின் இயக்கத்துக்கு ஊறு ஏற்படும். மற்றவைகள் ஒன்றோடொன்று மோதுதற்கும் அந்த நிகழ்ச்சி இடந்தந்து விடலாம். ஆனல் என்னே இயற்கையின் நடைமுறை! எண்ணிறந்த கிரகங்கள் பாதையினின்று பிசகாது, அதது அமைக்கப்பெற்றிருக்கிற இடத்தினின்றும் பிசகாது இயங்கி வருகின்றன. இவைகளில் ஏதேனும் ஒன்று தன் நிலையிலிருந்து தாழ்ந்து போய்விடுமானல் அண்டங்கள் அனைத்தினுடைய அமைப்பே குலைந்து போவதற்கு அது ஏதுவாகும். அப்படி அவைகள் அழிந்துபட்டுப் போகாது முறையாக இயங்குதற்கு ஏற்ற பேரமைப்பை இறைவன் செய்து வைத்துள்ளார். இக்கோட்பாட்டை அந்தரத்து அகிலகோடி தாழாமல் நிலைநிற்கவிலையோ என்று அவர் கேட்கிருர்.

சிவபெருமான் திரிபுர சம்மாரம் செய்தது மற்றொரு அதிசயச் செயல். மூன்று புரங்களுக்கு மூன்று அசுரர்கள் அதிபதிகளாக இருந்தனர். அவர்களுடைய ஆட்சியை

ஒழித்துவிட வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அதற்கு வேண்டிய ஆயத்தத்தைச் சிவபெருமான் செய்தார். மேரு மலையை வில்லாக வளைத்தார். பிரம்ம தண்டத்தை அம் பாகக்கொண்டார். ஆயத்தத்துடன் போருக்குப் போனார். அவருடைய கடைக்கண் பார்வையிலேயே முப்புரமும் அழிந்து போய்விட்டன. புராண வரலாற்றுப் பிரகாரம் இது பண்டொருகால் நிகழ்ந்த நிகழ்ச்சி. ஆனால் தத்து வார்த்தமாக இது யாண்டும் நிகழ்கிற நிகழ்ச்சி. ஜாக்கிரத, சொப்பன, சுஷுப்தி என்ற மூன்று அவஸ்தைகள் முப்புரங் களாகின்றன. மேலும் சத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக் குணங்களும், மும்மலங்களும் திரிபுரம் என்னும் பெயர் பெறக்கூடும். இனி ஜாக்ரதம், சொப்பனம், சுஷுப்தி ஆகிய மூன்று அவஸ்தைகளை அரக்கர்களுடைய ஆட்சிக்குரியவை கள் என்று ஏன் பகரவேண்டும் என்ற கேள்வி எழலாம். இந்த மூன்று அவஸ்தைகளும் நம்மை இந்த ஸ்தூல உட லோடு இணைத்து வைத்து விடுகின்றன. இவ்வுடலில் கட் டுண்டிருப்பது நமது குறிக்கோள் அல்ல. உடலில் கட்டுண் டிருக்கும் வரையில் அரக்கனுடைய ஆட்சியில்தான் நாம் இருந்து வருகிறோம். இதில் குறைபாடுகள் பல இருக்கின் றன. இதிலிருக்கும் நலன்களைவிடக் கேடுகளே மிகைப்பட்ட வைகள். கேடுகளைக் கடந்து பரிபூரணப் பெருநிலைக்குப் போவது நம் குறிக்கோள். உடல் கூற்றை அறவே வென் றால்தான் அது சாத்தியமாகிறது. ஆதலால் உடல் வாழ்வு என்னும் திரிபுரசம்மாரம் நம் ஒவ்வொருவரிடத்திலும் நிகழ்ந் தாகவேண்டும். சிவபெருமானுடைய அனுக்கிரகம் வரு கின்றபொழுது மூன்று அவஸ்தை, மூன்று குணம், மூன்று மலம் என்னும் முப்பாழும் பாழாய்விடுகின்றன. சிவபோதம் பிறகு எஞ்சியிருக்கிறது. இக்கோட்பாட்டை மேருவும்

தனுவாக வளையவில்லையோ என்று தாயுமானவர் கேட்கின்றார். தனுஸ் என்பது வில்லைக் குறிக்கின்றது.

அந்தரத்தில் இருப்பவைகள் நமக்கு மிக எட்ட உள்ள படைப்பு ஆகும். நமது ஆராய்ச்சிக்கு அவை எட்டாது போய்விட்டாலும் நமக்கு அண்மையில் இயற்கையின் அமைப்பில் வேறு ஒரு பகுதி இருக்கின்றது. அதன் விசித்திரத்தை எண்ணிப்பார்ப்போம். மேக மண்டலத்தை முறையாக நடத்தி வருகின்ற இயற்கைச் சக்திக்கு இந்திரன் என்னும் பெயரை நமது ஆன்றோர் வழங்கியிருக்கின்றனர். அவன் வஜ்ராயுதத்தை உடைத்திருக்கின்றான். வஜ்ராயுதத்தைப் பற்றிய உண்மையையும் நாம் அறிந்துகொள்ளவேண்டும். நல்ல இயல்புடையவர் தேவர்கள்; தீய இயல்புடையவர் அரக்கர் அல்லது அசுரர். அரக்கர்களை அடக்குதற்கு ஏற்ற ஆயுதம் எது என்று தேவர்களும் அவர்களின் அரசன் ஆகிய இந்திரனும் ஆராய்ச்சி பண்ணினார்கள். வஜ்ராயுதமே அதற்குத் தகுந்த ஆயுதம் என்று அறிந்துகொண்டார்கள். அதை அமைப்பதற்கு தபசும் சீலமும் வடிவெடுத்துள்ள ஒரு முனிவரது உடல் எலும்பு வேண்டுமென்று அறிந்துகொண்டார்கள். அவர்களுடைய முயற்சி நிறைவேறுதற்கு ததீசி முனிவர் தமது உடலைத் தியாகம் பண்ணி அதிலிருந்த எலும்பைக் கொடுத்தார். ஆக, வஜ்ராயுதம் ஒழுக்கத்துக்கும், தபசுக்கும், தியாகத்துக்கும் சின்னமாய் வந்தமைகிறது. கீழான இயல்பை அகற்றுதற்கும், மேலான இயல்பைப் பராமரிப்பதற்கும் அந்த வஜ்ராயுதம் பயன்படுகிறது. இயற்கையின் அமைப்பில் மேகத்தில் உண்டாகும் இடிக்கு வஜ்ராயுதம் என்று பெயர். இடி இடித்து இயற்கை வளர்கின்ற பயிர் பச்சைகளுக்குச் செழிப்பை உண்டுபண்ணி வருகிறது. ஆக, மின்னல், இடி, மேகங்கள் ஆகிய இவையாவும் ஒன்றோ

டொன்று சம்பந்தப்பட்டிருக்கின்றன. மேகங்களின் அமைப்பை மேலும் ஆராய்ந்து பார்ப்போம். மண்ணுலகி னின்று ஆவியாக மேலே போன நீரானது விண்ணுலகில் விதவிதமான மேகங்களாக வடிவெடுத்திருக்கிறது. ஏழுவித மேகங்கள் என்பது புரான வரலாறு. இயற்கையின் நடை முறையை நாம் நேரே ஆராய்ந்து பார்க்குமிடத்து அக் கொள்கையின் பெரும் பகுதி நமக்கு விளங்கும். மேகத் தைப் பொதுவாக வெண்மேகம் என்றும், கார்மேகம் என் றும், பொன்மேகம் என்றும் பகர்கின்றோம். கார்மேகமோ தானிருக்கும் சூழ்நிலையை அனுசரித்து இன்னும் பல வடி வங்களை எடுக்கின்றது. அந்த வடிவங்களைப் பொதுவாக பனித்திரள் என்று பகர்கிறோம். பனி மூடுபனி, உறைபனி, நீர்ப்பனி, கெண்டைப்பனி, உதிர்பனி என்றெல்லாம் பெயர் பெறுகிறது. ஆலங்கட்டியாக அது நிலத்தில் விழுவதும் அதன் ஒரு வடிவு ஆகும். இங்ஙனம் இயற்கையின் வெவ் வேறு இடங்களில் மேகமானது வெவ்வேறு வடிவும் பெய ரும் எடுத்து நிலவுலகத்துக்கு நலம் வழங்கிவருகிறது. அதன் செயலில் ஓர் ஒழுங்குப்பாடு இருக்கிறது. புராணங் கள் பகர்ந்துள்ள முறையைப் பயன்படுத்தி சப்த மேகங் களும் வஜ்ரதரன் ஆணையில் சஞ்சரித்திட வில்லையோ என்று தாயுமானவர் கேட்கின்றார்.

இன்னொரு ஆராய்ச்சியை இதிகாசத்தினின்று அவர் எடுத்துக்கொள்கிறார். புராணத்துக்கும் இதிகாசத்திற்கும் சிறிது வேற்றுமை உண்டு. மேலோர் மண்ணுலகில் பிறந்து வாழ்ந்து காட்டுகின்ற பெருவாழ்வுக்கு விளக்கமாக வந்து அமைவது இதிகாசம். இம்மண்ணுலகில் மானுட உடல் எடுத்து நடமாடிய மூர்த்திகளுள் தசரத ராமர் ஒருவர். அவருடைய வாழ்க்கையிலே ஓர் அதிசயச் செயல் நிகழ்ந்

தது. ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் நல்லறத்துக்கு விளக்கம் வருகிறது. மானுட வாழ்க்கை எவ்வளவு மேலானது ஆகக்கூடும் என்பதையும் அவருடைய நரலோக லீலை விளக்குகிறது. விசுவாமித்திரரோடு அவர் மிதிலைக் குப் போய்க்கொண்டிருந்தார். வழியில் கௌதம முனிவருடைய ஆசிரமத்தைக் கடந்து சென்றார். அந்த ஆசிர மத்துக்குள் அவர் நடந்து சென்றபொழுது பூமியின் மற்ற பகுதிகளை மிதித்து நடப்பது போன்று ஒரு கல்பாறையை யும் மிதித்தார். என்ன விந்தை! அவருடைய திருவடி பட்டவுடனே அந்தச் சிலை பெண்ணாக மாறிவிட்டது. உயிரோடு ஆவிர்ப்பவித்து வந்த அந்த மங்கை இராமனது திருவடியில் வணங்கி நின்றாள். இந்த வரலாற்றை இதிகாசத் தில் காண்கின்றோம். இந்த மங்கை அகல்யை என்னும் பெயர் படைத்தவள். அறியாமையினால் இவள் நெறி வழுவி நடக்க வேண்டியதாயிற்று. அதை முன்னிட்டு அவளைக் கல்லாக கௌதம முனிவர் சமைத்துவிட்டார்.

திரேதாயுகத்தில் மானுடனாக அவதரித்துவரும் இராம னது திருவடிபட்டால் அவளுக்கு விமோசனம் உண்டாகு மென்று கௌதமர் சொல்லியிருந்தார். அந்த நிகழ்ச்சி இப்பொழுது நேர்வதாயிற்று. இறைவனுடைய மகிமையும், அதிசயச் செயல்களும் மண்ணுலகுக்கு எட்டாத பெரு நிலையிலிருந்து படிப்படியாக மண்ணுலகுக்கும், மண்ணுலகில் வாழுகின்ற மக்களுக்கும் தொடர்வுடையவைகளாக வந்த மைகின்றன. இங்கு உயிர்களின் நலத்தின் பொருட்டுக் கடவுளே மானுட வடிவெடுத்து வருகின்றார். அவர் புரி கின்ற செயல்களெல்லாம் அறநெறிக்கு நல்ல விளக்கங்களா கின்றன. தத்துவத்துக்கும் நல்ல விளக்கங்கள் ஆகின்றன. அக்ஞான நிலையில் இருக்கின்ற ஜீவர்கள் அகல்யைபோன்று ஜடநிலையில் இருக்கின்றார்கள். ஜடநிலை கல்லுக்கு ஒப்பா

னது. ஏதேனும் ஒருவிதத்தில் கடவுளோடு தொடர்வு வருகின்றபொழுது ஜடநிலைக்கு முடிவு வந்துவிடுகின்றது; உண்மையான விமோசனம் ஏற்படுகின்றது. பரபோதம் அடையப்பெற்று ஜீவாத்மன் சான்ருேன் ஆய்விடுகின்ருன். இத்தகைய அதிசயச் செயல்களுக்குப் பொருந்திய அரங்கமாக இந்த வையகமே வாய்த்துள்ளது. இக்கோட்பாட்டை இராமனடியால் சிலையும் மடமங்கை யாகவிலையோ என்று அவர் கேட்கின்ருர். சிலை என்பது கல்லைக் குறிக்கிறது. அத்தகைய சிலையைக் குறித்து இரண்டு அடைமொழிகளை யும் அவர் வழங்கியுள்ளார். வாழாது வாழவே என்பது அந்த அடைமொழியாகும். இதில் முரண்பாடு ஒன்றைக் காண்கிருேம். எது வாழாது போய்விட்டதோ அது மாய்ந்து போய்விட்டது. எது வாழ்ந்திருக்கிறதோ அது வாழாதது ஆகாது. இந்த முரண்பாட்டைத் தாயுமானவர் ஒற்றுமைப்படுத்த முயலுகிருர். அது முடியுமா என்பது கேள்வி. அது முடியும் என்பதையே அவர் எடுத்துக் கொண்டுள்ள சம்பவம் விளக்கிக்காட்டுகிறது. அகல்யை செத்துப்போனவர்களோடு சேர்ந்தவளும் அல்லள்; உயிரோடு இருக்கின்றவர்களோடு சேர்ந்தவளும் அல்லள். இரண்டுக்கும் இடைநிலையில் அவள் இருக்கின்ருள். இக் கோட்பாடு ஒரு விதத்தில் நமக்கும் பொருந்துகிறது. நாம் அறவே ஜடநிலையில் இருப்பவர்கள் அல்லர்; முற்றிலும் உணர்ந்த பாரமார்த்திகப் பெருநிலைக்கும் நாம் இன்னும் போய்ச் சேரவில்லை. பாரமார்த்திகப் பெருநிலையோடு சீர்தூக்கினல் நாம் செத்தவர்கள் போன்று கீழ்நிலையில் இருக்கிருேம். கல் போன்ற ஜடப்பொருள்களோடு சீர் தூக்கினல் ஏதோ ஒருவிதத்தில் நாம் உயிர் வாழ்பவர் களாகத் தென்படுகிருேம். உயிர்கள் அனைத்தும் இறை

வனை நோக்கிப் பெரும் பயணம் போய்க்கொண்டிருக்கின்றன. அப்பெரும் பயணத்தில் நாம் பெற்றுள்ள நிலை இடைநிலையாகிறது. நாம் அனைவரும் வாழாது வாழ்ந்து வருகிறோம். கடவுளோடு சேர்ந்து நாம் வாழ்பவர்கள் அல்லர். ஏதோ ஒரு சிறிது உணர்வைப் பெற்று சிறு வாழ்வு வாழ்ந்து வருகின்றோம். அது நமக்குப் போதாது என்பதையும், இதைவிட உயர்ந்த குறி ஒன்று நமக்கு இருக்கிறது என்பதையும் இந்த அடைமொழி சுட்டிக் காட்டுகிறது.

ஜீவாத்மன் நல்வாழ்வு வாழ்ந்து பெருநிலைக்கு வருகின்றபொழுது அவன் சித்த புருஷனுகின்றான். அவன் மூலம் நிகழ்கின்ற நிகழ்ச்சிகளும் இறைவனுடைய பெருமையையே விளக்குகின்றன. பரிபாகம் அடையாத மக்களுக்கும் அத்தகைய நிகழ்ச்சிகள் நன்கு பயன்படுகின்றன. பாதரஸத்தைக் கொண்டு மணி கட்டுதல் ஒரு சிறந்த செயல். சித்தர்களுக்கே அது சாத்தியம். அங்ஙனம் கட்டப்பெற்ற மணி ஒன்றை மனிதன் ஒருவன் தன் மேனியின் மீது படிந்திருக்கும்படி வைத்திருந்தால் அவனுக்கு நோய் உண்டாகாது. எவ்வளவு காலம் அந்த மணி அவனிடமிருக்கின்றதோ அவ்வளவு காலம் அவனுக்கு நோயற்ற வாழ்வு. பிராரப்த கர்மமும் அவ்வேளையில் வலிவற்றதாய் விடுகிறது. இனி, மந்த்ரசக்தி அளப்பரியது. மனபரிபாகம் படைத்திருக்கின்றவர்கள் சில மந்த்ரங்களை ஓதுவார்களாயின் இயற்கையின் செயல்களே அதற்கேற்றவாறு மாறியமைந்து விடுகின்றன. விரும்பிய இடத்தில் தீ மூட்டுதற்கேற்ற மந்த்ரம் உண்டு. வேண்டிய இடத்தில் மழை பொழியும்படி தூண்டுதற்கு ஏற்ற மந்த்ரம் உண்டு. அத்தகைய மந்த்ரங்களை முறையாகக் கையாளுதலின் மூலம் உலகுக்குப் பெருநன்மை விளைவிக்கலாம். மூன்றுவதாக ஔஷதம் வருகிறது.

இப்பொழுது மருத்துவர்களிடமிருந்தும், கடைகளிலிருந்தும் நாம் பெறும் மருந்துகள் ஓரளவில் நலம் தருபவைகளாக இருக்கின்றன. ஆனல் சித்தர்கள் ஆயத்தப்படுத்தித் தருகின்ற ஔஷதங்களுக்கு அலாதியான ஆற்றல் உண்டு. இம் மூன்றையும் தொகுத்து மணிமந்த்ரம் ஔஷதம் என்று இயம்புவது மரபு. மேலோர்க்கே இவைகளை நன்கு பயன் படுத்தத் தெரியும். இறைவனுடைய அருளுக்குப் பாத்திர மானவர்களே மேலோர் அல்லது சித்தபுருஷர் ஆகின்றனர். அவர்களின் மூலம் நிகழ்கின்ற அதிசயச் செயல்களை மணி மந்த்ரம் ஆதியால் வேண்டுசித்திகள் உலக மார்க்கத்தில் வைக்கவில்லையோ என்று தாயுமானவர் கேட்கின்ருர்.

இதுகாறும் பகர்ந்துள்ள பெருமைகள் எல்லாம் மண்ணுலகும், விண்ணுலகும் ஆகிய புற உலக நடைமுறையில் காணும் அதிசயங்கள் ஆகின்றன. புற உலகுக்கும் அக உலகுக்கும் தொடர்வு வைப்பது மனது. நாம் கண்ணுக்கு அணிந்துகொள்ளும் கண்ணடி போன்றது மனம். பச்சைக் கண்ணடி அணிந்துகொள்கிறவனுக்கு உலகமெல்லாம் பச்சை நிறமாகத் தென்படுகிறது. சிவப்புக் கண்ணடி போட்டுக் கொள்கிறவனுக்கு உலக முழுதும் செந்நிற மானது. மேடு பள்ளமாயிருக்கும் கண்ணடி போட்டுக் கொள்கிறவனுக்கு புற உலகம் முழுதும் திரிவுபட்ட காட்சி தருகிறது. உண்மையில் உலகம் முழுதும் பச்சை நிறமானதும் அல்ல, சிவப்பானதுமல்ல, திரிவுபட்டதுமல்ல. அது உள்ளது உள்ளபடி இருக்கின்றது. ஒவ்வொரு மனிதனும் படைத்துள்ள மனதுக்கு ஏற்ப உலகக்காட்சி அம்மனிதனுக்கு மாறி அமைகிறது. கெட்ட மனமுடையவனுக்கு உலகெலாம் கேடு நிறைந்தது. நல்ல மனமுடையவனுக்கு உலகம் நல்லதாகக் காட்சி கொடுக்கிறது.

ஒவ்வொரு மனிதனும் தான் அடைந்துள்ள பரிபாகத்துக்கு ஏற்ற நிலையில் தன் மனதை வைத்திருக்கின்றான். மனதை ஒருவன் முற்றிலும் பக்குவப்படுத்தி விடுவானாகில் ஜன்மாந்தரங்களில் அவன் சாதிக்க வேண்டிய செயல்களெல்லாம் பூர்த்தியாய்விடுகின்றன. மனிதனுக்கு பந்தத்தை உண்டுபண்ணுவது அவனுடைய மனது; முக்தியாம் பெருநிலையில் மனிதனைச் சேர்ப்பதும் அவனுடைய மனது. நல்ல மனம் படைத்திருக்கின்றவனுக்கு மெய்ப்பொருள் காட்சி விரைவில் வந்துவிடுகின்றது. மெய்ப்பொருள் காட்சியைப் பெற்றான பிறகு அம்மனிதனே மெய்ப்பொருளில் ஒன்றித்து விடுகின்றான். இதைத் தாயுமானவர் நன்கு அறிகின்றார். கடவுளிடத்து இப்பொழுது அவர் செய்கின்ற விண்ணப்பம் முற்றிலும் நியாயமானதாக இருக்கின்றது. புற உலகு முழுதையும் ஒழுங்காகக் கடவுள் அமைத்து வைத்திருக்கின்றார். அதில் அவருடைய அருள் நிறைந்த திருவிளையாடல்களெல்லாம் ஒழுங்காக நிகழ்ந்து வருகின்றன. வடிவங்களை யெல்லாம் கடந்த நிலையில் இருந்துகொண்டும் பிரபஞ்ச இயக்கத்தை அற்புதமாகக் கடவுள் நடத்தி வருகின்றார். இந்திரன் போன்ற தேவ வடிவெடுத்து விளையாடுகின்ற பொழுதும் அவருடைய செயல் அற்புதமானதாய் இருக்கிறது. மானுட வடிவந்தாங்கி அவதார மூர்த்தியாக அவனியில் வருகின்ற பொழுதும் அவருடைய செயல் அற்புதமாக இருக்கின்றது. சாமான்ய ஜீவர்களைப் பக்குவப்படுத்தி சித்த புருஷர்களாக்கி அவர்கள் மூலம் சாதிக்கின்ற செயல்களும் அற்புதமானவைகளாய் இருக்கின்றன. எங்கும் ஒழுங்குப்பாடே நிறைந்திருக்கிறது. ஆனால் பாழ்பட்ட நிலையில் தமது மனது போய்விட்டதனால் அந்த ஒழுங்குப்பாட்டைக் காணும் தகுதி தம்மிடத்து இல்லாதுபோய்

விட்டது என்று தாயுமானவர் குறை கூறுகின்றார். பாழடைந்த தமது மனது மட்டும் பரிசுத்த நிலைக்கு வந்துவிடுமானால் தமக்கு எல்லாம் உள்ளது உள்ளபடி விளங்கிவிடும். அதற்குத் தாம் இன்னும் தகுதியற்ற நிலையில் இருப்பதைச் சுட்டிக்காட்டி பாழான என்மனம் குவிய ஒரு தந்திரம் பண்ணுவது உனக்கு அருமையோ என்று பரிந்துவிண்ணப்பிக்கின்றார்.

மந்த்ரம், தந்த்ரம் என்று இரண்டு சொற்களைத் தாயுமானவர் இப்பாடலில் கூறுகின்றார். யந்த்ரம் என்னும் மூன்றாவது சொல்லையும் சேர்த்துக் கொண்டால் சாஸ்திரத்துக்கு நல்ல விளக்கமாகிறது. எது மனதை உறுதிப் படுத்துகிறதோ அது மந்த்ரம். நேர்மையான உடல் வாழ்க்கைக்கு யந்த்ரம் என்று பெயர். அதற்குரிய நல்வழியைக் கடைப்பிடிப்பதற்கு தந்த்ரம் என்று பெயர். இம்மூன்றும் ஒன்று சேர்ந்துவிட்டால் சாதகன் கடவுளை அடைவது திண்ணம். 'இறைவா! இவையாவையும் எனக்கு வழங்கி விடு' என்று அவர் வேண்டிக்கொள்கிறார். அவர் செய்யும் விண்ணப்பம் யாவும் மேற்கண்ட பாடலில் அடங்கியிருக்கின்றன.

---

## பரிபூரணனந்தம் - 10

ஆசைக்கோ ரளவில்லை அகிலமெல் லாங்கட்டி
ஆளினுங் கடல்மீதிலே
ஆணைசெல வேநினைவர் அளகேசன் நிகராக
அம்பொன்மிக வைத்தபேரும்
நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்
நெடுநா ளிருந்தபேரும்
நிலையாக வேயினுங் காயகற் பந்தேடி
நெஞ்சுபுண் ணுவர்எல்லாம்
யோசிக்கும் வேளையிற் பசிதீர உண்பதும்
உறங்குவது மாகமுடியும்
உள்ளதே போதும்நான் நான்எனக் குளறியே
ஒன்றைவிட் டொன்றுபற்றிப்
பாசக் கடற்குளே வீழாமல் மனதற்ற
பரிசுத்த நிலையைஅருள்வாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணுனந்தமே.

இயற்கைக்கு சிருஷ்டி என்பது மற்ருெரு பெயர். சிருஷ்டி எதற்காக அமைந்துள்ளது என்பது கேள்வி. உயிர்களைப் பண்படுத்துதல் அதன் செயல். உயிர்கள் ஓயாது நிலைமாறி அமைந்து வருகின்றன. சிறுநிலையைத் தவிர்த்துப் பெருநிலையை அடைய உயிர்கள் முயன்று வருகின்றன. கல் அல்லது புல் நிலையில் இருக்கின்ற உயிர் ஒன்று படிப்படியாகப் பரிணமித்து மேல் நிலைக்கு வருகிறது. பல பிறவிகளுக்குப் பிறகு மானுட நிலையை அவ்வுயிர் எட்டுகிறது. மானுடன் ஆனபிறகும் எண்ணிறந்த பிறவிகள் அவ்வுயிர்க்கு

உண்டு. பிறகு பிறவிப் பெருங்கடலைத் தாண்டி பரம்பொருளில் போய்ச் சேருவது உயிர்களின் முடிவான குறிக்கோள்.

சிறுநிலையை விட்டுப்பெருநிலை அடைவதற்கு உயிர்களுக்குத் தூண்டுதல் தருவது எது என்று எண்ணிப்பார்க்க வேண்டும். உயிர் உயர் நிலைக்குப் போவதற்கு ஆசைதான் தூண்டுதலாக வந்து அமைந்திருக்கிறது. எல்லா உயிர்களிடத்தும் ஆசை உண்டு. அது இல்லாது போயின் உயிர் வாழ்ந்திருப்பதும் ஆகாது; முன்னேற்றம் அடைவதும் இயலாது போய்விடும். உயிர்களுக்குப் பசி உண்டாகிறது. பசி வந்ததும் உணவின்கண் ஆசை வந்துவிடுகிறது. பசியும் உணவில் ஆசையும் இல்லாது போய்விட்டால் வாழ்வே அற்றுப்போம். வாழ்ந்துவரும் உயிர்களுக்கு விக்கினங்கள் பல இயற்கையில் தென்படுகின்றன. அந்த விக்கினங்களை மீள முயலுதல் வாழ்க்கையில் மற்றொரு பகுதி. அத்தகைய முயற்சியே ஆசை என்று இயம்பப்படுகிறது. வாழ்வில் ஆசை இருக்கிறது; வாழ்க்கைக்கு இடைஞ்சலாய் இருப்பதை விலக்குதலில் ஆசை இருக்கிறது; உயிர்களுக்கு இன்பத்தில் ஆசை இருக்கிறது; இன்னாததைத் தவிர்த்துவிடுதலில் உயிர்களுக்கு ஆசை உண்டாகிறது. இங்ஙனம் வாழ்க்கைக்கும் முன்னேற்றத்துக்கும் ஆசையே முதல் காரணமாகிறது. ஆசை இல்லாது போய்விடின் உலக வாழ்க்கையே ஒழிந்துபட்டுப்போம்.

வாழ்ந்திருக்கும் உயிர்களின் உடலில் வெப்பம் நிலைத்திருப்பதைப் பார்க்கிறோம். ஓர் உயிர் செத்துப் போனதும் அதன் உடலினின்று வெப்பம் மறைந்துபோய்விடுகிறது. சீதம் அல்லது தணுப்பு முன்னணியில் வந்து நிற்கிறது. உயிர் வாழ்க்கைக்கு வெப்பம் இன்றியமையாதது என்பது வெளிப்படை. உயிரை ஓம்புதலும், உடலில் வெப்பத்தைக்

காத்தலும் இணைபிரியாது இருந்து வருகின்றன. உடல் வாழ்க்கைக்கு வெப்பம் காத்தல் முற்றிலும் அவசியமாம். ஆனால் காய்ச்சல் என்னும் ஒரு நோய் வருகிறது. மிகைப் பட்ட வெப்பம் காய்ச்சல் எனப்படுகிறது. வெப்ப நோய் அதிகரித்துவிட்டால் உடல் வாழ்க்கை அற்றுப்போம். வெப் பம் முற்றிலும் தேவை; ஆனால் மிகைப்பட்ட வெப்பம் வாழ்வை ஒழித்துவிடும். உடலிலுள்ள வெப்பத்தோடு ஆசையை ஒப்பிடலாம். வாழ்வுக்கு ஆசை முற்றிலும் அவ சியமானது. ஆனால் மிகைப்பட்ட ஆசை மிகைப்பட்ட வெப் பம்போன்று வாழ்வை அழித்துவிடும். மிகைப்பட்ட ஆசை சிற்றுயிர்களிடத்து இல்லை. தமது ஜீவிதத்துக்குத் தேவை யானவைகளை மட்டும் அவைகள் விரும்புகின்றன. அந்த அளவில் சிற்றுயிர்களின் நிலவுலக வாழ்க்கை பாராட்டத் தக்கது. மானுடநிலைக்கு வந்தான பிறகு எக்காரணத்தை முன்னிட்டோ ஆசை அதிகரிக்க ஆரம்பித்துவிடுகிறது. அது எத்தகைய பேராசையாக வடிவெடுக்கிறது என்பதைத் தாயுமானவர் விளக்கிக்காட்டுகிறார். வெப்ப நோய் உடலுக் குப் பொருந்தாததாய் இருப்பதுபோன்று மிகைபட்ட ஆசை மானுடனுக்கு உதவாது. ஆயினும் எப்படியோ அது பெரு மிதமாக வளர ஆரம்பித்துவிடுகிறது. அப்படி அது வளர் வதை ஆசைக்கோர் அளவில்லை என்கிறார் அவர்.

அளவில் அடங்கிய ஆசை என்னென்ன பாங்கில் அளவு கடந்தது ஆகிறது என்பதைப் பார்ப்போம். இருக்க இடம் இல்லாது தவிக்கும் மனிதன் முயன்று வீடு ஒன்று கட்டு கிறான். பிறகு அதை நல்ல வீடாக மாற்றுகிறான். அடுத்த படியாக நிலத்தில் ஒரு சிறு பகுதியைத் தனக்குச் சொந்த மாக்குகிறான். அது போதவில்லை என்று எண்ணி அதிக மான நிலத்தைத் தேடிச் சம்பாதிக்கிறான். அடுத்தபடியாக

அவன் ஓர் சிற்றரசன் ஆகின்றான். அதுவும் அவனுக்குப் போதுவதில்லை. மற்றவர்களை வென்று அவன் ஒரு பேரரசன் ஆகின்றான். உலகெங்குமுள்ள நாடுகளையெல்லாம் அவன் தனக்குச் சொந்தமாக்கிவிடுகின்றான். பரந்த நில உலகமெல் லாம் தனது ஆட்சியில் அடங்கிய பிறகு அவன் திருப்தியுற்ற வன் ஆகின்றானா என்பது கேள்வி. விறகுக் கட்டைகள் போட்டு எரிகின்ற தீயைத் திருப்திப்படுத்த முடியாது. விறகுக் கட்டைகளைப் பொசுக்குகின்ற அளவு தீயின் வல் லமை அதிகரிக்கின்றது. நாடுகளையெல்லாம் பற்றியதன் பிறகு ஆசை புதிய வடிவெடுக்கிறது. என்ன பாங்கில் அது புதிய வடிவெடுக்கக்கூடும்? இக்கேள்விக்கு விடை வரு கிறது. அகிலமெல்லாம் கட்டி ஆளினும் கடல் மீதிலே ஆணை செலவே நினைவர். வையகம் ஆழி சூழ்ந்ததாக இருக்கிறது. இப்பூமியில் நிலம் கால் பங்கு ஆகவும், நீர் முக்கால் பங்கு ஆகவும் இருக்கிறது. நீரிலே வெவ்வேறு பகுதிகளுக்குச் சென்று அவையாவையும் தனக்குரியதாக்க வேண்டுமென்ற புதிய ஆசை மனிதனுக்கு வந்துவிடுகிறது. பரந்த கடலின்மீதும் தன்னுடைய ஆதிக்கம் செல்லவேண்டு மென்று அப்பேராசைக்காரன் நினைக்கின்றான் என்று சொல்லப்படுகிறது. இங்ஙனம் மனிதன் கொண்டுள்ள மண் ஆசைக்கும், ஆதிக்கத்தில் ஆசைக்கும், ஆட்சியில் ஆசைக் கும் ஒரு முடிவு இல்லை.

வேண்டியவாறு நிலவுலகை யெல்லாம் தன் ஆட்சியின் கீழ் கொண்டுவந்த பிறகு மனிதன் மேலும் என்ன செய்கின் றான் என்னும் கேள்வி பிறக்கக்கூடும். அவனுடைய பேராசை அவனை மற்றொரு துறையில் தூண்டுகிறது. பொன், வெள்ளி, ரத்தின வகைகள் போன்ற செல்வங்களை மேலும் மேலும் சேகரிக்க அவன் விரும்புகிறான். குவியல்

குவியலாக அவைகளை எவ்வளவுதான் சேகரித்தான பிறகும் திருப்தி உண்டாவதில்லை. இன்னும் சேகரிக்க வேண்டும் என்கின்ற எண்ணம் அவனுக்கு வருகிறது. பிரபஞ்சத்தில் அமைந்துள்ள செல்வர்களுள் தலை சிறந்தவன் அளகேசன் அல்லது குபேரன். அவனிடத்தில்தான் இயற்கையின் செல்வங்கள் அனைத்தும் குவிந்து கிடக்கின்றன என்பது ஐதிகம். கிட்டத்தட்ட குபேரனுடைய நிலைக்குப் பேராசைக் காரன் ஒருவன் வந்து விடுகின்றான். அவனுடைய பாங்கை அளகேசன் நிகராக அம்பொன் மிக வைத்த பேரும் என்று தாயுமானவர் இயம்புகின்றார். அப்படிச் செல்வத்தைச் சேகரித்த பிறகு மேலும் அம்மனிதன் என்ன செய்கிறான்?

கீழான உலோகங்களை மேலானவைகளாக மாற்று தற்கு எடுத்துக்கொள்ளும் முயற்சிக்கு ரசவாதம் என்று பெயர். நெடுங்காலமாக ரசவாத வித்தை பல நாடுகளில் இருந்து வந்திருக்கிறது. பெரும்பாலோர் இம்முயற்சியில் வெற்றி பெறக்கிடையாது. ஆயினும் இவ்வித்தையில் மனிதன் முற்றிலும் தோல்வியடைந்து விடவில்லை. யாரோ சிலர் பண்டைக் காலத்திலேயே இதில் வெற்றி பெற்றிருக் கின்றனர். அப்படி முயற்சி செய்தவர்களுள் பெரும்பாலோர் தாமிரத்தைத் தங்கமாக மாற்ற முயன்று வந்திருக்கின்றனர். தன்மையில் தாமிரத்துக்கும் தங்கத்துக்கும் நெருங்கிய தொடர்வு உண்டு. அழுக்குப் படிந்த நிலையில் இருக்கும் பொழுதும், களிம்பு ஏறும் தன்மையில் இருக்கும் பொழுதும் அது தாமிரம் என்று சொல்லப்படுகிறது. அழுக்கும் களிம் பும் நீங்கப்பெற்று அது சுத்தியடைந்து விட்டால் பொன் ஆய்விடுகிறது. இக்காலத்தில் ரஸாயன சாஸ்திரமும் இம் முயற்சியில் வெற்றியடைந்திருக்கிறது. ஆனல் நவீன ரஸாயன சாஸ்திரப்படி செம்பைப் பொன்னக மாற்றுகிற

பொழுது அதற்கு ஆகின்ற செலவு பொன்னின் விலையை விடப் பன்மடங்கு அதிகமாய் விடுகிறது. ஆதலால் இதை வியாபார முறையில் செய்ய முடிவதில்லை. ரஸவாதம் சாத்தியமானது என்று நிரூபித்துக் காட்டுதற்கு மட்டும் இது உதவுகிறது. பண்டைக்காலத்து முறைப்படி அதற்கேற்ற ஏதோ சில மூலிகைகளை தாமிரத்துடன் சேர்த்து உருக்கினல் அது பொன் ஆய்விடுகிறது. அப்படிச் செய்து ஒருவனுடைய செல்வத்தைப் பெருக்குதல் மிக எளிது. இந்த வித்தையைக் கண்டுபிடித்த சித்தர்கள் உலகத்தவர்களுக்கு இதை எடுத்துக்காட்டவில்லை. ஏனென்ருல் அவர்களைப் பிடித்துள்ள பொருளாசையை வளர்ப்பதற்கு இது உதவுகிறதே ஒழிய அவர்களுடைய மனபரிபாகத்துக்கு இது உதவுகிறதில்லை.

நம் நாட்டில் பழமொழி ஒன்று உண்டு. அதாவது ‘வாதம் தவறினல் வைத்தியம்’ என்பது அது. ரசவாதத்துக்கு முயற்சி பண்ணியவர்கள் விதவிதமான மூலிகைகளை ஆராய்ச்சி பண்ணினர். ரசவாதத்தில் அவர்கள் வெற்றி பெருவிட்டாலும் வைத்தியத்தில் அவர்கள் பெரிதும் வெற்றி பெற்ருர்கள். அரிய மருந்து வகைகள் பலவற்றை அவர்கள் கண்டுபிடித்தார்கள். அண்மையில் தோன்றியுள்ள ஞானிகளுள் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் குரு ஆகிய தோதாபுரிக்கு ரசவாதவித்தை தெரிந்திருந்ததென்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்ல அவருடைய சிஷ்யர்கள் கேட்டிருக்கிருர்கள். ஸ்ரீ ராமகிருஷ்ணர் தாமே அவ்வித்தையைத் தமது குருநாதரிடமிருந்து கற்றுக் கொள்ளவில்லை. ஏனென்ருல் அது ஆசையை வளர்க்கும் வித்தையாகும். தாமோ பொன் ஆசையை அறவே புறக்கணித்ததற்கு அறிகுறியாகக் காசை மறந்தும் கையால் தீண்டவில்லை. இது ஒரு புறம் இருக்க

முன்பொரு காலத்தில் பொன் ஆசை பிடித்த மனிதன் ஒரு வன் தான் தொட்டதெல்லாம் பொன்னுக வேண்டும் என்ற வரம் கேட்டதைப் பற்றிய ஐதிகம் இன்றைக்கும் உலவி வருகிறது. அத்தகைய வரத்தைக் கொடுப்பதற்கு முன்பு தேவதை ஒன்று அம்மனிதனுக்கு எச்சரிக்கை மிகச் செய்தது. அந்த வரத்தால் அவனுக்கு நலன் உண்டாவதை விடக் கேடே அதிகரிக்கும் என்பது அந்த எச்சரிக்கை. ஆயினும் அவன் வற்புறுத்தி அவ்வரத்தை வேண்டினுன். வரமும் கிட்டியது. அவன் தொட்டதெல்லாம் பொன் ஆனது. பெருமகிழ்ச்சியடைந்தான். பிறகு பசி உண்டாயிற்று. உண்பதற்கு உணவைத் தொட்டான். அந்தோ! அது பொன் ஆய்விட்டது. 'ஐயோ, இனி நான் எதை உண்பேன்?' என்று பிரலாபித்தான். அவனுக்கு நேர்ந்த துக்கம் யாது என்று விசாரிக்க அவனுடைய புதல்வன் ஓடி வந்தான். 'மகனே! பார், இது என் கதி' என்று மைந்தன்மீது கை வைத்தான். அவனும் பொன்னுய் மாறிவிட்டான். பின்பு தேவதையைப் பார்த்து கதறியழுது இந்த வரத்தைத் திருப்பி எடுத்துக்கொள் என்று பரிந்து வேண்டினுன். பெருமிதமாகப் பணம் படைத்தவர்களுடைய கதி இதுவே. மனித இயல்பெல்லாம் அவர்களை விட்டுப் பறந்தோடி விடுகிறது. பணப்பைத்தியம் ஒன்றே எஞ்சி நிற்கிறது. இதை சர்வ காலமும் உலகில் நாம் கண்டு வருகிறோம். ஆதலால் உலக மக்கள் பெரும்பான்மையோர் நேசித்து ரசவாதவித்தைக்கு அலைந்திடுவர் என்று தாயுமானுர் இயம்புகின்றுர்.

தீர்க்காயுள் படைத்தவனுக ஒரு மனிதன் வாழ்ந்திருக்கிருன். வாழ்நாளில் பெறவேண்டிய இன்பங்களையெல்லாம் அனுபவித்துக் கொண்டே வருகிருன். காலமும் ஓயாது அவனுடைய ஆயுளை அளந்து கொண்டே போகிறது. உடல்

வாழ்க்கைக்குக் கடைசியில் தேய்வு என்பது வருகிறது. முன்பு திட்பம் வாய்ந்திருந்த மனிதன் இப்பொழுது தொண்டு கிழவன் ஆய்விட்டான். உடலின் உயரமே சிறிது குறைந்து போய்விட்டது. அதில் வளைவும் ஏற்பட்டுவிட்டது. கழியின் உதவி கொண்டு தள்ளாடி நடக்கின்றான். கண் மங்கி விட்டது. காது சிறிது அடைத்துப் போய்விட்டது. ஆயினும் அம்மனிதனுக்கு வாழ்வில் வைத்திருந்த பற்றுதல் போகவில்லை. உண்மையில் அம்மனிதன் நெடிதுவாழ்ந்தாய் விட்டது. உடல் தேய்ந்து போய்விட்டது. இந்திரியங்கள் வலிவற்றுப் போய்விட்டன. இதுவே வாழ்வைப்பற்றிய விந்தை.

உடல் வாழ்க்கையை வளர்ப்பதற்கு உபாயம் ஒன்று உண்டு, அதைத்தான் காயகற்பம் என்பர் சான்றோர். காயகற்பத்தைப்பற்றி சித்தர்கள் வெவ்வேறு பாங்குகளில் பகர்ந்திருக்கின்றனர். உடல் அழிந்துபட்டுப் போகாது பாதுகாப்பதற்கு ஏற்ற ஔஷத வகைகள் இருக்கின்றன. முறையாக அவைகளைக் கையாண்டால் உடலில் இளமை வந்துவிடும். மூப்பும் நரையும் மாறிவரும். புதிய உடல் எடுத்திருப்பது போன்று எழில் உண்டாய்விடும். இதைப் பற்றிக் கேள்விப்படுகின்ற கிழவர்களுக்கு இதில் ஆசை மிக வந்துவிடுகிறது. தங்களுடைய காயங்களை முறையாக ஔஷதங்களை ஏற்றுப் பாதுகாத்து அதன்கண் கற்பத்தை உண்டுபண்ணிவிட வேண்டுமென்கிற அவா அவர்களுக்கு வந்துவிடுகிறது. அதற்காக அவர்கள் கையாளவேண்டிய சிகிச்சை முறைகளும், பயிற்சி முறைகளும், வாழ்க்கைத் திட்டங்களும் மிகக் கடினமானவைகள் என்றாலும் படாத பாடுபட்டு அம்முறைகளை அனுஷ்டிக்க அவர்கள் முன் வருகின்றனர். அதில் வெற்றியடைபவரைப் பொதுவாக நாம்

காண்பதில்லை. பண்டொரு காலத்தில் யாரோ சிலர் அங்ஙனம் காயகற்ப முயற்சியில் வெற்றி பெற்றிருந்தார்கள் என்று கேள்விப்படுகின்றோம். அத்தகையவர்களுடைய உடல் வாழ்க்கை இன்றைக்கு நம் கண்ணெதிரே இல்லை. எனினும் மக்கள் அதில் பெருமோகம் கொள்கின்றனர். உடல் வாழ்க்கையில் வைத்த வாஞ்சையே அதற்குக் காரணமாகும். இதையெல்லாம் தொகுத்து நெடுநாள் இருந்த பேரும் நிலையாகவே இன்னும் காயகற்பம் தேடி நெஞ்சு புண்ணுவர் என்று தாயுமானவர் இயம்புகிறார். போலி வைத்தியன் ஒருவன் காயகற்பம் தனக்குத் தெரியுமென்று பகர்வானாகில், அவன் பின்னே செல்லுதற்குப் பலபேர் காத்துக்கொண்டிருக்கின்றனர்.

இங்ஙனம் விதவிதமான ஆசைகளுக்கு மக்கள் ஆளாகின்றனர். அவ் ஆசைகளை நிறைவேற்றுவதற்கு கணக்கற்ற முயற்சிகளில் அவர்கள் முந்துகின்றனர். அங்ஙனம் அவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சிகளின் முடிவுதான் என்ன என்று ஆழ்ந்து ஆராய்ந்து பார்த்தால் மற்ற உயிர்களுக்குச் சொந்தமாயுள்ள சில இயல்புகள்தான் இத்தகைய பேராசைக்காரர்களிடத்திலும் எஞ்சியிருக்கின்றன என்பது வெளியாகும். எல்லா உயிர்களும் ஏதேனும் ஒரு விதத்தில் வேண்டியவளவுக்கு உணவு உண்கின்றன. அப்படி அருந்திய பிறகு அவைகள் நிம்மதியாகப்படுத்துத்தூங்குகின்றன. விழித்தெழுந்ததும் பழையபடி புசிப்புக்கு அலைந்திடுதலேயாம். பேராசைக்காரர்களுடைய பகீரதப் பிரயத்தனங்களும் இப்படித்தான் முடிவடைகின்றன. அவர்களுடைய நிலையை எல்லாம் யோசிக்கும் வேளையில் பசிதீர உண்பதும் உறங்குவதுமாக முடியும் என்கின்றார் தீர்க்கதரிசியாகிய தாயுமானவர்.

பல பிறவிகளில் பேராசைக்கு உட்பட்டு நாய் போன்று அலைந்து திரிந்து, தேவையில்லாதவைகளையெல்லாம் தேடி எடுத்து, அதனல் ஒரு பயனையும் அடையாது தோல்வியுற்ற வர்கள் கடைசியாகக் கற்றுக்கொள்ளவேண்டிய பாடம்ஒன்று இருக்கின்றது. அப்பாடத்தை உள்ளதே போதும் என் கின்ருர் தாயுமானவர். இது மிகமிக எளிய பாடம். ஆனல் அதைக் கற்றுக்கொள்ளுதற்குப் பிறவிகள் எத்தனை, பெரு முயற்சிகள் எத்தனை, பெருந் துன்பங்கள் எத்தனை! அங் ஙனம் அலைந்தான பிறகு இவ் எளிய பாடம் உள்ளத்தில் பதிகிறது. பொருளையும், போகத்தையும், ஆயுளையும் வளர்க்கப் பெரும் பிரயத்தனம் எடுத்துக்கொண்ட மனிதன் புதியதாகப் பெற்ற பயன் ஒன்றுமில்லை ; உள்ளதே போதும் என்று அமைதியுற்றிருந்த மனிதன் அடைந்த நஷ்டமும் ஒன்றுமில்லை. உண்மையில் அமைதியுற்றிருந்த மனிதனுக் குத்தான் நலங்கள் அனைத்தும் எளிதில் வந்து வாய்த்தன. இப்பாடத்தைக் கற்றுக்கொண்டவனே ஞான வாழ்க்கையில் பிரவேசிக்கத் தகுதியுடையவனகின்ருன். சுவாசிக்கும் காற்றுக்காக யாரும் அலைந்து திரிவதில்லை. பருகும் நீருக் காகவும் யாரும் படாதபாடு படவேண்டியதில்லை. உண்ணும் உணவும் உயிர்களுக்கு அங்ஙனம் எளிதில் அகப்படுகின்றன. உயிர்கள் அனைத்தும் உண்டும் உறங்கியும் இன்புற்றிருக் கின்றன. மனிதன் ஒருவன் மட்டும் வீணே பேராசை பிடித்தவனக அலைந்து அல்லல்பட்டவன் ஆனன். அப்படி அல்லல் படும்படி அவனைத் தூண்டிய வேகம் ஒன்று அவன் உள்ளத்தில் உரு எடுத்திருந்தது. அந்த வேகத்துக்கு அகங்காரம் என்பது பெயர். தான் அல்லாததைத் தான் என்று எண்ணிக்கொள்வது அகங்காரம். அதற்குச் சொந்த மல்லாததைச் சொந்தமாக்க முயலுதல் மமகாரம். மனித

னிடத்துத் தோன்றியுள்ள அகங்காரம் தன்னைச் செல்வம் படைத்தவனுகவும், பெருமிதமான போகம் படைத்தவனுக வும், பதவிகள் படைத்தவனுகவும் செய்யும்படி அவனைத் தூண்டுகிறது. வாழ்க்கையில் ஒவ்வொரு படித்தரத்திலும் அகங்காரம் ஒரு புதிய வடிவம் எடுக்கிறது. நடுக்கடலில் தோன்றும் அலை கரையை வந்து சேருதற்கு முன்பு வழி நெடுக ஆங்காங்குப் புதிய வடிவங்களை அது எடுத்து வரு கிறது. இந்த அகங்காரம் மனிதனுக்குப் பல பிறவிகளை உண்டுபண்ணுகிறது. ஒவ்வொரு பிறவியிலும் அதற்குப் புதிய வேகங்கள் வந்து அமைகின்றன. இத்தகைய வேகங் களை உண்டுபண்ணுவது ஆசை. இக்கோட்பாட்டை நான் நான் எனக்குளறியே ஒன்றைவிட்டு ஒன்று பற்றி என் கின்றூர் தாயுமானவர். பொருத்தமற்ற பிதற்றலுக்கே குளறு தல் என்னும் பெயர் வருகிறது.

எது உயிர்களைக் கட்டிப் பிடிக்கிறதோ அது பாசம் என்று அழைக்கப்படுகிறது. மனிதன் மாடு ஒன்றைக் கயிறு கொண்டு கட்டி வைக்கிருன். கயிறு என்னும் பாசத்தில் மாடு கட்டுண்டு கிடக்கிறது. தான் விரும்பியபடி அது எங் கும் ஓடமுடியாது. அக்கயிறு கண்ணுக்குத் தென்படும் பாசம் ஆகிறது. மனிதனைப் பிறவிப் பெருங்கடலில் பிணித்து வைத்திருக்கும் பாசம் உண்டு. அது கட்புலனு காதது. அந்தப் பாசம் மனிதனுடைய மனத்தகத்து அமைந்து இருக்கிறது. மனிதனுடைய வளர்ச்சிக்கு அடிப் படையாய் இருப்பது ஆசை என்று ஏற்கனவே ஆராய்ந் தோம். உயிர்கள் அனைத்தினுடைய முன்னேற்றத்துக் குமே ஆசை மூலகாரணமாகிறது. முன்னேற்றத்துக்கு அது துணைபுரிகிறது என்ருலும் உடல் வாழ்க்கையில் உயிர் களைக் கட்டிப்பிடிப்பது அந்த ஆசையேயாம். உடல் வாழ்க் கையில் உயிர்கள் எத்தகைய வாஞ்சை வைத்திருக்கின்றன

என்பது சொல்லாமலே விளங்கும். அந்த வாஞ்சையின் விளைவாக உடல்களை உயிர்கள் மாற்றிக்கொண்டேபோகின்றன. ஆசை என்னும் பாசம் இருக்கும் வரையில் உடல்களை எடுப்பதற்கு ஒரு முடிவு இல்லை. இந்த ஆசை மனிதனை எப்படிப் பந்தப்படுத்துகிறது என்பது நமக்கு விளங்காதிருக்கலாம். ஒரு உதாரணத்தைக்கொண்டு நாம் அதை விளக்கமுயலுவோம். கயிறு என்னும் பாசம் இட்டு காளை ஒன்றை மனிதன் கட்டிப் பிடித்திருக்கிறான் என்று சொல்லுகிறோம். புறத்தோற்றத்துக்குக் காளை கட்டுண்டதாகத் தென்படுகிறது. ஆனால் அது கட்டுண்டு கிடப்பதைவிட அதிகமாக அதைப் பிடித்துச் செல்லும் மனிதன் கட்டுண்டு கிடக்கின்றான். கயிற்றை அறுத்துக்கொண்டு மாடு ஓடினால் அதற்கு மகிழ்ச்சி உண்டாகிறது. மாடு கை நழுவி ஓடிவிட்டதே என்று கட்டிப்பிடித்திருந்தவன் தான் கவலைப்படுகிறான். அதன்மீது வைத்திருந்த ஆசை இவனைக் கட்டி வைத்திருந்திருக்கிறது. இம்மனிதனை விட்டு விலகியதால் காளைக்குக் கவலையில்லை. காளை தன்னை விட்டுத் தப்பித்துக்கொண்டு ஓடிவிட்டதால் மனிதனுக்குக் கவலை. உண்மையில் கவலையில் கட்டுண்டு கிடப்பவன் மனிதன். அவன் கொண்டிருந்த ஆசை கவலையாக வடிவெடுத்தது. ஆக, அறுக்கமுடியாத பாசம் ஒன்று மனத்தகத்து மனிதனைக் கட்டிப் பிடித்துக்கொண்டிருக்கிறது. அந்தப் பாசம் இருக்கும் வரையில் இவன் பிறவிகளை எடுத்துக்கொண்டே போகவேண்டும். பிறவியோ பெருங்கடலாக விரிவடைந்து போகிறது. இப்பிறவிப் பெருங்கடலை நீந்துதல் மானுடப் பிறவியின் முடிவான நோக்கமாகும். இக்கோட்பாட்டை பாசக்கடற்குளே வீழாமல் என்று தாயுமானவர் இயம்புகின்றார்.

பாசம் போவதற்கு என்ன செய்யவேண்டும்? மனிதன் மனதை அகற்றிவிடக் கற்றுக்கொள்ளவேண்டும். மனதைத் துறக்க மனிதன் கற்றுக்கொண்டால் அவன் பெருநிலையை அடைந்துவிடுவான். மனதைத் துறப்பதுதான் செயல்களில் எல்லாம் மிகக் கடினமான செயல் ஆகிறது. மனதும் பாசமும் இணைபிரியாதவைகள். மனமிருக்குமிடத்தில் பாசம் இருக்கிறது; பாசம் இருக்குமிடத்தில் மனது இருக்கிறது. அது எப்படி என்று பார்ப்போம். மனதை ஒடுக்கி வைக்கும் நிலை ஒன்று நாள்தோறும் நமக்கு வருகிறது. அயர்ந்து தூங்குகிறோம். அப்பொழுது மனம் ஒடுங்கிக் கிடக்கிறது. ஒருவிதமான ஆசாபாசமும் அப்பொழுது நமக்கு இல்லை. நிம்மதி என்பதை அயர்ந்த உறக்கத்தில் காண்கின்றோம். ஆனால் உறக்கத்தில் ஒடுங்கிக் கிடக்கும் மனது விழிப்பு அடைந்ததும் பழையபடி தனது செயல்களில் ஈடுபடுகிறது. அதன் செயல்கள் எல்லாம் இதுகாறும் இயம்பியுள்ள ஆசாபாச சொரூபமாய் அமைந்திருக்கின்றன. கனவிலும் மனது ஆசை வடிவெடுத்துக் கூத்தாடுகின்றது; நனவிலும் அது ஆசை வடிவெடுத்துக் கூத்தாடுகிறது. கனவைக் கட்டியாள நமக்கு இயலுவதில்லை. நனவில் மனதைக் கட்டியாள ஓரளவு நமக்கு இயலுகிறது. நனவிலே மனதை முற்றிலும் கட்டியாள நாம் கற்றுக்கொண்டால் அது மிகப் பெரிய பாடம் ஆகிறது. விழித்திருந்து நாம் வியவகாரங்கள் செய்கின்றபொழுது ஆசையை அடக்கிப் பழகுவோமானால் மனதினுடைய வேகமும் அதற்கேற்றபடி அடங்கிவிடுகிறது. நாம் புரிகின்ற ஆத்ம சாதனங்கள் அனைத்தும் மனதைக் கட்டி அடக்குதற் பொருட்டேயாம்.

விருப்பு வெறுப்பு ஆகிய இரண்டுவித செயல்கள் வாயிலாக மனது தன்னைத் தோற்றுவித்துக்கொள்கிறது.

ஆசையின் விளைவாகவே உயிர்கள் அனைத்தும் முன்னேற்றம் அடைந்து வருகின்றன என்று நாம் ஏற்கனவே ஆராய்ந்தோம். அந்த ஆசைதான் விருப்பமாக வடிவெடுக்கிறது. தனக்குப் பொருந்தாதவைகளிடத்து மனது வெறுப்புக் கொள்கிறது. இங்ஙனம் விருப்பு வெறுப்பு மயமாக மனது வடிவெடுத்து வருகிறது. மானுட நிலைக்கு வரும் பரியந்தம் உயிர்க்கு விருப்பும் வெறுப்பும் பயன்பட்டன. இனி, தெய்விக நிலைக்குப் போக முயலும் மனிதனுக்கு விருப்பும் வெறுப்பும் இடைஞ்சல்கள் ஆகின்றன. இவ்விரண்டையும் அகற்றுதலே ஆத்ம சாதனமாகிறது. இவை அகன்றுபோன இடத்து மனதும் அற்றுப்போய் விடுகிறது. இனியவைகளும் இன்பம் தருபவைகளும் ஆத்ம சாதகனுக்கு வந்து வாய்க்குங்கால் அவைகளிடத்து அவன் விருப்புக்கொள்ளாதிருந்து பழகவேண்டும். வேறு சில வேளைகளில் இன்னாதவைகளும் துன்பத்தை விளைவிப்பவைகளும் தாமாக வந்து வாய்க்கின்றன. அப்பொழுது அவைகளிடத்து ஆத்மசாதகன் வெறுப்புக் கொள்ளலாகாது. அமைதியான நிலையில் இருந்து கொண்டு துன்பத்தைப் பொறுத்துக் கொள்ளவேண்டும். பொறுமையின்மூலம் துன்பம் நிராகரிக்கப்படுகிறது. இன்பம் துன்பம் இரண்டும் மனம் கொள்ளுகிற எண்ணத்தை முன்னிட்டு உண்டானவைகளாம். இன்பத்தையும் துன்பத்தையும் சமனாகக் கருதிப் பழகி வருகின்றபொழுது மனதின் செயலுக்கு வேகம் குறைந்துவிடுகிறது. இன்பத்தையும் துன்பத்தையும் பிரித்து உணருகிற வேற்றுமை உணர்வே அகன்று போய்விட்டால் அது மனது அகன்று போனதுக்குச் சமானமாகிறது. செயலற்ற மனது அழிந்து போனதுக்கு ஒப்பாகிறது. இதை ஒரு உபமானத்தைக்கொண்டு விளக்குவோம். ஒரு மனிதன் செயலற்று உயிர் வாழ்ந்திருக்கின்றான். மற்

ஞெரு மனிதன் செத்துப்போய்விட்டான். இருவருக்குமிடை யில் அதிக வித்தியாசம் இல்லே. செயலற்று ஜடம் போன்று கிடப்பவன் செத்துப் போனவனுக்குச் சமானம். மனதை செயலற்றதாக்குதலே அதை அழித்துவிடுவதற்கு உற்ற உபாயம்.

செயலற்ற மனதையும் செயல்புரிகிற மனதையும் இனி இன்னெரு உபமானத்தைக்கொண்டு அறிந்துகொள்ளுதல் அவசியமாகிறது. கடலினின்று நீர் ஆவியாக மேலே போகிறது. அது கண்ணுக்குத் தென்படுவதில்லே; தோன்ரு நிலேயில் இருக்கிறது. பின்பு அதே ஆவி மேகமாக மாறு கிறது. அது கார்மேகம், வெண்மேகம், செம்மேகம் இப்படி யெல்லாம் வடிவெடுக்கிறது. பகலில் சூரியனேயும், இரவில் சந்திரனேயும் நக்ஷத்திரங்களேயும் மறைத்து விடுகிற இயல்பு இந்த மேகத்துக்கு வந்துவிடுகிறது. அது தூய ஆவியாக இருந்தபொழுது சூரியனேயோ, சந்திரனேயோ மறைக்க வில்லே. மேகமாக மாறுதல் என்னும் செயலில் ஈடுபட்ட பிறகே பிரகாசம் நிறைந்த அப்பெரிய கோளங்களே யெல் லாம் மேகம் மறைத்து விட்டது. இந்த மேகத்துக்கு ஒப் பானது விருப்பு வெறுப்பு வடிவெடுத்துள்ள மனது. அத் தகைய மனது அதற்கு ஆதாரமாய் இருக்கும் ஆத்ம சொரு பத்தை மறைத்துவிடுகிறது. மேகத்துக்கு ஆதாரமாய் இருப்பது வெட்டவெளி. வெட்டவெளியில் தோன்றிய மேகம் சூரியனுக்கும், சூரியனுக்கு அப்பாலும் இருக்கிற வெளியைத் திரை போட்டது போன்று மறைத்து விடுகிறது. ஆத்ம சொருபத்தில் தோன்றியுள்ள மனது அங்ஙனம் ஆத்ம சொருபத்தையும், ஆத்மப் பிரகாசத்தையும் மறைத்து விடுகிறது. இந்த மனதை செயலற்றது ஆக்கிவிடுகின்ற பொழுது அது உருவற்றது ஆகிவிடுகின்றது. மனதின் நடு நிலே என்பதும் அதுவே.

நடுநிலையில் இருக்கும் மனது தூயமனது. நடுநிலையி லிருக்கும் நீராவி தூய நிலையில் இருக்கிறது. வானத்தை யும், சந்திர சூரிய நட்சத்திரங்களையும் காண்பதற்கு தூய நீராவி இடைஞ்சல் ஆவதில்லை. அதே பாங்கில் மனது தூயநிலைக்கு வந்துவிடுமானால் ஆத்ம தரிசனத்துக்கு அது இடைஞ்சல் ஆவதில்லை. விருப்பு வெறுப்பு என்னும் சலன மற்று மனது நடுநிலைக்குப் போய்விடுமானால் அது மனதி னுடைய தூய நிலை. பரிசுத்தநிலை என்பதும் அதுவே. ஒவ்வொரு பொருளும் அல்லது தத்துவமும் தன்னுடைய மூல ஸ்தானத்தில் தூய நிலையில் இருக்கிறது. மூல ஸ்தானத்தை விட்டு நிலை பெயர்க்கப்படுகின்ற பொழுது அது அழுக்குக்கு ஒப்பாகிறது. நீர் தன்னளவில் தூயது. பால் தன்னளவில் தூயது. ஆனால் தூய நீரைத் தூய பாலில் கலக்கினால் பின்பு பால் தூயது என்று பகரப் பெறுவதில்லை. ஏனென்றால் நீர் தான் இருக்கும் இடத்தைவிட்டு நிலை பெயர்ந்து பாலினுள் போய்க் கலந்ததே அதற்குக் காரண மாகும். மனது அங்ஙனம் தான் இருக்கவேண்டிய இடத் தில் நிலைபெற்றிருக்கின்ற பொழுது அது பரிசுத்தமானது. மனது என்கின்ற பெயரும் அப்பொழுது அதற்குப்பொருந் தாது. மனது ஆத்ம சொருபத்திலேயே விருப்பு வெறுப் பற்று ஆனந்தத்தில் அடங்கிக்கிடக்குமாகில் அது தன் மூல ஸ்தானத்தில் இருப்பதாகிறது. இந்த நிலையைத்தான் மனதற்ற பரிசுத்த நிலை அருள்வாய் என்று தாயுமானவர் விண்ணப்பிக்கிறார்.

நமது மனதே உலகத் தோற்றத்துக்கு மூல காரணமா கிறது. தூக்கத்தில் மனது ஒடுங்கியிருக்கின்றபொழுது உலகத் தோற்றம் நமக்கு இல்லை. கனவிலும் நனவிலும் மனது செயல் புரிகின்றபொழுது கனவு உலகமும், நனவு

உலகமும் நமக்கு வந்து விடுகின்றன. நனவில் மனதைக் கெட்ட நிலையில் வைத்திருக்கின்றபொழுது உலகே கேடு நிறைந்ததாக நமக்குத் தோன்றுகிறது. மனதை நாம் பண் படுத்திக்கொண்டு போகப் போக உலகக்காட்சி நல்லதாக நமக்கு மாறுகிறது. குழந்தைகளுக்கும் சிறுவர்களுக்கும் உலகம் நல்லதாகத் தோன்றுவதற்குக் காரணம் அவர்களு டைய மனதின் தூய நிலையேயாம். மனது முற்றிலும் பண் பட்டுவிடுகின்ற பொழுது இவ்வுலகமே பொன்னுலகமாக நமக்குக் காட்சி கொடுக்கும். இம்மனதை நாம் அடியோடு ஆத்ம சொரூபத்தில் ஒடுக்கிவிட்டால் பிறகு எல்லாம் கடவுள் சொரூபமாக நமக்கு விளங்கிக் கொண்டிருக்கும். இதுதான் நமக்குச் சொந்தமாயுள்ள பரிசுத்த நிலை. மனதின் கூத்தாட்டத்தால் இப்பரிசுத்த நிலையினின்று நாம் வழுவிய வர்களாய்ப் பிரபஞ்சத்தையும் அதன் வியவகாரத்தையும் காண்கின்ற கீழ்நிலைக்கு நாம் வந்திருக்கிறோம். இம் மனதை ஒடுக்கி நமக்குச் சொந்தமாயுள்ள கடவுள் சாக்ஷாத்காரம் என்னும் தூய நிலைக்குத் திரும்பிப்போவது நமது வாழ்க் கையின் குறிக்கோள். பரிபூரணனந்தப் பெரும் பொருளே, ஆசை மயமாய் இருக்கும் மனதை அகற்றி இப்பெருநிலையை எனக்குத் தந்தருள்வாய் என்று தாயுமானவர் விண்ணப்பிக் கின்றார். அவர் பகர்ந்துள்ள கோட்பாடுகள் அனைத்தையும் மேற்கூறிய அவருடைய பாடல் படம் பிடித்துக் காட்டு கிறது.

# தர்ம சக்கரம்

## மாத சஞ்சிகை

ஆசிரியர் சுவாமி நித்தியானந்தர்

1952 ஜனவரி முதல் வெளிவந்துகொண்டுள்ளது

| | ஆண்டு சந்தா | தனி இதழ் |
|---|---|---|
| உள்நாடு | ரூ. 10-00 | ரூ. 1-00 |
| வெளிநாடு | ரூ. 15-00 | ரூ. 1-50 |

ஆண்டுதோறும் சந்தா செலுத்திப் புதுப்பிப்பதற்குப் பதிலாக ரூபாய் நூறு டிபாசிட் செய்துவிட்டால் தொடர்ந்து மாதந்தோறும் பத்திரிகை வந்து கொண்டிருக்கும். பத்திரிகை வேண்டாம் என்று கருதும்பொழுது டிபாசிட் செய்த முழுத்தொகையாகிய ரூபாய் நூறையும் திரும்பப்பெற்றுக்கொள்ளலாம். டிபாசிட் முறை வெளிநாட்டுக்கு இல்லை. விபரத்திற்கு எழுதக்கோருகிறோம்.

**ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்**

***திருப்பராய்த்துறை-639 115***

***திருச்சி ஜில்லா***

## ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் இயற்றிய நூல்கள்

| | | |
|---|---|---|
| திருவாசகம்-மூன்றும் பதிப்பு பிரசார விலை | ரூ. | 14-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை-பதினொன்றும் பதிப்பு பிரசார விலை | ... | 12-00 |
| ஞானயோக விளக்கம் | ... | 8-00 |
| ராஜயோக விளக்கம் | ... | 8-00 |
| கர்மயோக விளக்கம் | ... | 7-00 |
| பக்தியோக விளக்கம் | ... | 6-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | ... | 4-00 |
| விவேகானந்த உபநிஷதம் | ... | 4-00 |
| கடவுளின் வடிவங்கள் | ... | 4-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்-I | ... | 3-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்-II | ... | 3-50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்சரி ஆறும் பதிப்பு பிரசார விலை | ... | 2-75 |
| தினசரி தியானம்-பதிமூன்றும் பதிப்பு (பிளாஸ்டிக் உறையுடன்) பிரசார விலை | ... | 2-75 |
| கண்ணன் என்னும் கடவுள் | ... | 2-00 |
| **தாயுமானவர் இயற்றிய** | | |
| கருணாகரக்கடவுள் ஷை | ... | 2-00 |
| மௌனகுரு வணக்கம் ஷை | ... | 1-50 |
| பரசிவ வணக்கம் ஷை | ... | 0-50 |
| சந்நியாசி | ... | 1-25 |
| பஜனைப் பாடல்கள் | ... | 1-25 |
| குழந்தைகளின் களிக்கூடம் | ... | 1-00 |
| இராவணத் தத்துவம் | ... | 1-00 |
| சகோதரி நிவேதிதை | ... | 1-00 |
| ஹரிச்சந்திரன் (நாடகம்) | ... | 1-00 |
| காயத்ரீ | ... | 1-00 |
| வாலிமோக்ஷம் (நாடகம்) | ... | 1-00 |

| | | |
|---|---|---|
| அறம் வளர்த்த நம்பி | ரூ. | 0-95 |
| நோய்க்கு இடம் கொடேல் | ... | 0-80 |
| நன்மக்களைப் பெறுதல் | ... | 0-80 |
| தானவீரன் கர்ணன் (நாடகம்) | ... | 0-80 |
| பாண்டவ கௌரவ பெருமை (நாடகம்) | ... | 0-80 |
| பாதுகா பட்டாபிஷேகம் (நாடகம்) | ... | 0-75 |
| இறை வணக்கம் | ... | 0-75 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா ? | ... | 0-75 |
| பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி கர்வபங்கம் (நாடகம்) | ... | 0-65 |
| பிரஹ்லாதன் (நாடகம்) | ... | 0.65 |
| இந்துமதமும் கிருஸ்துவ மதமும் | ... | 0-60 |
| சைவன் யார் ? | ... | 0-50 |
| மார்க்கண்டேயன் (நாடகம்) | ... | 0-40 |
| தபோபலன் (நாடகம்) | ... | 0-40 |
| வர்ணாச்ரம தர்மம் | ... | 0-30 |
| அருள் விருந்து 1 முதல் 18 வரை ஒவ்வொன்றும் | ... | 0-30 |
| பரசுராமர் கர்வபங்கம் (நாடகம்) | ... | 0-15 |
| The Bhagavad Gita (8th Imp.) | ... | 15-00 |
| The Indian National Education | ... | 8-00 |
| Sri Lalithambika Sahasranama Stotram | ... | 8-00 |
| Ramakrishna Lives Vedanta | ... | 5-00 |
| Facets of Brahman or The Hindu Gods | ... | 5-00 |
| Daily Divine Digest (with plastic cover) | ... | 4-50 |
| Mahabharata (with plastic cover) | ... | 4-50 |
| Ramayana (do) | ... | 4-00 |
| The Man Making Message of Vivekananda (with plastic cover) | ... | 3-00 |
| The Bhagaved Gita (Small Size) (with plastic cover) | | 3-00 |
| Sri Vishnu Sahasranama Stotram | ... | 2-50 |
| Holy Bible—In the Light of Vedanta | ... | 1-50 |